# பழையகோட்டை மரபு

## (கொங்குப் பண்பாட்டு அடையாளம்)

ஆசிரியர்
புலவர். **செ. இராசு** எம்.ஏ.,பிஎச்.டி.,
முன்னாள் தலைவர்
கல்வெட்டு, தொல்லியல் துறை
தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

வெளியீடு

# எங்களுரை

"கொங்கர் குலக் கோமான்" "கொங்கு நாட்டு அதிபர்" "கோவேந்தர் போற்றும் ஆவேந்தர்" என்றெல்லாம் பலவாறாக புகழ்ந்து கூறப்பட்டவர்கள் பழையகோட்டைப் பட்டக்காரர்கள்.

நீண்ட நெடிய வரலாறு படைத்தது பழைய கோட்டை. ஏறக்குறைய ஐம்பது புலவர் பெருமக்கள் அவ்வப்போது பாடிப் பரவிய பல நூறு பாடல்கள் கல்வெட்டு, செப்பேடு, ஓலைப் பட்டயங்கள் எல்லாம் அவர்களின் பன்முக வரலாறு பேசுகின்றன.

கொங்கு வரலாறாகவே வாழ்ந்த அம்மாபெரும் மரபின் விரிவான வரலாறு ஒன்று தொகுக்க வேண்டும் என எண்ணியவர் அமரர் ந. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள். 4.10.1949 அன்று பரம்பரைக் கருணீகர் மரபில் வந்த திரு.ஓ.எஸ். சடையபிள்ளை அவர்களிடம் இதைப்பற்றிக் கூறினார்கள்.

திரு. சடையபிள்ளை அவர்கள் மிக அரிதின் முயன்று பல ஏடுகளில் தம் முன்னோர்கள் எழுதிப் பல இடங்களில் இருந்தவற்றை ஒன்றாகத் தொகுத்தார்கள். முன்பு ஏடுகளைப் பலரிடம் கொடுத்தார்கள். வாங்கிச் சென்றவர்கள் யாரும் பதிப்பிக்கவில்லை. ஏடுகளைத் திருப்பித் தரவும் இல்லை. விசாரித்தால் அவர்களைப் பற்றிய தகவலும் இல்லை.

"புலவர்கள் ஓலையில் சுவடியில் வரைந்தது
புரிந்துகொள முடியாததால்
இங்கிதனை யேநல்ல அச்செய்த்தாய்ப் பதிப்பித்து
இனியபுத் தகரூபமாய்
எல்லோரு மேபடித்து இன்புறச் செய எண்ணி
ஏடுகள்எலாம் கொடுத்தோம்
வாங்கியே சென்றவர்கள் ஒன்றுமே செயவில்லை
வரவுமிலை அவ்வேடுகள்
வகை இதை வினாவலாம் என்னிலோ அவர்கள் இவ்
வையகத் தேயும் இல்லை"

என்று கூறுகிறார் திரு.ஓ.எஸ். சடையபிள்ளை.

கள்ளிப்பட்டி அமரர் க.கு. கோதண்டராமகவுண்டர் அவர்கள் ஓ.எஸ். சடையபிள்ளை தொகுத்தவற்றையெல்லாம் பெற்று பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் அவர்களிடம் கொடுத்தார்கள்.

1964 ஆண்டு பெற்ற அவைகளை 1.3.1965 அன்று "பழைய கோட்டைப் பட்டக்காரர் நாட்டுப்பாடலும் பூர்வ பட்டயமும்" என்ற பெயரில் வெளியிட்டார்கள். காலம் கருதிப் பேராசிரியர் அவர்கள் நீண்ட ஆராய்ச்சி முன்னுரை எதுவும் எழுதாமல் பாடல்களை மட்டும் அப்படியே அச்சிட்டார்கள். பாடல் வடிவிலேயெ அவை இருந்ததால் பலர் அவைகளின் பொருளையும், சிறப்பையும், பெருமையையும் அறிய வாய்ப்பில்லாமல் போயிற்று.

அந் நூலைப் பல முறை படித்ததில் அவற்றில் பழையகோட்டையின் பன்முக மாட்சி வெளிப்பட்டது. கல்வெட்டு, செப்பேடு, ஓலை ஆவணங்கள் பல புதியதாகக் கிடைத்தன.

அவற்றைத் தொகுத்து பழையகோட்டையின் முழு வரலாற்றை எழுதுமாறு பணித்தவர்கள் இன்றைய பழையகோட்டைப் பட்டக்காரர் திருமிகு. ந. ராஜ்குமார் மன்றாடியார் அவர்கள். திருமிகு அ. சிவக்குமார் மன்றாடியார் அவர்களும் இதனைச் செய்ய விருப்பம் தெரிவித்தார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இந்நூலைப் படிப்போர் பழையகோட்டையின் பன்முக மாட்சிகளைத் தெரிந்து கொள்ளும் வண்ணம் பல்வேறு உரிய தலைப்புக்களில் செய்திகள் எளிய முறையில் தொகுப்பட்டுள்ளன. பழையகோட்டைக்கு இது ஒரு கலைக்களஞ்சியம்.

பிற்காலத் தமிழ்நாட்டில் பெண்பாற் புலவர்களே இல்லை. அக்குறையைப் பழைய கோட்டை மகளிர் வள்ளியாத்தாள் அவர்களும், வஞ்சியாத்தாள் அவர்களும் நிறைவு செய்வது தமிழ் இலக்கிய வரலாற்றில் புதிய செய்தியாகும். அவர்களின் குதிரைச்சவாரி பெண்ணிய வரலாற்றில் ஒரு புதுமையாகும்.

கொங்குச் சமுதாயத்தின் வரலாறு, பண்பாடு, சமூகம், சமயம், மொழி, கால்நடை, வேளாண்மை, கொடை இவைகளின் ஒப்பற்ற அடையாளச் சின்னமாக, பாரம்பரியமிக்க கொங்குச் சமூகத்தின் தலைமைப் பீடமாக விளங்கிய பழையகோட்டைக்குக் கொங்கு ஆய்வுமையத்தின் நன்றிக் காணிக்கையாக இதனைப் படைக்கின்றோம்.

தொடர்ந்து வெளியிட இருக்கும் கொங்கு வேளாளர் கல்வெட்டுக்கள், கொங்கு வேளாளர் செப்பேடுபட்டயங்கள், கொங்கு வேளாளர் வரலாறு ஆகியவைகளையும் கொங்கு உலகம் வரவேற்றுப் போற்றும் என நம்புகிறோம்.

இங்ஙனம்,

புலவர் செ. இராசு, எம்.ஏ., பிஎச்.டி.,
0424 - 2262664

டாக்டர் கொங்கு.என். கொளந்தசாமி,
94430-06666
0424 - 2257810

கொங்கு ஆய்வு மையம்,
64\5. டி.பி.ஜி. காம்ளெக்ஸ்,
புதிய ஆசிரியர் குடியிருப்பு அருகில்,
ஈரோடு 638 011.



காணிக்கை

பழைய கோட்டை

௨௬ ஆம் பட்டக்காரர்

ராயபகதூர் ந. நல்லதம்பிச் சர்க்கரை

உத்தமக் காமிண்ட மன்றாடியார்

அவர்களுக்கு

(188௪ – 1949)

# பழைய கோட்டை மரபு



"ஆவேந்த ராகி அன்பாய்க் கொடியோங்க
மூவேந்தர் போற்ற முடிசூடி – நாவேந்தர்
பாட்டில் வரைந்த பழந்தமிழ்ப் பாடல்களாய்
ஏட்டில் எழுதினேன் இன்று"

– செ. இராசு

# கொங்கில் காங்கய நாடு

கொங்கு நாடு:

தமிழ்நாடு சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு போலக் கொங்கு நாட்டையும், தொண்டை நாட்டையும் சேர்த்து முன்பு 5 பகுதிகளாக விளங்கியது. "வியன் தமிழ்நாடு ஐந்து" "தமிழ் மண்டிலம் ஐந்து" என்ற தண்டியலங்காரம், திருமந்திரத் தொடர்கள் இதனை விளக்கும்.

சங்க இலக்கியங்களில் பல இடங்களில் கொங்கு, கொங்கர் சிறப்பாகக் குறிப்பிடப் பெறுகின்றனர். வரலாற்று ஆசிரியர்கள் பலரும் கொங்கு நாடு தனி நாடு என்றே கூறுகின்றனர்.

எல்லைகள்:

வடக்கே பெரும்பாலை, தெற்கே பழனி வைகாவூர், மேற்கே வெள்ளியங்கிரி மலை, கிழக்கே குளித்தலை ஆகிய நான்கு எல்லைக்குட்பட்டது கொங்கு நாடு. கிழக்கே கோட்டைக்கரை, தெற்கே பன்றி மலை, மேற்கே வாளையாறு என்று கூறும் ஆவணங்களும் கிடைத்துள்ளன.

வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு
குடக்குப் பொருப்பு வெள்ளிக் குன்று - கிடக்கும்
களித்தண் டலை மேவும் காவிரி சூழ் நாடு
குளித்தண் டலையளவு கொங்கு"

என்பது பழம் பாடல்.

கொங்கு நாடு தென் கொங்கு - வடகொங்கு, மேல் கொங்கு, கீழ் கொங்கு என்ற நான்கு பிரிவுகளை உடையது. கீழ்கொங்கு நாட்டை மழகொங்கம் என்றும் வழங்குவர்.

24 நாடுகள்:

நிருவாக வசதிக்காகக் கொங்கு நாட்டை 24 உள் நாடுகளாகப் பிரித்தனர். பிற்காலத்தில் தாராபுரம் சூழ்ந்த நாடு 12, டணாயக்கன் கோட்டை சூழ்ந்த நாடு 6, சங்ககிரி துர்க்கமாகிய குன்றத்தூரைத் தலைநகராகக் கொண்டு 12 நாடுகள் ஆக 42 நாடுகளாகப் பிரிந்தன. அடிப்படை 24 நாடுகள்.



1. பூந்துறை நாடு
2. தென்கரைநாடு
3. காங்கய நாடு
4. பொங்கலூர் நாடு
5. ஆறை நாடு
6. வாரக்க நாடு
7. திருவாவிநன்குடி நாடு
8. மணநாடு
9. தலைய நாடு
10. தட்டைய நாடு
11. பூவாணிய நாடு
12. அரைய நாடு
13. ஒடுவங்காடு
14. வடகரை நாடு
15. கிழங்கு நாடு
16. நல்லுருக்கா நாடு
17. வாழவந்தி நாடு
18. அண்ட நாடு
19. வெங்கால நாடு
20. காவடிக்கா நாடு
21. ஆனைமலை நாடு
22. இராசிபுர நாடு
23. காஞ்சிக்கோயில நாடு
24. குறுப்பு நாடு

என்பன அவை.

காங்கய நாடு:

கொங்கு 24 நாடுகளில் காங்கய நாடு மூன்றாவதாகத் திகழுகிறது. கொங்கு நாட்டின் நடுநாயகமாகத் திகழுவது காங்கய நாடு. காங்கயம் என்ற தலைமை பெற்ற ஊரால் இந்த நாட்டுக்குப் பெயர் அமைந்தது. காங்கயம் என்ற பெயர் ஏற்பட்டமைக்குப் பல காரணங்கள் கூறப்படுகிறன்றன.

1. கொங்கு வேளாண்குல மக்கள் பலருக்குக் காங்கய நாடே பூர்வீகக் காணியாக உள்ளது. எனவே கங்கைல (கங்காகுல) வேளிருக்கு உரியதாகையால் இந்நாடு காங்கயம் எனப் பெயர் பெற்றது. கங்காகுலத்தார் நாடு காங்கய நாடு.

2. சங்க காலத்தை அடுத்து இரட்டர், கங்கர் போன்ற அரச மரபினர் கொங்கு நாட்டை ஆட்சி செய்தனர். அவர்கள் தலைநகர் ஸ்கந்தபுரம், ஸ்கந்தன் - கந்தன் - முருகன், முருகனுக்கும் காங்கேயன் என்ற பெயர் உண்டு. ஸ்கந்தபுரம் தான் காங்கயம்.

3. நாடோடி மக்கள் நிலையாக கயம் (நீர்நிலை) அமைத்து முதலில் தங்கிய ஊர் காங்-கயம் ஆயிற்று. (காங்கேயம் இலக்கிய வழக்கு) இது ஆய்வாளர்கள் கருத்து.

4. காங்கய நாட்டுக்குரிய தலைமைத் தலம் சிவன் மலை. சிவன் மலையில் கங்கைமைந்தன் காங்கேயன் எழுந்தருளியுள்ளார். அதனால் ஊரும் நாடும் காங்கேயம் ஆயிற்று.

5. சிங்கமுகாசுரன் வீரமகேந்திரபுரிக்குச் செல்லும்போது இங்கு தங்கி வழிபட்டான். அதனால் இவ்வூருக்குச் சிங்கபுரம் என்று பெயர் ஆயிற்று. சிங்கபுரம் - சிங்கை எனப்பட்டது. காங்கயம் பட்டக்காரர் சிங்கைச் சிதம்பரப் பல்லவராயர் எனப்பட்டார்.

6. சுப்பிரமணியர் சூரனையும், சிங்கமுகாசுரனையும் வென்று வள்ளியைச் சிவன் மலையில் மணம் செய்து கொண்டார். முருகன் ஆகிய காங்கயனுக்குரியது காங்கயம்.

7. அகத்தியர் இங்கு வந்து சிவபெருமானை வணங்கும் போது இங்கு செண்பக மரக் காடுகள் அதிகமாக இருந்தன. அதனால் இவ்வூருக்குச் "செண்பகபுரம்" என்று பெயர் ஆயிற்று. சிவன் அகத்தீசுவரர் எனப்பட்டார்.

8. பிற்காலக் கங்க மன்னன் சீய கங்கன் ஆண்ட காரணத்தால் இவ்வூர் சிங்கை ஆயிற்று.

என்று பலவாறு காங்கயத்தின் பெயருக்கும், வேறு பெயருக்கும் காரணம் கூறுவர்.

காங்கயத்தின் சிறப்பு:

காங்கய நாடு எட்டுத்திக்கிலும் புகழ் உடையது. கொங்கு 24 நாடுகளில் பல சிறப்பினை உடையது. இரவலரை ஆதரிப்பது. கலைகள் வளர்ந்த நாடு, பட்டக்காரர்கள் மூவர் முடிசூடி ஆண்ட நாடு, சிவன் மலையில் தேர்சிறக்கும் நாடு, 14 செல்வம் மிக்க ஊர்களையுடையது. வீரமிக்க நாடு, மலைகளும், ஆறுகளும் செழிக்கும் நாடு என்கிறார் ஒரு புலவர்.

அட்டதிசை எங்கணும் அறு நான்கு நாட்டினும்
அதிபவிசு பெற்ற நாடு
அரதேசி பரதேசி பசியாற எந்நாளும்
அன்னம் பகர்ந்த நாடு



கட்டுள்ள குலமாதர் நடன சங்கீதமும்
வரிசைபல பெற்ற நாடு
வாகையுடன் நாட்டார்க்கு மணிமுடி சூட்டியே
வந்தரசு பெற்ற நாடு
திட்டமுள சத்தி சிவ மலைவே லவர்க்குத்
திருத்தேர் நடத்து நாடு
செம்மையுள பதினான்கு கிராம நாட் டாருக்கும்
செல்வம் சிறந்த நாடு
கட்டுமுடி தவறாது வெட்டிச் செயங் கொண்டு
கனபவிசு பெற்ற நாடு
கனசென்னி மலைகாஞ்சி ஆன்பொருநை சூழ்கின்ற
காங்கய நன் னாடு தானே!

என்பது அவர் பாடல்.

சிவன் மலைக் குறவஞ்சி கூறும் வளம்:

ஓடக் காண்பது மாநதி நீர்கள்
உயரக் காண்பது வீதியில் தேர்கள்
தேடக் காண்பது தான தர்மங்கள்
செழிக்கக் கண்டது தேவத் தலங்கள்
ஆடக் கண்டது அன்னக் கொடிகள்
அதிரக் காண்பது முரசு துடிகள்
பாடக் கண்டது கீதங்கள் யாரும்
பகரும் காங்கய நாடெங்கள் நாடே!

முத்து ரத்தினம் விளைவுள்ள நாடு
முனிவர் வேள்வி வளங்கண்ட நாடு
சத்திர சாலை மிகுந்துள்ள நாடு
தடந்தொறும் தண்ணீர்ப் பந்தலுள நாடு
நித்திய மங்கள கலியாண நாடு
நிறைந்த செல்வம் சிறந்துள நாடு
மெத்த வீரம் விசயம் புகழும்
விளங்கும் காங்கய நாடெங்கள் நாடே!

மறையவர்க்கும் மெய்ஞ்ஞானியர்க்கும் கவி
வாணருக்கும் சிறந்திடும் தேவர்க்கும்
குறைவில்லாமல் அனங்கொடுப்போம் எனக்
கூர்ந்து மேழித் துவசங்கள் கட்டிய
நிறைந்த செல்வம் சம்பத்துள்ள வேளாளர்
நீதி மன்னர்க்கு மாமுடி சூட்டவே
இறைகுடிகள் எண்ணாயிரம் கோத்திரம்
இருக்கும் காங்கய நாடெங்கள் நாடே!

முப்பெரும் தலைவர்கள்:

தமிழ்நாட்டில் சேரர், சோழர், பாண்டியர் மூவேந்தர்கள் மும்முடி சூடி நல்லாட்சி புரிந்தது போலக் காங்கய நாட்டிலும் பொருளந்தை முழுக்காது குலக் காடையூர் காங்கேய மன்றாடியார், பயிரகுலக் காரை ஆனூர்ச் சர்க்கரை மன்றாடியார், செங்கண்ண குலக் காங்கயம் பல்லவராயர் ஆகிய மூன்று பட்டக்காரர்கள் முடிசூடிச் சிறப்பாக ஆட்சி புரிவது காங்கய நாடு.

"தங்கக் கட்டியும் தந்தியின் குட்டியும்
தரள மோகன மாலையின் பெட்டியும்
முன்கை கட்டியே நெஞ்சம் பறை கொட்டி
முடிமன்னர் தினம் கப்பங்கள் கட்டியும்
எங்கும் ஈட்டிய விருதுகள் கொட்டியும்
யானை பன்னிரு கடகங்கள் கட்டியும்
கொங்கை மெட்டியே இம்முடி சூடிய
குமர காங்கேயர் நாடெங்கள் நாடே!
சாமத் துரோக எதிரியர் மிண்டன்
தக்க சொட்டை முனைவலர்க்குக் கண்டன்
தாய்முதுகில் கவிஞோர்கள் ஏறிச்
சவுக்கிலே அடி போடப் பொறுத்துமே
நாமிந்தப் புலவோர்க்குத் தொண்டன் எனும்
நல்ல தம்பிச் சர்க்கரை உத்தமக்
காமிண்ட மன்றாடி மன்னன் கீர்த்தி
கதிக்கும் காங்கய நாடெங்கள் நாடே!



நிதம் பரப்பிய தானதர் மங்களும்
நீதி சற்றும் வழுவாது வழங்கும்
புதன் பெருகிய புத்தியும் கல்வியும்
பூசு ரர்க்குச் செயும் உப சாரமும்
இதம் பரவு சிவபூசை நேசமும்
யாவர்க்கும் உபகாரங்க ளேசெயும்
சிதம்பரப் பல்லவேந்திரன் அரசு
செலுத்தும் காங்கய நாடெங்கள் நாடே!

பதினான்கு ஊர்கள்:

வரலாற்றுச் சிறப்பும், சமயச் சிறப்பும், பழம் பெருமையும், புகழும், பெருமையும், மேன்மையும் பொருந்திய காங்கய நாட்டில் பதினான்கு தொன்மையான ஊர்கள் உள்ளன.

1. காங்கயம்
2. வள்ளியறச்சல்
3. காடையூர்
4. பட்டாலி
5. கீரனூர்
6. பார்ப்பதி
7. பரஞ்சேர்வழி
8. காரையூர்
9. மருதுறை
10. முத்தூர்
11. கண்ணபுரம்
12. வெள்ளகோயில்
13. ஆறு தொழு
14. ஆலாம்பாடி

இதனைக் காங்கய நாட்டுப் பாடல்,

காங்க யத்துடன் வள்ளிதென் காடையூர்
கந்தர் மேவிய பட்டாலி கீரனூர்
ஓங்கு பார்ப்பதி நற்பரஞ் சேர்வழி
உற்ற காரை மருதுறை வெண் முத்தூர்
தேங்கு கண்ணபுரம் வெள்ளை கோயிலும்
சிறந்த ஆறு தொழு ஆலாம் பாடியும்
தீங்கு இலாத கங்காகுல நாட்டார்
செழிக்கும் காங்கய நாடெங்கள் நாடே!

குறுப்பு நாட்டில் தென்கரைக் கொடுமணலும், காங்கய நாட்டில் படியூரும் மணிக்கற்கள் கொழித்து பாசி, மணிகள் செய்து ரோம் நாட்டுக்கு விற்றன. நொய்யல் நதிக்கரை நாகரிகம் பழம்பெருமையுடையது. வணிகச் சிறப்பும் செல்வ வளம் மிக்கிருந்த நாடு. புராணமும், இலக்கியங்களும் செய்த புலவர்கள் நிறைந்த நாடு. கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், ஓலைப் பட்டயங்களும் உடைய வரலாற்றுச் செல்வம் மிக்க நாடு. வீரமும், ஈரமும், தீரமும் மிக்க நாடு காங்கய நாடு. கொங்கு நாடெங்கும் பரவியுள்ள பல பகுதிக் கொங்கு வேளாளர்கட்குக் காங்கயமே பூர்வீகக் காணி,சமயச் சிறப்பும், சமூக நீதியும் காத்த நாடு. கொங்கு மக்களைக் கண்போலக் காத்த நாடு. தமிழக வேந்தர்கள் பலரும் மதித்துப் போற்றிய நாடு காங்கய நாடு.

காங்கய நாட்டு ஊர்கள் எல்லாவற்றிலும் குலகுரு மடங்கள் சிறந்திருந்தன. இது வேறு நாட்டுக்கு இல்லாத சிறப்பாகும். காங்கய நாட்டார் தங்கள் நாட்டுக்கென்றே "பால் சாப்பிடும்" புலவராக பழனிமலைப் புலவர் மகன் சென்னிமலைப் புலவரை நியமித்தனர். (முன்பு கொங்கு வேளாளர்களின் திருமண வீடுகள் இறுதிச் சீராகப் புலவர் பால் பழம் சாப்பிடும் நிகழ்ச்சி நடைபெறும்)



## நத்தக்காடையூர்

பதினான்கு பழம்பெரும் ஊர்களைக் கொண்ட காங்கய நாட்டின் 8-ஆவது ஊராக நத்தக் காடையூர் விளங்குகிறது. செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் இவ்வூர் "காரையூர்" என்று வழங்கப் பெறுகிறது. காரையூர் என்பதை இலக்கிய வழக்கில் "காரை" என்று அழைப்பர். "காரை" என்பதே பழம் பெயராக இருக்கலாம். பட்டில் என்பது பட்டிலூர் என்றும், அந்தி என்பது அந்தியூர் என்றும், பட்டாலி என்பது பட்டாலியூர் என்றும் ஆனதைப் போல "காரை" என்ற பெயர் ஊர் என்ற அடைமொழி பெற்றுக் காரையூர் என அழைக்கப் பெறுகிறது என்றும் கொள்ளலாம்.

சில இடங்களில் காரையூர் என்பது முதல் குறுகிக் கரையூர் என்றும் வழங்கப் பெறுகிறது. ஆற்றங்கரையில் தோன்றிய ஊர் கரை - கரையூர் என அழைக்கப்பட்டிருக்கலாம். காவிரிக் கரையில் உள்ள கொங்குத் தலமும், கரையூர் எனப்பட்டது. "கரையூரில் பாண்டிக் கொடுமுடி" என்பது தேவாரம்.

"உற்ற காரை" என்று காங்கய நாட்டுப் பாடலில் கூறப்பட்டுள்ளது. "செல்வமிகு காரையூர்" தண்ணார்ந்த காரையூர்" "அரசர் புகழ் தென்காரை" "தேங்கு புகழ்க் காரையூர்", "தண்டார் நிறை காரையூர்" "நற்காரையூர்" எனப் பலவாறு இலக்கியங்களில் புகழ்ப்பெறும் பெருமை உடையது. 1621-ஆம் ஆண்டுக் கல்வெட்டின் மூலம் மேல் காரையூர், கீழ்காரையூர், பெரிய காரையூர் என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது எனத் தெரிகிறது.

காரையூருக்குத் "திரிபுவனமாதேவிபுரம்" என்ற சிறப்புப் பெயரும் வழங்கப்பட்டுள்ளது. சோழர் ஆட்சியில் இவ்வூர் மிகச் சிறப்புடன் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. செயங்கொண்ட சோழனாகிய முதலாம் இராசராசன் பெயரால் செயங்கொண்ட சோழீசுவரம் - செயங்கொண்டேசுவரர் என்று சிவன் கோயிலுக்குப் பெயர் ஏற்பட்டுள்ளது.

காரையூரோடு சேர்ந்த கிராமங்கள் எல்லாம் "காரையூர்" சுற்றுக் கிராமம் என அழைக்கப்பட்டது. கன்னிவாடிக் கண்ணர் குலப்பட்டயத்தில் "நத்தக்காரியூர்" என்று குறிக்கப்பட்டுள்ளது. அவ்வையார் பாடல் ஒன்றில் "பழையனூர்க் காரி அன்றீந்த களைக்கொட்டும்" என்ற தொடர் வருகிறது. பழையனூர் என்பது பழைய கோட்டை என்றும், "காரி" கரியான் சர்க்கரையின் முன்னோராக இருக்கலாம் என்றும் ஒரு கருத்து உண்டு. சங்க கால வள்ளல் காரி வழிவந்தவராக அவர் இருக்கக் கூடும்.

செயங்கொண்டீசுவரர் கோயிலின் வடபுறம் உள்ள அரச மரத்து விநாயகர் கோயில் படியில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டொன்றில் காரையூர் நகரம் என்று காணப்படுகிறது. நகரம் என்பது வணிகர்கள் நகரமாகும். கொங்கு நாட்டு ஒன்பது வணிக நகரங்களில் காரையூர் ஒன்று. பாண்டிய நாட்டு இராம நாதபுரம் மாவட்டம், பிரான்மலையில் கூடிய 13-ஆம் நூற்றாண்டு வணிகக் குழுவின் கூட்டத்தில் கொங்கு நாட்டிலிருந்து கலந்து கொண்ட வணிகர்களில் "காரையூர் கிழவன் தேவனான ஐயாறன்" என்பவன் ஒருவனாகக் குறிக்கப்பட்டுள்ளான்.

செயங்கொண்டீசுவரர் கோயில் கல்வெட்டுக்களில் இரண்டு கல் வெட்டுக்களில் காரையூர் வணிகர்கள் குறிக்கப் பெறுகின்றனர்.

"ஸ்வஸ்தி ஸ்ரீநற்காவிரி நாட்டு காரையூரான திரிபுவனமாதேவி புரத்தில் இருக்கும் வியாபாரி பிச்சன் அடைக்கலவன் பந்தி ஒன்றால் உத்திரம் மூன்றும் போதிகை நாலும்"

"ஸ்வஸ்தி ஸ்ரீகாரையூர் வியாபாரி நக்கன் மோடன் இட்ட பந்தி ஒன்றால் உத்திரம் மூன்றும் போதிகை நாலும்"

என்ற கல்வெட்டுக்கள் கோயில் திருப்பணியில் பங்கு கொண்ட வணிகர்களைக் குறிக்கிறது.

காரையூரைப் பழைய கோட்டைப் பட்டக்காரர்கட்கு அளித்த காரையூர்ச் செப்பேட்டிலும் "செட்டிகள்" முதன்மையும் அழகன் சர்க்கரை பெற்றதாக கூறப்படுகிறது. மெக்கன்சி தொகுத்த 1807 ஆம் ஆண்டைச் சேர்ந்த பழைய கோட்டை ஆவணத்தில் "கிராமத்தில் வர்த்தகர்கள் கொண்டு வரப்பட்ட பல தினுசுகளுக்கு மேலும், பலபட்டறை சாதிகளுக்கு உள்ள மங்கு வரி முதலான மகமைகளும்" பட்டக்காரர்கட்கு உரிமையானதாகக் கூறப்படுகிறது. இன்றும் திருப்பூர் தாயம்பாளையம் செட்டியார்கள் நத்தக்காடையூர் கோயிலுக்கு வருவதைத் தங்கள் கடமையாகக் கொண்டுள்ளனர்.

காரையூர்ச் செப்பேட்டில் காரையூர்க் காணியை பயிர குலத்தார் பெற்ற விபரம் கூறப்படுகிறது.

"நஞ்சராய உடையார் அவர்கள் நம்மை அனுப்பிவிச்சுக் கொங்கராயன் காரியம் மட்டுப்படுத்தினயானால் காரையூரிலே மணிய வெள்ளாளர் முதன்மை காச வேட்டுவர் முதன்மை செட்டியார் முதன்மை இந்த மூணு முதன்மையும் கூட்டி உனக்கே காரையூர் வணிதி சுத்தமாகக் கூட்டி ஒரு முதன்மையாகக்



கட்டளையிட்டோம்" என்று அழகன் சர்க்கரை காரையூரைப் பெற்ற விபரம் கூறப்பட்டுள்ளது. காரையூர்க் காணிப் பாடலில்,

"அரசர் புகழ் தென்காரையூர்
அதனில் வரு மணியனை
கியாதியுள்ள பயிரனை" என்று கூறுகிறது.

உ.வே. சாமிநாதய்யர் பழைய கோட்டையிலிருந்து எடுத்துச் சென்ற பூந்துறை நாட்டார் மேலோலையில் "கொங்கு மண்டலம் ராதாபுரம் சீமையில் காங்கய நாட்டில் சர்க்கரைக் கவுண்டர் சீமை காரையூர்" என்று கூறப்பட்டுள்ளது. கணக்கன் கூட்டத்தார் பட்டயத்தில் "காரையூர்க் கோட்டை" குறிக்கப்பெறுகிறது. காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயில் செப்பேட்டில் "பழைய கோட்டைக் காரையூர்" என்ற தொடர் வருகிறது.

காரையூர்க்குத் தனிக் கணக்கர்கள் இருந்துள்ளனர். "காரையூர் தலத்துக் கணக்கு நல்லய பிள்ளை மகன் சடையபிள்ளை" "காரையூர் தலத்துக் கணக்கு அரசபிள்ளை" "ஊர்க் கணக்கு பொங்காளிப் பிள்ளை மகன் சடையபிள்ளை" முதலிய பெயர்களைக் கொங்கு ஆவணங்களில் காணுகிறோம்.

ஆவணம் ஒன்றில் "பழைய கோட்டை நத்தக்காரர்கள்" என்ற குறிப்பைக் காணுகிறோம். நத்தம் என்பது ஊர் இருந்து அழிந்த பகுதியைக் குறிக்கும். பொது இடத்தையும் குறிக்கும். "ஊர் நத்தம்" நத்தப் புறம்போக்கு என்ற தொடர்களையும் காணுகிறோம். கொங்கு 24 நாட்டுப் பட்டயத்தில் "நத்தக் காரை" என இவ்வூர் குறிக்கப்படுகிறது. 26.1.1800 -இல் எழுதப்பட்ட நாரணபுரம் செப்பேட்டில்தான் முதல் முறையாக "நத்தக் காடையூர்" என்று குறிக்கப்படுவதைக் காணுகிறோம். காரையூர் மக்கள் நாவில் காடையூர் என எப்படியோ மருவி வழங்கப்பட்டு விட்டது. காங்கயத்துக்கு மேற்கே கோவைப் பெருவழியில் காங்கய நாட்டில் ஒரு காடையூர் இருப்பதால் அதிலிருந்து வேறுபடுத்திக் காட்ட "நத்தக் காடையூர்" என அழைக்கப்பட்டது போலும்.

காரையூர் தாய்க் கிராமம் என்பதாலும், காங்கய நாட்டு நிர்வாகத்தோடு தொடர்புடைய ஊர் என்பதாலும் முதன்மை இடம் பெற்றது. ஆனூரிலிருந்து அல்லது பழைய கோட்டையிலிருந்து அதிகாரம் செலுத்தினாலும் பட்டக்காரர்கள் காரையூரோடு தொடர்புபடுத்திப் பல இடங்களில் அழைக்கப்பட்டுள்ளனர்.

"சீர் உயரும் நற்காரை மன்னர்"
"காரைமன் கரியான் சர்க்கரை"
"சீர்மேவு காரையில் பெரிய சர்க்கரை"
"நற்காரையூரில் வளர் நல்ல சேனாபதி"
"காரையூர்ச் சர்க்கரை உத்தமக்காமிண்டன்"
"காங்கயநன் னாட்டில்வரு செயசொட்டை வல்லவன்
காரைநகர் தனில் உதித்தான்"

என்ற தொடர்களைப் பாடல்களில் காணுகின்றோம்.

ஆனூரில் கோட்டை கட்டி, அரண்மனை அமைத்து ஆனூர் அம்மனை வணங்கி ஆனூரில் வாழ்ந்தாலும் அந்த ஆனூர் காரையூரைச் சேர்ந்தது என்றே பலரும் தங்கள் பாடல்களில் பாடியுள்ளனர்.

"திருமருவு காரை ஆனூர்ப் பட்டம்
திகழ் பெரிய சர்க்கரை"
"கொங்ணில் காரை ஆனூர் எனப் பட்டமது
கொண்ட பயிரன் சர்க்கரை"
"காரை ஆனூர் மேவு காராள நல்ல தம்பி"
"காரை ஆனூர் தரும அரசெனும் விசுவநாதன்"

எனப் பட்டக்காரர்கள் குறிக்கப் பெற்றுள்ளனர்.

இதே போல ஆனூர் அம்மனும்
"நீதி மிகு காரை ஆனூர் வாழ் அம்பிகை" என அழைக்கப்பட்டார்.

பெரிய சர்க்கரை மனைவி வள்ளியாத்தாள் நயமாகத் தன் ஊர் ஆரியப்பட்டியை "ராகிபாளையம்" என்றும்தன் புகுந்த வீடு உள்ள காரையூரை "காரைப்பாளையம்" என்றும் குறித்துள்ளார். பழைய கோட்டை மரபில் வந்த சிலர் நத்தக்காடையூரிலும் நிர்வாகம் செய்துள்ளனர். இதனை

"பரம்பரையாக உள்ள மணியங்களில்
பழைய கோட்டை லாவணம் இவர்க்கு
தம்பி மகன் ஆனூர் சம்பந்தச் சர்க்கரைக்கு
தன் லாவணம் நத்தக் காரையூர்க்கே"

என்று பாடியுள்ளார் சடையபிள்ளை.



## பயிர குலம்

பயிரர் :

கொங்கு வேளாளர் குலங்களில் பயிர குலம் ஒன்று. அக்குலம் சார்ந்தவர்கள் பயிரன், பயிரர் என்று அழைக்கப்பெறுவர். உழவு செய்பவர் உழவன், நெசவு செய்பவர் நெசவன், தொழில் செய்பவர் தொழிலன் என வருவது போலப் பயிர் செய்பவர் பயிரர் அல்லது பயிரன் என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

கொங்கு வேளாளர்கள் குடிப்பெருமை கூற வந்த கொங்குமண்டல சதகம் கொங்கு வேளாளர்களின் சிறப்புக்கு எல்லோர்க்கும் உணவளிக்கும் உழவுத் தொழில் செய்வதுதான் காரணம் என மிகவும் சிறப்பித்துக் கூறுகிறது.

" உயர் மக்களின் சோர்வு அகற்றி
கூடும் பல உணவு ஊட்டும் வேளாளக்குடி"

என்பது சதகத்தின் வரிகளாகும். எனவே கொங்கு வேளாளர் அனைவருக்கும், உழவுத் தொழில் உரியது என்றாலும் அவருள் உழவுத் தொழிலில் மிகச் சிறந்தோர் 'பயிரர்' என்று அழைக்கப்பட்டிருக்கலாம். சில ஆவணங்களில் பயிர கூட்டம், பயிரங்கோத்திரம் எனவும் கூறப்படுகிறது.

உழவுசெய்முறை, பயிர்த்தொழில் நுட்பம், குறிப்பாகப் பயிர்கட்கு வரும் நோய்களை நீக்குதல், எருவின் பயன் ஆகியவற்றில் பயிரகுலத் தலைவர்களான பழயகோட்டைப் பட்டக்காரர் மரபினர் மிகச் சிறந்த முறையில் தேர்ச்சி பெற்று விளங்கினர். இதனைப் புலவர்கள் பலர் தங்கள் பாடல்களில் எடுத்துக் கூறியுள்ளனர்.

கொங்கு வேளாளரில் ஒவ்வொரு குலத்துக்கும் எந்தெந்த ஊர்கள் உரிமையுடைய காணியூர்கள் என்பதை நம் முன்னோர்கள் நன்கு திட்டமிட்டு வகுத்துள்ளனர். அவற்றைக் குறிக்கும் காணிப்பாடல்கள் ஐம்பது குலங்கட்கு மேல் கிடைத்துள்ளன.

பயிர குலத்தாரின் காணியூர்கள் பவுத்திரம், வெள்ளியணை, காரை ஆனூர், பரஞ்சேர்வழி, கூடலூர், வெள்ளோடு, கொன்னையாறு, புள்ளாநத்தம், திருமுக்கூடல், வயிரம்பள்ளி, கொடுமணல், பாலத்தொழு ஆகியவை என்று காணிப்பாடல் கூறுகிறது. அக்காணிப்பாடல்,

"மன்னு புகழ்கொண்ட மூவரசர் செங்கோல்
வழங்கிடும் நம் குடிவழி
வண்மைபெறு அந்நாளில் நற்குடிநாற்பத்தெண்ணாயிரம்
வகுப்புற்று வாழும் நாளில்

நன்மைய தாகிய பவுத்திரம் வெள்ளியணை
நற்காரை ஆனூரதும்
நலமைதிகழ் தென்பரஞ் சைப்பதியும்
நட்பான கூடலூரும்
தென்னுலவு வெள்ளோடு உயர்கொன்னை யாறுடன்
சேர்ந்த புள் ளாநத்தமும்
செய்யதிரு முக்கூடல் அண்டவள நாட்டியலுயர்
செல்வவயி ரம்பள்ளியும்
கன்னல்வயல் சேர்கின்ற கொடுமணல் பாலத்தொழு
காணிபெற் றே சிறந்திடும்
காராள ராமன் எனும் பயிரகுல மன்னவர்கள்
கதித்துவளர் காணியிவையே"

என்பதாகும்.

வெள்ளோடு பயிரகுலத்தாரின் முக்கியமான காணியூர். வடமுகம் வெள்ளோடு, தென்முகம் வெள்ளோடு என்ற இரு பிரிவுகளில் பயிர குலத்தார் வடமுகம் வெள்ளோட்டைச் சேர்ந்தவர்கள். வெள்ளோடு அண்ணன்மார் கோயில் வடமுகம் மூன்று பிரிவான கரையைச் சேர்ந்த சாத்தந்தை குலத்தாருக்கும், பயிர குலத்தாருக்கும் குலதெய்வக் கோயிலாகும்.

திருவாச்சிச் செப்பேட்டில் வெள்ளோடு பயிரகுல சென்னிமலைக் கவுண்டரும், பிடாரியூர்ப் பட்டயத்தில் வெள்ளோடு பயிரகுலப் பழனிக் கவுண்டரும் சிறப்புடன் குறிக்கப்பட்டுள்ளனர். வெள்ளோடு பயிர குலத்தார் பற்றிய பல பாடல்கள்



புதுப்பைப் புலவர் வழிவந்த கொடுமணல் தம்மரெட்டிபாளையம் நாச்சிமுத்துப் புலவர் வீட்டு ஏடுகளில் உள்ளன. அவை ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக உள்ளன. "கொடுமணல் இலக்கியங்கள்" என்ற தமிழக அரசு வெளியிட்ட நூலில் சில பாடல்கள் உள்ளன (1981):

வெள்ளோட்டில் வாழ்ந்த ஒரு பயிரகுலப் பெரியவர் பெரியண கவுண்டர். அவர் சிறந்த வள்ளல். புலவர்களை ஆதரிக்கும் புரவலர். அவர் மீது குந்தாணி சாமிநாதக் கவிராயர் "பெரியணகவுண்டன் குறவஞ்சி" என்ற மிகச் சிறந்த இலக்கியம் ஒன்றைப் பாடியுள்ளார். அந்நூல் இன்னும் அச்சாகவில்லை. முழுமையாக நல்ல நிலையில் உள்ள அதன் ஒரே ஓலைச் சுவடி ஈரோடு அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது. அந்த ஏட்டுச் சுவடியிலும் பயிர குலத்தார் காணியூர்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

பரஞ்சேர்வழி, பவுத்திரம், வெள்ளியணை, காரையூர், ஆனூர், கூடலூர், கொன்னையாறு, திருமுக்கூடல், அண்டவளநாடு, சேலம், வயிரம் பள்ளி, கொடுமணல், பாலத்தொழு, பிள்ளாநத்தம், வெள்ளோடு ஆகிய ஊர்களை அந்நூல் கூறுகிறது.

வெள்ளோடு பயிரகுலப் பெரியண கவுண்டர்,

"திதிக்கும் பரஞ்சேர் பதிபவுத் திரமும்
பணிதிகழ் வெள்ளியணை காரை யூரும்
தெளிவு ஆனூர் மிகு வெளி கூட லூரும்
வருகொன்னை யாறும் திருமுக் கூடலும்
அண்டவள நாடும் வண்டமிழ்ச் சேலம்
வயிரம் பள்ளியும் நயகொடு மணலும்
பாலத் தொழுவுடனே மேலுமை யான
பிள்ளா நத்தமும் வெள்ளோ டுடனே
சீர்பெறு காணி பேர்பெறப் படைத்து
நாற்றிசை புகழும் கீர்த்தி வாசகன்"

எனக் குறவஞ்சி நூலில் பாராட்டப் பெறுகிறார். பிற்காலத்தில் காணியூர்கள் பெருகின. 12, 13-ஆம் நூற்றாண்டில் "பேரூர் நாட்டு கோவம்புத்தூரான வீரகேரள நல்லூர்" காணியாளராக வீரசோழகங்கன் என்ற பயிரகுலம் பெரியவர் குறிக்கப்

பெறுகிறார். மற்றொரு செப்புப் படிமப் பொறிப்பு வடமுகம் வெள்ளோடு கிராமம் கொம்மக் கோயிலில் பயிர குலக் காணியாளர்கள் வாழ்வதாகக் குறிக்கிறது.

கொங்கு நாட்டில் ஏற்பட்ட பல சமுதாய ஒப்பந்தங்களில் பயிர குலப் பெருமக்கள் முன்னிலை வகித்து அவைகளை உருவாக்கியுள்ளனர். சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர். அவர்களில் முதல்வராக விளங்குபவர்கள் பழைய கோட்டைப் பட்டக்காரர்கள்.

<u>இலக்கியங்களில்</u>

இலக்கியங்களிலும், தனிப்பாடல்களிலும், பயிரகுலம், குறிக்கப்பெறும் இடங்கள் பல. விசயமங்கலத்தில் பயிரகுலப் பெரியவர் காளியணன் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு பயிர குலத் தலைவர். அவினாசி புக்கொளியூர்க் குளத்தில் சுந்தரர் முதலையுண்ட பாலனை வரவழைத்த அற்புதம் கண்ட அவர், அதற்காகத் தன்னைத் தியாகம் செய்து கொள்ள தன் வயிற்றைக் கிழித்துக் கொண்டார் என்று வாலசுந்தரக் கவிஞரின் கொங்கு மண்டல சதகம் கூறுகிறது.

"தயவுறு புக்கொளி முதலைவாய்ப் பிள்ளையைத் தாயின் முன்னே
துயரமும் தீர வரவழைத் தோட்டிய சுந்தரர்க்காய்ப்
பயிர குலாதிபன் காளியணன் மங்கைப் பரமனுக்கு
வயிறது கீறி நிலைகாட்டு வோன்கொங்கு மண்டலமே"

என்பது அப்பாடலாகும்.

பழைய கோட்டை மரபில் ஒரு பட்டக்காரர் பெயரே பயிரன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் என்பது (11).

"பிள்ளை சர்க்கரை மன்றாடி யார் சுதன்
பிரியமான பயிரநல் சர்க்கரை"

என ஒரு பாடல் அவரைப் பற்றிக் கூறுகிறது. அவருடைய மகன் பெரிய சர்க்கரை என்பதை,

"பயிரன் சர்க் கரையவர்கள் புதல்வ ரான
பண்புபெறு பெரியசர்க் கரையார் என்போர்"

என்ற பாடல் பகுதி கூறுகிறது.



பட்டக்காரர்களைப் "பயிரகுலச் சர்க்கரை" என்று சிறப்பிப்பது வழக்கம். கரியான் சர்க்கரையை

"பதினெட்டு முனைகட்டி எதிரிட்டு வருசொட்டை
பாருக்குள் வீரப்பனாம் பயிர குலச் சர்க்கரை"

என்று ஒரு புலவர் பாடுகிறார்.

காணிப் பாடல் பயிர குலத்தவர்களை

"காராள ராமன் எனும் பயிரகுல மன்னவர்கள்" என்று பாராட்டுகிறது. ஆனூரம்மன் கோயில் கல்வெட்டுப் பாடல்

"பயிரகுலப் பெரியோர்கள்" என்று கூறுகிறது.

"பிறங்கு பயிர குலம்"
" சொல்லும் வேளாளப் பயிர குலம்"
" காரை ஆனூரான் கனபயிர கோத்திரத்தான் "
" பயிர குலன் குவளைமார்பன் "

என்பன இலக்கிய வரிகளாகும்.

<u>வரலாற்று ஆவணங்களில்</u> :

கல்வெட்டு, செப்பேடு, ஓலைப் பட்டயங்கள் பலவற்றில் பயிர குலம் சிறப்புடன் குறிக்கப்படுகிறது. "கொங்குப் புலவர் பட்டயம்"

"படியளந்து உண்ணும் பயிரகுலம்"

என்று இக்குலத்தாரின் பெருமையைக் கூறுகிறது. பட்டக்காரர்களையும், இக்குலப் பெரியவர்களையும் கொங்கு நாட்டுச் செப்பேடுகளும், ஓலைப் பட்டயங்களும் மிக சிறப்புடன் குறிக்கிறது.

கோயமுத்தூர், கொம்மக்கோயில், நத்தக் காரையூர்க் கல்வெட்டுகளில் இக்குலம் குறிக்கப்படுகிறது.

"ஸ்வஸ்தி ஸ்ரீ விக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு பனிரண்டாவது
பேரூர் நாட்டுக் கோவம்புத்தூரான வீரகேரளநல்லூர்
ஆளுடையார் சங்கீஸ்வரமுடையார் கோயில் காணியுடைய
சிவப்பிராமணன் வீரநாராயண சைவ மாமுனியேன்
இவ்வூர் இருக்கும் வெள்ளாளர் பயிரரில் பாவநை
வீரசோழ கங்கன் பக்கல் நான் சந்தியா தீபம்
ஒன்றுக்கு கொண்ட அச்சு சந்திராதித்தவரை
குடங்கொண்டு கோயில் புருவார் செலுத்துவதாக
இது பன்மாகேஸ்வர ரட்சை"

என்பது கோயமுத்தூர் சங்கீஸ்வரமுடையார் கோயில் கல்வெட்டு. கொம்மக் கோயில் செப்புச் சிலைப் பொறிப்பு,

"ஸ்ரீ கலியுக சகாத்தம் 4928-க்கு மேல் செல்லா நின்ற சாலிய வாகன சகாத்தம் 1749-க்கு மேல் செல்லா நின்ற சர்வதாரி வருஷம் அப்பிசை மாதம் 10-ம் தேதி புதன் வாரமும் உத்தர நட்சத்திரமும் கூடிய அமிர்த யோகத்தில் கொம்மக் கோயில் வரதராசப் பெருமாள் வடமுகம் வெள்ளோடு பயிரகுலம் ராசாக் கவுண்டன் திருமலைக் கவுண்டன் சதா சேர்வை"

என்று கூறுகிறது.

நத்தக்காரையூர் செயங்கொண்டீசுவரர் கோயில் கல்வெட்டுக்கள் நான்கில் பயிர குலம் குறிக்கப் பெறுகிறது. அவை,

"வெள்ளாளன் பயிரர்களிர் உத்தமசோழக் காமிண்டன் கரியான் உத்தம
சோழக் காமிண்டன்"

"காங்கய நாட்டுக் காரை ஊரில் வெள்ளாளன் பயிரர்களில் கொங்கவேள் தரையர் இராட்சதப் பெருமாள்"



"காரை ஊரில் வெள்ளாளன் பயிரர்களில் விசுவநாதச்
சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்"

"காரை ஊர் (வெள்ளாளன் பயிரர்களில்)
வீரநாயனார் கொங்கவேள் தரையர், சிறுவப்பன்
கொங்கவேள் தரையர்

என்பன அக்கல்வெட்டுத் தொடர்கள்.

காரையூர்ப் பயிரகுலத்தார் புகழ் மிக்கவர்கள் என்கிறது காணிப் பாடல்.
காரையூர்க் காணிப்பாடல்,
"அரசர்புகழ் தென்காரையில்
அதனில் வரு மணியனை
கியாதியுள்ள பயிரனை"
என்று கூறுகிறது.

## பெயர் பெற்ற பேறு

பொதுவாகக் கொங்கு நாட்டுப் பாளையக்காரர்கள் வம்சாவளி எல்லாம் கொங்கு வேளாளர்கள் சோழநாட்டிலிருந்து கொங்கு நாட்டுக்குக் குடியேறியவர்கள் என்று கூறுகிறது. எல்லோரும் சோழமன்னன் மகள் சேர இளவரசனைத் திருமணம் செய்து கொண்டு தந்தையைச் சீதனம் கேட்டாள். நாற்பத்தெண்ணாயிரம் வேளாளர்களில் எட்டாயிரம் பேரைச் சீதனமாகக் கொடுக்கச் சேர நாட்டுக்கு வேளாளர்கள் வந்தார்கள். சேரனுக்குக் கொங்கன் என்னும் பெயர் உள்ளதால் அவர்கள் நாடு கொங்கு நாடு என்றும், அவர்கள் கொங்கர்கள், கொங்கு வேளாளர்கள் என்றும் அழைக்கப்பட்டார்கள் என்றும் கூறுகிறது.

ஆனால் பழைய கோட்டைச் சர்க்கரை மன்றாடியார் வம்சாவளி மட்டும் சோழ நாட்டிலிருந்து கொங்கு நாடு வர வேறு காரணம் கூறுகிறது.

"பூர்வத்தில் கலியுகம் வருஷம் 807 இதுக்கு மேல் சோழ ராசா துரைத் தனத்தில் ஆதொண்டச் சக்கரவர்த்தி நாளையில் தன்னுடைய தேசத்திலே இருந்த வேளாள சாதியிலே கலியாணம் பண்ண வேணும் என்கிறதாக எத்தனம் பண்ணுமிடத்தில் சம்மதிச்சு ராசாவை வரச்சொல்லி சகல சன்னாகத்துடனேயும் ராசா வந்த இடத்தில் பெண் நாயை அலங்கரிச்சுப் பந்தக்காலில் பிடிச்சுக் கட்டிப் போட்டு நாற்பத்தெண்ணாயிரம் கோத்திரத்து வேளாளர் சோழராசாவுக்கு விரோதமாகப் புறப்பட்டுச் சேர தேசாதிபதியிடத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

சேரனுக்குக் கொங்கன் என்னும் பேர் இருக்கிறபடியினாலே கொங்கு வேளாளர் என்னும் பேர் பெற்றுக் காங்கய நாட்டிலே இருக்கும் நாளையில்……." என்பது "சர்க்கரைக் கவுண்டர்" வம்சாவளிப் பகுதியாகும். அப்படி வந்தவர்கள் "உறந்தைப் பாக்கம்" என்ற ஊரிலே முதலில் குடியேறிப் பின் சோழர்களாலும் பாண்டியர்களாலும் ஆதரிக்கப்பட்டு தீரத்தாலும், வீரத்தாலும் முதன்மையும் காணிகளும் பெற்று காரையூர், ஆனூர்ப் பழங்கோட்டை, புதூர், செங்குளம் ஆற்றோர அரண்மனைப்புதூர் (பழைய கோட்டை) ஆகிய இடங்களில் வீற்றிருந்த கொங்கு நாட்டின் தலைமை ஏற்றுச் சீரும் சிறப்புடன் பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் என்ற பெயரோடு வாழ்ந்து வருகிறார்கள்.



பழைய கோட்டை மரபில் இதுவரை 27 பட்டக்காரர்கள் நீதி பரிபாலனம் செய்து பரம்பரை பரம்பரையாகத் தங்கள் புகழையும் பெருமையையும் நிலைநாட்டியுள்ளனர்.

1. அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
2. சொக்கன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
3. கரியான் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
4. சோமன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
5. அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
6. கரியான் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
7. அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
8. கரியான் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
9. பெரிய சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
10. பிள்ளை சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
11. பயிரன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
12. பெரிய சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
13. விசுவநாத சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
14. கந்தன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
15. பால சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
16. நஞ்சையன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
17. பெரிய சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
18. நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
19. கொற்றவேல் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
20. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
21. நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
22. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
23. நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
24. கொற்றவேல் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
25. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
26. நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்
27. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்

இயற்பெயராக அழகன், சொக்கன், கரியான், சோமன், பெரியன், பிள்ளை, பயிரன், விசுவநாதன், கந்தன், பாலன், நஞ்சையன், கொற்றவேல், நல்லதம்பி,

நல்லசேனாபதி ஆகிய பெயர்கள் அமைந்துள்ளன. பட்டக்காரர்கள் அனைவருக்கும் சர்க்கரை, உத்தமக் காமிண்டன், மன்றாடியார் என்ற பெயர்கள் பட்டப் பெயர்களாக வந்துள்ளன. இந்த சிறப்பு மிகு பட்டப் பெயர்கள் இவர்களுக்கு எப்படி வந்தது எனக் காணலாம்.

<u>சர்க்கரை</u> :

பழைய கோட்டைப் பட்டக்காரர்கட்கு "சர்க்கரை" என்ற பட்டப்பெயர் ஏன் வந்தது என்று ஒரு புலவர் வினா எழுப்பி விடை காண முயன்றார். சர்க்கரையின் தன்மை இனிப்புச் சுவையுடையது. அதுபோல் இனிமையானவர்களாக இருப்பதால் இவர்கள் "சர்க்கரை" என்று பெயர் பெற்றார்கள் என்று முடிவு கட்டுகிறார். யாருக்கு இனிமை தருகிறார்கள். உலகத்துக்கெல்லாம் அவர்கள் இனியவர்கள். நல்ல சொற்களை நயம்பட இனிமையாக உரைப்பதால் எல்லோருடைய செவிகளுக்கும் அவர்கள் இனியவர்கள். புலவர்கள் எவர் வந்தாலும் எப்பொழுது வந்தாலும் பசிவேளை என வந்தவர்களை இன்னொரு வேளை வா என்று சொல்லாமல் அப்பொழுதே அவர்கள் கவிகள் கேட்டு அக்கவிதைகட்கெல்லாம் பரிசுகள் தரும் இனியவர்களாக உள்ளனர். இப்படி யோசித்த புலவர் இதனை அழகிய வெண்பாவாகப் படைத்து விட்டார்.

"நற்காரை யூரில்வளர் நல்லசே னாபதிக்குச்
சர்க்கரையென் றோர் நாமம் சாற்றுவதேன் - மிக்க
புவிக்கும் செவிக்கும் புலவோர்கள் சொல்லும்
கவிக்கும் இனித்தருசி கண்டு"

என்பது அவர் பாடல். ஆம் சர்க்கரை போன்றவர்கள் சர்க்கரை எனப்பட்டனர்.

நான்காவது பட்டக்காரரான சோமன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் தான் பாடிய பாடலில் இக்கருத்தை உட்கொண்டே "இனிப்புப் பொடி" என்ற சொல்லைச் சிலேடையில் நயமாகப் பாடியுள்ளார். "சர்க்கரைக்குக் கனருசியுண்டாயிருக்கும்" என ஒரு பாடல் கூறுகிறது. இராமபிள்ளை "ஓதும் மதுரப்பொடி" என்கிறார். பழைய கோட்டை அரண்மனையிலும், கிராமத்திலும், சுற்று வட்டாரத்திலும் சர்க்கரையைச் சர்க்கரை என்று அழைக்கும் வழக்கம் அண்மைக் காலம் வரை நடைமுறையில் இல்லை. சர்க்கரை என்று கூறினால் பட்டக்காரர்கள் பெயரைக் கூறியதாக ஆகிவிடும் அல்லவா? (எட்டயபுரம் மன்னர் எட்டப்ப பூபதி. அவரை "எட்டு" எனச் செல்லமாக அழைப்பர். அதனால் எட்டயபுரம் பகுதியில் எட்டு



என்று சொல்ல மாட்டார்கள். அளக்கும்போது ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, மகாராசா, ஒன்பது என்று அளப்பார்களாம்).

சர்க்கரை என்ற சொல் உருவானதற்கு இன்னொரு காரணமும் கூறப்படுகிறது.

பழைய கோட்டைப் பட்டக்காரர்களின் பெயர் சர்க்கரை அல்ல. சக்கரை என்பதுதான். அது சர்க்கரை என்ற சொல்லின் சிதைவு அல்ல. சக்கரம் என்ற சொல்லே சக்கரை என்றாயிற்று என்பது மற்றொரு கருத்து.

தமிழ்நாட்டு அரசர்களின் தானைத் தலைவர்களைச் "சக்கரம்" என்று அழைப்பது உண்டு. முதல் குலோத்துங்க சோழனின் தளபதி கருணாகரத் தொண்டைமான். அவனைக் கலிங்கத்துப் பரணி "சோழன சக்கரமாம் கருணாகரன்" என்று சிறப்பிக்கிறது. அரசன் திருமாலின் அம்சம். அவரது சேனைத் தலைவர்களும் திருமாலின் சக்கரப்படை. திருமால் சக்கரத் தாழ்வாரை ஏவியே பகை அழிப்பார். சேனாபதி ஆகிய சக்கரத்தை ஏவியே சோழரும் பகை வெல்வது. எனவே, சேனாபதியைச் சக்கரம் என்று உருவகம் செய்வது மரபு. அமைச்சர், கலிங்கத்தில் படை நடத்திக் கருணாகரத் தொண்டைமான் வந்திருப்பதை அறிவிக்கும்போது

"தண்டு கொண்டு அவன் சக்கரம் வந்ததே"

என்று கூறுகிறார்.

பட்டக்காரர்கள் சர்க்கரை அல்லது சக்கரைமன்றாடியார் என்று அழைக்கப் பெறுகிறார்களே தவிர எவரும் (முதல்வர் உட்பட) "சக்கர மன்றாடியார்" என்று அழைக்கப்படுவதில்லை. சோழர், பாண்டியர், விஜயநகர அரசர்கட்காக இம்மரபினர் போர்க்களம் சென்று பகையொழித்துள்ளனர். எந்த மன்னரும் இவர்களைத் தங்கள் "சக்கரம்" என்று கூறவில்லை. இவர்களும் நாங்கள் அந்த அரசர்களின் "சக்கரம்" என்று கூறிக்கொள்ளவிலலை. 45-க்கு மேற்பட்ட புலவர்களின் பாடல்களில் எந்த இடத்தும் "சக்கரம்" என்ற சொல் பிரயோகம் இல்லை. சர்க்கரையை - சக்கரை என்று கூறுவது வழக்கமே (பார்க்கலாம் - பாக்கலாம், வார்க்கலாம் - வாக்கலாம்).

கவிஞர்கள் கூற்றும், சர்க்கரை மரபினரின் பாடலும் "சர்க்கரை" என்பதையே ஆதரிக்கிறது. எனவே நாமும் சர்க்கரை என்றே அழைப்போம். இனிமை பெறுவோம்!

<u>உத்தமக் காமிண்டன்</u>

சோழவேந்தர் ஆட்சிக் காலத்தே கொடும்பாளூர் வேளிர் போல சர்க்கரை மரபினரும் சோழருக்குப் படைத்தலைமை பூண்டு விளங்கினர். உத்தமசோழன் காலத்தில் ஒரு சர்க்கரை மரபினர் சோழர்க்காகப் போரிட்டு வெற்றிவாகை சூடினர்.

அதனால் மகிழ்ந்த உத்தமசோழன் தன் பெயரையே சர்க்கரை மரபினர்க்குப் பட்டமாக அளித்தான். இவ்வாறு அரசர்கள் தங்கள் உயர் அலுவலர்கட்குத் தங்கள் பெயரைச் சிறப்புக் கருதிக் கொடுப்பது வழக்கம்.

கொங்குமண்டல சதகப் பாடல்.
"இத்தரை மீதினில் சேனா பதியாய் இருந்து வெற்றி
ஒத்து வரப்பெற்ற தற்காத் தனக்கு இங்கு உறுபெயராம்
"உத்தம சோழன்" என்று அன்பாத் தரப்பெறும் ஓங்குபட்ட
வர்த்தனர் வாழ்வுறும் ஆனூர் திகழ்கொங்கு மண்டலமே"
என்று இதனைக் கூறுகிறது.

நத்தக் காரையூர் செயங்கொண்டீசுவரர் கோவில் கல்வெட்டில் "உத்தம சோழக் காமிண்டன்" என்ற பெயர் பொறித்த கல்வெட்டு உள்ளது.

பாப்பிணி பச்சோட்டு ஆவுடையார் கோயிலில் உள்ள பாடல் கல்வெட்டில் "உரங்கொண்ட காரைமன் உத்தமச் சோழன்" என்ற தொடர் பயின்று வருகிறது. எனவே, "உத்தம சோழன்" என்ற பட்டமும் சர்க்கரை மரபினருக்கு உண்டு என்று தெரிகிறது.

இப்பட்டம் பெற்றதற்கு மற்றொரு காரணமும் கூறப்படுகிறது. சுந்தரபாண்டியன் பொருட்டு அவனுக்கு எதிரியாகிய உத்தமக்காச் சோழனை சர்க்கரை மரபினர் வென்ற காரணத்தால் "உத்தம சோழனை வென்றவன்" என்ற கருத்தில் பாண்டியனால் தரப்பட்ட பட்டம் "உத்தமக்கா மிண்டன்" என்று கூறப்படுகிறது.



"ஆனூர் புரக்கவும் விக்கிரமக் கோட்டை அழிக்கச் சொட்டை
வீனூர் புரக்கவும் உத்தமச் சோழனை வென்றன் என்று
தானூர் புரக்கின்ற சர்க்கரை பாண்டியன் தந்தபட்டம்
வானோர் புரக்கக் கலிதடுத் தான்கொங்கு மண்டலமே"
என்பது அதைக் குறிக்கும் கொங்கு மண்டல சதகப் பாடல் ஆகும்.

இக்கருத்துப்படி "உத்தமக்கா+ மிண்டன்" என்று பெயர் அமைகிறது. ஆனால் சர்க்கரை மரபினர் பெயர் "உத்தமக் காமிண்டன்" என்பது தானே தவிர "உத்தமக்கா மிண்டன்" என்பது அல்ல.

"காமிண்டன்" என்பதுகிராமத் தலைவர்கட்கும், காப்பாற்றுவதில் வல்லவன் என்ற பொருளிலும் வழங்கிய பெயர். கொங்கு நாட்டுக் கல்வெட்டுக்களில் "வீரசோழக் காமிண்டன்" "சிங்க காமிண்டன்" என்ற அமைப்பில் பல பெயர்கள் வருகின்றன. காமிண்டன் என்ற சொல்லே "கவுண்டன்" "கவுண்டர்" என மாறியது என்பதனை அறிகின்றோம்.

அண்மையில் கிடைத்த தூக்கநாயக்கன் பாளையம் செப்பேட்டில் "கவுண்டு" "கவுண்டிக்கை" என்ற சொற்கள் அதிகாரம் என்ற பொருளில் வருகிறது.

எனவே "உத்தம சோழன்" "காமிண்டன்" என்ற இரண்டு பட்டங்களும் இணைந்து "உத்தமசோழக் காமிண்டன்" என்ற பட்டப் பெயரே "உத்தமக் காமிண்டன்" என்று மாறியது என்று கொள்ளலாம்.

<u>மன்றாடியார்</u>

"மன்று" என்றால் நீதிமன்றம். ஊர் மன்றமான நீதிமன்றத்தில் இடம்பெற்று நீதி வழங்குபவர் அல்லது வழக்குத் தீர்ப்பவர் "மன்றாடி" என்று அழைக்கப்பட்டனர். "பழைய மன்றாடி போலும்" என்று சேக்கிழார் பெரிய புராணத்துள் குறிக்கின்றார். கல்வெட்டுக்களிலும் "சண்ட பராக்கிரம மன்றாடி" "சதுர்வேதி மங்கலத்து மன்றாடி" என்ற பெயர்களைக் காணுகின்றோம்.

கால்நடைகள் பராமரிக்கின்ற தலைவர்கட்கும் "மன்றாடி" என்ற பெயர் வழக்கில் உள்ளது.

"விட்டபசு முட்டாமல் மேய்த்தடக்கிப் பாசத்தால்
கட்டி விடும் மன்றாடி"

என்பது திருவிளையாடல் புராண வரிகள் ஆகும்.

"திரு உயரும் நற்காரை மன்னவன் கொங்கில்உள
திரி எட்டு நாட்டினுக்கும்
தீராத சச்சரவு சாதி மத வாதுகள்
தினம் தீர்த்து வைக்கும் இறைவன்"

என்பதால் சமூக நீதி செலுத்தும் நீதிபதிகளாக மன்றாடியார் இருந்துள்ளனர் என்பதை அறிகிறோம். கொங்குச் சமுதாய மக்களும், அவர்கள் குடிபடைகளும் தங்கள் வழக்குகளைப் பழைய கோட்டை வந்து பட்டக்காரர்கள் ஆணைப்படி தங்கள் வழக்குகளைத் தீர்த்துக் கொள்வது இன்றும் நடைமுறையில் உள்ளது.

எல்லாப் பட்டக்காரர்களும் பல புலவர்களால் பாடப்பட்டுள்ளனர். பட்டத்தில் வீற்றிருந்து அதிகாரம் செலுத்திய பட்டக்காரர்களேயல்லாமல் அவர்களுடைய தம்பிமாரும், மக்களும் புலவர்களால் புகழ்ந்து பாடப் பெற்றுள்ளனர். அவர்கள் பல ஊர்களில் தங்கி விவசாயம் செய்தாலும் பழைய கோட்டை அரண்மனையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டேயிருந்தனர் என்று தெரிகிறது.

சொக்கன் சர்க்கரையார் தம்பி குமார சர்க்கரையார்
கரியான் சர்க்கரையார் தம்பி மேலப்பாளையம் தீர்த்தகிரி
சின்னமலைக்கவுண்டர்
பெரிய சர்க்கரையார் தம்பி கொடுமணல் செந்திவடிவேல் கவுண்டர்
பயிரன் சர்க்கரையார் தம்பி கண்ணுச்சாமி என்ற குமாரரத்தினக் கவுண்டர்
பால சர்க்கரையார் தம்பி கனகசபாபதிக்கவுண்டர்
நஞ்சையன் சர்க்கரையார் தம்பி விசுவநாதக் கவுண்டர், மகன் முள்ளுவாடி
பால வடிவேல் கவுண்டர் (முள்ளுவாடி பாளையம் என்றே வழங்கப்பட்டது)
நல்லதம்பிச் சர்க்கரையார் (21) தம்பி கல்லங்காட்டு சின்னசாமிக்கவுண்டர்
நல்லதம்பிச் சர்க்கரையார் (23) நான்காவது தம்பி
குட்டப்பாளையம் கிழக்குவலசு அர்ஜுன கவுண்டர்

ஆகியோரும் பாடல் பெற்றுள்ளனர்.

இவர்களில்லாமல்,

சிலம்பகவுண்டன் வலசு சுந்தரகவுண்டர்
சிலம்பகவுண்டன் வலசு வெங்கட்டரமணசாமிக்கவுண்டர்



குட்டப்பாளையம் சேனாபதிக்கவுண்டர்
மேலப்பாளையம் முத்துரத்தினசாமிக்கவுண்டர்
அழகன் சர்க்கரையார் மாமனார் கோவிந்தசாமிக்கவுண்டர்

பூந்துறை மாமன் வாரணவாசிக்கவுண்டர், குட்டப்பாளையம், வாழையூர் அண்ணன்மார்கள் பூந்துறை, புதூர் மைத்துனர்கள் ஆகியோரும் பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளனர்.

### சின்னமலை

தீரன் சின்னமலை பழையகோட்டைப் பட்டக்காரர் மரபினர், கொற்றவேல் சர்க்கரையார் (19) பேரர். 20-ஆவது பட்டக்காரர் நல்லசேனாபதிச் சர்க்கரை மன்றாடியாரின் தம்பி இரத்தினச்சர்க்கரை மகன். மேலப்பாளையத்தினர். சின்னமலையின் இயற்பெயர் தீர்த்தகிரி. சென்னிமலைக்கும் சிவன்மலைக்கும் இடையில் தன் ஆண்மையைக் காட்டியதால் சின்னமலை என்று பெயர் பெற்றார் என்பர்.

தீரன் சின்னமலை (17.04.1756 - 31.07.1805) தன்னை தீர்த்தகிரிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் என அழைத்துக் கொண்ட கல்வெட்டுக்கள் சில கிடைத்துள்ளது.

அழகன் சர்க்கரையார் (7) சிறிய தந்தை, கரியான்சர்க்கரையார் (6) இரண்டாவது மகன் பெயர் தீர்த்தகிரி சின்னமலைக்கவுண்டர். அவரும் மேலப்பாளையத்தினர் (பின்னர் தோட்டத்து வலசில் குடியேறினார்). இதன் மூலம் தீர்த்தகிரி சின்னமலை ஆகிய பெயர்களை இம்மரபினர் முன்னரே பெற்றிருந்தது தெரிகிறது. தீர்த்தகிரி சின்னமலை சிவன் மலைப்பாதையை அமைத்தவர்.

"அழகன்சர்க் கரைச் சிறுவன் அனுமந்தர் கோயில்வரப்
பழகுவதைப் பார்த்துக்கல் பாறைகளை - மளமளென
பேர்த்துச் சிவமலைமேல் பெரும்பாதை செய்தாரே
தீர்த்தகிரிச் சின்னமலைத் தேன்".

என்பது ஒரு பழம்பாடல். சிவன்மலைப் பாதை அமைத்த தீர்த்தகிரிச் சின்னமலையின் சகோதரர் முத்துரத்தினசாமிக்கவுண்டரும், மேலப்பாளையத்தைச் சேர்ந்தவரே. மேலப்பாளையம் புலவர்களால் மேலைநகர் என அழைக்கப்பட்டது.

## <u>இலக்கியங்களில் பெயர்கள்:</u>

பழைய கோட்டை மரபுப் பாடல்களில் பட்டக்காரர்கள் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. அவர்கள் தேவிமார்களும் சில பாடல்களில் குறிக்கப் பெறுகின்றனர். நெருங்கிய உறவினர்களும் குறிக்கப்பட்டுள்ளனர். அவை ஆங்காங்கு குறிக்கப்பட்டுள்ளன.

பழைய கோட்டை தொடர்புடைய பல்வேறு நிகழ்ச்சிகளில் கூறப்படும் செய்திகளில் பலருடைய பெயர்கள் பெயரளவில் மட்டும் குறிக்கப்படுகின்றன. வரலாற்றுப் புகழ்பெற்ற இப்பாடல்களில் அவர்கள் இடம்பெற்று என்றும் நிலைத்த புகழோடு வாழ்கிறார்கள்.

அரண்மனைப் பணியாளர்கள் நூற்றுக் கணக்கில் இருந்தனர். அவர்கள் செயல்கள் பரக்கக் கூறப்பட்டுள்ளது. சிலரது பெயர்கள் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

திவான் குழந்தசாமி
உக்கிராணம் சீனிவாசக் கவுண்டர்
உக்கிராணம் பெரியதம்பிக் கவுண்டர்
சமையல் குருநாதன்
சமையல் கோயில்பாளையத்துக் கவுண்டர்
விலை உரைக்கும் பண்ணாடி முத்தப்பன்
வண்டி ஓட்டும் கருப்பணகவுண்டர்
பண்ணை மேனேஜர் மேட்டுக் காட்டு ராமசாமி
பால்கறக்கும் கிட்டாக்கவுண்டர்
காடுசுத்தும் சப்பட்டா கிட்டா நாயக்கன்
ஆடுமேய்க்கும் தண்டுவக் கருஞ்சென்னி
பண்ணாடி மாரப்பகவுண்டர்
ஆனூர்ப்பூசாரி சிவமணிபண்டாரம்
பொன்னிவாடிப் பண்ணையம் பார்க்கும் கொல்லன்வலசு ராமண்ணன்,
புல்பூடு கொத்தும் மேற்பார்வை குட்டியப்ப பண்ணாடி
இஞ்சின்காரப் பழனியப்பன்



பால்பசுக்காக்கும் இந்தளூர் பிரதிவாதி பயங்கரம் வாரிசு ஆராவமுத ஆச்சாரி, பால்தயிர் மேற்பார்வை தம்பண்ணன் தம்பி சமையல் ராமணன், சண்டிகா தேவி கோயில் சிவந்தாரையர், தடிவீச்சு சொக்கநாதன் ஆகியோர் பல இடங்களில் குறிக்கப் பெறுகின்றனர்.

சிவன்மலைக்குருக்களில் பரமசிவக்குருக்கள், கந்தக் குருக்கள், உமாபதிக் குருக்கள் ஆகியோர் ஆனூர் அம்மையை வேண்டி உடல்நலம் பெற்றவர்கள். விசேட நாட்களில் பூசை செய்ய அவர்கள் ஆனூர்க் கோயிலுக்கு வந்திருக்க வேண்டும். மருதுறை சுந்தரர் மடம் ஆலால சுந்தரபண்டிதர்க்கு காரையூர் செயங்கொண்டீசுவரர் கோயிலிலும் பூசை செய்யும் உரிமை இருந்துள்ளது. அவர் அங்கு பட்ட வில்வமரத்தைத் தழைய வைத்துள்ளார். அவர் மகன் கனகசபை. அர்ச்சகர் மகள் சிவகாமி ஊமைப் பெண்ணைப் பேச வைத்துள்ளார். அர்ச்சகர் பெயர் சிவஞானக் குருக்கள். நான்கு ஆசிரியர்கள் பாடல்களில் குறிக்கப் பெறுகின்றனர். ஒருவர் பெரிய சர்க்கரை மனைவியார் ஆரியப்பட்டி வள்ளியத்தாளுக்குத் தமிழ் ஆசிரியராக விளங்கிய ஆரியப்பட்டி அங்கமுத்து வாத்தியார். இருவர் நல்லதம்பிச் சர்க்கரையாருக்கு (26) ஆங்கிலப் பாடம் கற்றுத் தந்த வெங்கரை வாசுதேவராவ். மற்றொருவர் கோவை மாவட்டக் கலெக்டர் நியமித்த ஆசிரியர் வைத்தியலிங்கம் அவருக்கு வீடு, உணவு வசதியுடன் 100 ரூபாய் சம்பளம் தரப்பட்டது. மற்றொருவர் திருவாடுதுறை மடத்திலிருந்து பயிரன் சர்க்கரையார் தம்பி கண்ணுச்சாமி என்ற குமாரரத்தினக் கவுண்டர் ஏற்படுத்திய காரையூர்ப் பள்ளிக் கூடத்துக்கு ஆசிரியராக வந்த முத்துப் பிள்ளை வாத்தியார். பட்டக்காரரின் நண்பர் பி.எஸ். என்று அழைக்கப் பெறும் சிங்கார வேல் பிள்ளை என்பவர், மற்றொருவர். கால்நடைத் துறை உயர் அலுவலராக இருந்து ஓய்வு பெற்றுப் பழைய கோட்டையில் பணிபுரிந்த பட்டாபிராமபிள்ளை ஆகியோரும் குறிக்கப்பட்டுள்ளனர்.

ஐதர் அலி, திப்புசுல்தான், ஐதரின் அதிகாரிகள் கபூர் சாயபு, தாசில்தார் அமீர்கான் சாயபு, வேலூர் காதர் பாட்சா, பழைய கோட்டை கமால் சாயபு ஆகியோரும் பாடல்களில் இடம் பெற்றுள்ளனர். சம்பிரதி ராமபிள்ளை மகன் சடைப் பெருமாள் தந்தைக்காகப் பட்டக்காரருக்குக் கடிதம் எழுதியுள்ளார். சம்பிரதி தம்பி, காளை தருமாறு எழுதிய தஞ்சை வாத்தியார் இராசகோபால்பிள்ளையின் தந்தை இராமநாதனும் பாடலில் இடம் பெறுகிறார். காடையூர்ப் பட்டக்காரர் குமார காங்கேய மன்றாடியார், காங்கயம் கணபதிப்பல்லவராயர், சிவமலைப் பல்லவராயர், சிதம்பரப் பல்லவராயர், சங்கரண்டாம்பாளையம் குமாரரத்தின வேணாவுடையார் ஆகியோர் பாடல்களில் சிறப்பாகக் குறிக்கப் பெறுகின்றனர்.

மதுரை வீரப்பநாயக்கர், ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், சென்னை மாநில கவர்னர் வெள்ளியணை பென்ட்லண்டு ஆகியோரும் பாடலில் குறிக்கப்பட்டுள்ளனர். பசுபதிரெட்டியார் ஒரு பாடலில் குறிக்கப் பெறுகிறார். தெற்குச் சீமையிலிருந்து கால்நடைகள் திருடவந்த சங்கிலியின் மகன் பெரிய குணத்தேவன், அவன் கூட்டாளி பொன்னன் ஆகியோர் இடம் பெற்றதோடு பாம்பு கடித்து இறந்து போன ஆறுவிரல் அருணாண்டி கூடப் பாட்டில் இடம் பெற்று உயிர் பெற்று வாழ்கிறான்.

பட்டக்காரர்கட்கு இளமையில் ஒரு பெயரும், பட்டம் சூடிய பின்னர் ஒரு பெயரும் இருந்துள்ளது. கரியான் சர்க்கரை (6) மகன் அப்புக்குட்டி என்று இளமையில் அழைக்கப் பெற்றுள்ளார். அவர்தான் பின்னர் அழகன் சர்க்கரை (7) என்று பெயர் பெறுகிறார். பெரிய சர்க்கரையாரின் இளமைப் பெயர் குழந்தைசாமி என்பது. நல்லதம்பிச் சர்க்கரையாருக்குச் சம்பந்தச் சர்க்கரை என்னும் பெயர் உண்டு.

சிலருக்கு குழந்தைப் பருவத்தில் செல்லப் பெயர் ஒன்று இருந்திருக்க வேண்டும். தீரன் தீர்த்தகிரிச் சின்னமலை இளமைக் காலத்தில் தம்பாக்கவுண்டர் என்று அழைக்கப்பட்டுள்ளார். தீர்த்தகிரி என்பது அவர் இயற்பெயர்.

சிலருக்கு இரண்டு பெயர்களும் வழக்கில் இருந்துள்ளன. பயிரன் சர்க்கரையார் தம்பி கண்ணுச்சாமி என்ற குமார ரத்தினக் கவுண்டர் என்று அழைக்கப் பெறுகிறார்.

அன்றைய பழைய கோட்டையில் கைக்குழந்தைகட்கு இலவசமாகப் பால் கிடைக்கும். எப்பொழுதும் மோர் கிடைக்கும். பால், தயிர், வெண்ணெய் வேண்டுவோர்க்குக் கிடைக்கும். ஏழைகட்கு உதவ எந்த நேரத்திலும் பாத்திரத்தில் சோறு காத்திருக்கும். வழிப்பயணம் மேற்கொள்வோர் "உத்தமக் காமிண்டன்" தண்ணீர் பந்தலில் மோருஞ்சோறு ஊறுகாயுடன் சாப்பிடலாம்.

<u>நீதி விசாரணை:</u>

பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் அரண்மனைல் உள்ள நாட்களில் அவர்களின் பெரும்பணி "நீதி விசாரணை"தான். இதை சம்தி ராமபிள்ளை

"திரு உயரும் நற்காரை மன்னவன் கொங்கில் உள



திரி எட்டு நாட்டினுக்கும்
தீராத சச்சரவு சாதிமத வாதுகள்
தினம் தீர்த்து வைக்கும் இறைவன்"

என்று இதனைக் கூறுகிறார்.

இப்பகுதி மக்கள் தங்கள் பல்வேறு குறைகளைப் பட்டக்காரரிடம் கூறித் தீர்வு பெற்றனர். அண்மைக் காலம் வரை இப்பகுதி மக்கள் காவல் நிலையத்துக்கோ, நீதிமன்றத்துக்கோ பெரும்பாலும் சென்றதில்லை.

"சண்டை சச்சரவைத் தீர்த்துக் கொள்ளச் - சிலர்
சாதி ஞாயங்களைத் தீர்த்துக் கொள்ள
காடு பத்தாது கொடுங்கள் என்று சிலர்
கந்தாயம் தள்ளும் படி சிலரும்
நாவிதன் சிறைக்க வருவதில்லை என்றும்
நன்றில்லை வண்ணானின் வெள்ளை என்றும்
ஆண்டி இலைபோட வில்லை என்றும்
அந்த ஆசாரி எங்கட்கு வேண்டாம் என்றும்
குடங்கள் சட்டிகள் கொடுப்பதில்லை - வேறு
குயவன் வேண்டும் எனச் சொல்பவரும்
கொடுக்கல் வாங்கல் தகராறு சொல்வாரும்
கோயில் தகராறு சொல்வோரும்
சொன்னபடி மகன் கேட்பதில்லை அவன்
சோறும் சரியாகப் போடவில்லை
அவனுக்குப் பண்ணையம் பிரித்து விடுங்கள் என்று
அப்படிச் சொல்ல வருவார் சிலர்
மாடொன்று தேடியும் கிடைக்கவில்லை
மற்றவன் ஆடதைக் காணோம் என்பான்
காட்டினில் ராவே மேய்த்தான் என்பான் - அவன்
காணாமல் கோழியைத் தின்றான் என்பான்"

இத்தனை ஞாயங்களும் தீர்ந்த பின்னர் எல்லோரும் சாப்பிட்டுச் சென்றிடுவார்.

## வரலாறு சில வரிகளில்

1. அழகன் சர்க்கரையார்:

ஆனூரில் வாழ்ந்த சோமன் சர்க்கரையாரின் மகன். தன் சொப்பனத்தில் கண்ட அம்மனுக்குச் சோமன் சர்க்கரை ஆனூரம்மன் கோயில் கட்டினார். அழகன் சர்க்கரையாரின் வீரமும், வலிமையும் கேள்விப்பட்ட காங்கய நாட்டார் 12 ஊர் மக்களும் தென்னிலைக் கோட்டை கொங்குராயணை வெல்ல அவரால்தான் முடியும் என்று தாராபுரம் நஞ்சைய உடையாரிடம் கூறுகிறார்கள். நஞ்சைய உடையாரிடம் காரையூர் முழுவதையும் கொடுமணலையும் காணியாகப் பெற்று விஜயநகரம் சென்று பச்சையாப் பணிக்கன், வேலப்பணிக்கன் தலைமையில் 100 கன்னப் பறையர்களைக் கூட்டிக் கொண்டு வந்து தென்னிலைக் கோட்டையை இடித்துக் கொங்குராயன் தலையை நஞ்சைய உடையாரிடம் கொடுத்தார். மன்றாடியார் பட்டமும் கொங்கு நாட்டுத் தலைமைப் பட்டமும் பெற்றார். இவர் தந்தை சோமன் சர்க்கரையார் பெயரிலேயே காரையூர், கொடுமணல் உரிமை எழுதப் பட்டது. அழகன் சர்க்கரையார், மனைவி சிவகாமி அம்மையார். அழகன் சர்க்கரை செயங்கொண்டீசுவரர் கோயில் நல்லமங்கை அம்மன் சிலை பின்னப்பட்டிருக்கவே புது சிலை செய்து வைத்தார். பழையகோட்டை மரபின் முதல் பாடலில் அழகன் சர்க்கரை "புகழ்க்காரை ஆனூர் மன்னவன் அழகன் சர்க்கரை" என்றும் "உத்தமக்காமிண்ட சோமசர்க்கரை மகன் உயர் அழகன் சர்க்கரை" என்றும் பாராட்டப்படுகிறார். இவரைப் பாடியவர் காரையூர் செயங்கொண்டய்யர். இவர் காங்கயநாடு 12 ஊர்ச் சபை கூட்டியவர்.

2. சொக்கன் சர்க்கரையார் :

மந்திரம் வல்லவர், பாம்பு விடம், பைத்தியம் தீர்ப்பவர், இவர் மருமகன் முத்துவேல் கவுண்டர். நல்லாண்டார் பொங்கலில் குயவர் ஞாயம் தீர்த்தவர். இவர் தம்பி குமாரசர்க்கரையார். குமார சர்க்கரை பஞ்சபட்சி, சரநூல் ஆராய்ச்சி செய்து எல்லோருக்கும் இலவசமாகச் சோதிடம் கூறியவர். இவர் பெயராலேயே குமாரபாளையம் அழைக்கப்படுகிறது. "கொஞ்சும் மொழிச் சொக்கன் சர்க்கரையார்" என்றும், "திருஉயரும் நற்காரை மன்னவன் கொங்கில் உள திரி எட்டு நாட்டினுக்கும் தீராத சச்சரவு சாதிமத வாதுகள் தினம் தீர்த்து வைக்கும் இறைவன்" என்றும் பாடியுள்ளார் சம்பிரதி ராமபிள்ளை.



3. கரியான் சர்க்கரையார்:

நண்பர் புலவர் முத்தூர் செல்லக்குப்பண கவுண்டரோடு குதிரையிலேயே மதுரை சென்றார். மதுரைக் கோயில் தெப்பக் குளத்தில் சர்க்கரையார் குளிக்க குதிரையும் குளிக்க வந்து விட்டது. கோயிலுக்கு வந்த வீரப்ப நாயக்கர் பார்த்து மகிழ்ந்து அரண்மனைக்கு அழைத்துச் சென்று விருந்தளித்து வெள்ளிவில், வெள்ளிப் பல்லாக்கு பரிசளித்தார். இரு குதிரைக்கும் "நெல்லும் கோதிலாக் கடலையும்" வைத்து "வெள்ளிப் பணி உள சலங்கையும்" கழுத்தில் அணிவித்தார். இவரது இளைய மகன் புன்னம் என்ற ஊரில் குடும்பத்தை விட்டுவிட்டு பக்தி பெருகி எந்நேரமும் "முருகா" என்று கூறி முழுநீறு பூசிய மேனியராக நிருவிகற்ப சமாதிக்கு பழனி தகுந்த இடம் என்று அங்கு சென்று சண்முக நதி செல்லும் பாதையில் இடம் வாங்கி வேளாளர்கட்காக "சர்க்கரை மடம்" நிறுவி குகை அமைத்து குண்டலினி யோகம் புரிந்து மடத்திலேயே சமாதியானார். இவரை

"எதிலும் அதிபதியான சொக்கசர்க் கரை புதல்வர்
இனிய கரியான் சர்க்கரை"

என்று புகழ்கிறார் நண்பர் செல்லக் குப்பண கவுண்டர்.

4) சோமன் சர்க்கரையார்:

தமிழ்ப் புலமையுடையவர், யமகம், திரிபு, சிலேடைப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். அருள் நிகழ்ச்சிகள் எலாம் "கட்டுக்கதை" என எண்ணிய இவரை கனவில் வந்து காணாமல் போன இவர் மனைவியாரின் மிளகு மணிமாலை இருக்கும் இடம் காட்டி நம்பிக்கையூட்டச் செய்தவர் ஆனூர் அம்மன். பின்னர் தினமும் வழிபடலானார்.

5) அழகன் சர்க்கரையார்:

தேவாரம் திருவாசகம், சைவ சித்தாந்தம் கற்றவர். கவிபாடும் ஆற்றல் பெற்றவர், பூந்துறை பெரிய வீட்டுமாமன் வாரணவாசிக்கவுண்டரிடம் சூக்கும பஞ்சாட்சர உபதேசம் பெற்றவர். செயங்கொண்டீசுவரர், சண்டிகா தேவி மீது பதிகப் பாடல்கள் பாடியவர். மந்திரப் பிரம்பால் "செயங் கொண்ட நாதர் பேரில்" ஆணையிட்டு தலையில் 108 அடி அடித்து மிகக் கடுமையான விஷத்தையும் இறக்கியவர். காசி யாத்திரை மேற்கொண்டு அங்கேயே சமாதியானார். இவர் நினைவாக அங்கு "சர்க்கரை லிங்கம்" பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. "சுமுகமான அழகநற்சர்க்கரை" என்பார் காரையூர் குருநாதன் நட்டுவன்.

6) <u>கரியான் சர்க்கரையார்:</u>

நூறு செம்மறியாடுகள் விற்று அதன் தொகையால் சிவன்மலை தேர்ப்பாதையை ஏழே நாட்களில் அமைத்தார். இவரது தம்பி மேலப்பாளையம் தீர்த்தகிரி சின்னமலைக்கவுண்டர் மலைப்பாதையை அமைத்தார். அவரும் கவிஞரே. பின்னர் இவர் தோட்டவலசில் வாழ்ந்தார். இன்னொரு தம்பி முத்துரத்தினக் கவுண்டரும் மேலப்பாளையத்தினரே. "காரைமன் கரியான் சர்க்கரை" என்று சிவன்மலை சிவகிரி பண்டிதர் தன் சந்தப் பாடலில் கூறியுள்ளார். தன் மகன் அப்புக் குட்டிக்கு ஆட்டெருவின் மேன்மையை விளக்கியவர்.

7) <u>அழகன் சர்க்கரையார்:</u>

ஆனூரம்மன் கோயிலைக் கற்பணியாக்கியவர். சிற்பியருக்கு மூன்று வேளையும் தயிரோடு விருந்தளித்துத் தாம்பூலமும் கொடுத்தவர். பயிரன் குலத்தார் ஒன்று கூடி ஆனூரம்மன் கோயில் திருப்பணிக்கு உதவ ஏற்றுக் கொண்டவர்.

8. <u>கரியான் சர்க்கரையார்:</u>

இவரை வாத்தியார் கருங்குமரப்புலவர்
" சாந்தமதி அழகன்சர்க் கரையார் மைந்தர்
சற்குணவான் கரியான்சர்க் கரையே ஆவார்"

என்று பாடியுள்ளார். மகன் பெரிய சர்க்கரையாருக்குத் திருமணமும், பட்டாபிஷேகமும் ஆனூர்க் கோயிலில் நடத்தித் துறவு பூண்டவர். தல யாத்திரை செல்பவர். குண்டலினி யோகம் கைக் கொண்டவர்.

9) <u>பெரிய சர்க்கரையார்:</u>

மனிதரில் கூன், குருடு, நொண்டி, சப்பாணி, மாடு, ஆடு, நாய், பூனைகளுக்கும் இரண்டு வேளையும் ராகி, சோளம், கம்பு ஏதாவது ஒன்றின் இரண்டுமிடாக் கஞ்சியைக் கொடுப்பதையே தர்மமாகக் கொண்டவர். அந்திம காலத்தில் பிராமணர்களுக்குப் பால்மாடு கொடுக்க மகன் முதலியவர் கூற, பால் மாட்டை தனக்கு சமையல் செய்து போட்ட அருணானுக்குக் கொடுத்தவர். இவர் தம்பி கொடுமணல் செந்தி வடிவேல் கவுண்டர் சொத்துக்களைக் கோயிலுக்கும் கொடுத்து விட்டு புலிப்பாணி நூல்கற்று கால்நடைகளுக்கு இலவச வைத்தியம் செய்தவர். இவரை கருங்குமரப்புலவர் பாடியுள்ளார்.



10. <u>பிள்ளை சர்க்கரையார்:</u>

ஆனூரம்மன் சடைமுடி தரிசிக்கும் பேறு பெற்றவர். 48 நாட்கள் கடும் விரதமிருந்து 43 முக்கோணச் சக்கரத்துள் உள்ள சண்டிகா தேவியின் சக்கரங்களைப் பலப்படுத்தியவர். "எண்திசையும் புகழுடைய பிள்ளை சர்க்கரை மன்னன்" என்று புகழ்வார் சிவமலை ஆறுமுகக் குருக்கள். இவர் காலத்தில் ஆனூர் கோயில் பூசை செய்தவருள் மேலப்பாளையம் சிவமணிப் பண்டாரம் ஒருவர்.

11. <u>பயிரன் சர்க்கரையார்:</u>

கள் குடிப்போரைக் கண்டால் குதிரையின் கடிவாளம் பிடிக்கச் செய்வார். வம்புச் சண்டையிடும் பெண்களைக் கண்டால் சாணிக்கூடை சுமக்கச் செய்வார். ஆனால் விபூதி வேஷம் கண்டால் விருந்தளித்துப் பாராட்டுவார் என்று கூறுகிறார் ஒரு புலவர். இவர் தம்பி கண்ணுசாமி என்ற குமாரரத்தினக்கவுண்டர் திருவாடுதுறை மடம் சென்று முத்துப்பிள்ளை என்ற ஆசிரியரைக் குடும்பத்துடன் அழைத்து வந்து காரையூரில் 200 சிறுவர், சிறுமியர் சாதி மத பேதம் இல்லாமல் உணவு உண்டு "சங்கீதப்பண், தமிழ்மறை, சங்க நூல்கள் நிகண்டு" படிக்க ஏற்பாடு செய்தார். திருவாடுதுறை மடத்திற்கு ஆனூரின் வடபுறம் 28 ஏக்கர் பூமி மானியமாக அளித்தார். அப்பகுதி இன்று "தம்பிரான் வலசு" என்ற பெயருடன் உள்ளது.

"பிரியமான பயிர நன் சர்க்கரை" என அருணாசலக்கவிராயர் பாடியுள்ளார்.

12) <u>பெரிய சர்க்கரையார்:</u>

குதிரையேற்றத்தில் மிக வல்லவர். மகன் சிறுவன் விசுவநாதனை உட்கார வைத்துக் கொண்டு குதிரை மீது நின்று கொண்டு உத்தியில் பயணம் செய்து கவண் மூலம் குருவிகளை விரட்டுவாராம். இவர் மனைவி ஆரியப்பட்டி வள்ளியாத்தாள் தமிழ் கற்ற புலவர். தன் பெயரை "கொம்பு ஒடிந்த வெள்ளியம்மாள்" என்று எழுதியவர். இவர் குதிரை வைத்தியம் செய்யத் தஞ்சை அரண்மனை சென்றவர். "பண்புபெறு பெரிய சர்க்கரை" எனப்பட்டவர்.

13) விசுவநாதச் சர்க்கரையார்:

சாமுத்திரிகா லட்சணம் கைவந்தவர். குதிரை, மாடு, குழந்தை ஆகியவைகளைப் பார்த்தவுடன் பலன், தன்மை, ஆயுள் இவைகளைக் கூறுவார். நடேச பாஸ்கர தீட்சிதரைக் குருவாகக் கொண்டவர். குருக்கள் வீட்டுத் திருமணத்தை நடத்தியவர். இரண்டு மாதங்கள் சிவமலையிலேயே தங்கித் திருப்பணிகளை மேற்கொண்டவர்.

"பயிரகுல திலகம் காரை ஆனூர்
தரும அரசெனும் விசுவநாதச் சர்க்கரை
வள்ளல்"

என்கின்றார் குருநாதர்.

14) கந்தன் சர்க்கரையார்:

திருச்செங்கோட்டுக்குப் பல திருப்பணிகள் செய்தவர். கொடை பல அளித்தவர். இவர் மனைவி முத்தாத்தாள் விருந்தோம்பல் தன்மையைப் புலவர்கள் பாடியுள்ளனர். ராயவேலூர் காதர் பாட்சா மூலம் 48 நாட்கள் பயிற்சி பெற்று இரண்டு கைகளிலும் வாள் எடுத்துப் போரிடும் கலை கற்றவர். பாட்சாவிற்கு குதிரை பரிசளித்தவர்.

"அட்டான நாடு புகழ் கந்தன்சர்க் கரை என்னும்
அதிபர்" என்று புகழ்கிறார் கொடுமணல் சிவியார் பாளையம் குமரப்ப வாத்தியாரின் மகன் குதிரை வைத்தியம் பழனிமலை வாத்தியார்.

15) பால சர்க்கரையார்:

தோட்டத்தில் இவரும் இவர் மனைவியும் ஏர் ஓட்டுவார்கள் என்கிறார் சம்பிரதி நல்லயபிள்ளை மகன் அரசப்பிள்ளை. இவர் தம்பி கனகசபாபதிக் கவுண்டர் பாளையத்தில் வாழ்ந்தவர்.

"செப்ப அரிதான கொடை எப்பவுமே செய்து
சிறப்புமிகும் பேர் பெற்றவர்"
"எப்படிக் கொத்த பஞ்சத்திலும் இரப்போர்க்கு
இல்லை என்று சொல்லாதவர்" என்கிறார் புலவர்.



16) நஞ்சையன் சர்க்கரையார்:

இரவெல்லாம் "தம் நெட்டைச் சிவலைக் குதிரை ஏறி" நாடு காவல், நீதி விசாரணை செய்து பகலில் அரண்மனையில் தூங்குபவர், மடவளாகம் சிவராம தேசிகர்,

மட்டப் பகலெல்லாம் தூங்குவாராம் - இவர்
பத்தினி பண்ணையம் பார்ப்பாராம்

என்கிறார். இவர் மனைவி வஞ்சியாத்தாள் குதிரைச் சவாரி செய்பவர்.

"நஞ்சையன் பத்தினி வஞ்சியாத்தாள் - அவர்
நல்ல குதிரைச் சவாரி செய்வார்"

என்கிறார் புலவர். அறச்சலூருக்கும், காரையூருக்கும் எல்லைத் தகராறைப் போர் செய்து தீர்த்தவர். நஞ்சையன் சர்க்கரை என்று தான் பெயர் எழுதாமல் "ஆனூரம்மன் துணை" என்று கையொப்பமிடுபவர். இவர் தம்பி முள்ளுவாடிப் பாளையம் விசுவநாதச் சர்க்கரை. இளைய மகன் கொன்னை நகர் பாலவடிவேல் கவுண்டர். செயங்கொண்ட நாதர் கோயில் திருமதிலை தனது விவசாய வருமானம் கொண்டு 5 ஆண்டுகளில் கட்டியவர்.

17) பெரிய சர்க்கரையார்:

மிகச் சிறந்த பக்தர், "முருகா" என உச்சரித்துக் கொண்டே இருப்பார். பயிருக்கு வரும் நோய்களைக் களைவதில் வல்லமை பெற்றவர். வெள்ளியணை பசுபதி ரெட்டியார் கம்பங்காட்டுப் பூச்சிகளை ஒரே இரவில் ஓட்டியவர்.

"பெரியசர்க் கரைமன்னர் வலிவுபெறு மதியுடையவர்"

என்று கூறுகிறார் மடவளாகம் சிவராமதேசிகர்.

18) நல்லதம்பிச் சர்க்கரையார்:

செங்குன்றூர் வள்ளல் எல்லப்பன் விடுத்த புலவர்கள் செய்த கடும் சோதனைகளில் வென்றவர். தாய் முதுகில் புலவர் ஏறப் பொறுத்தவர். காடையூர்ப் பட்டக்காரருடன் நட்புக் கொண்டவர். தென்னிலையில் அவருக்குத் தொல்லை கொடுத்தவர்களை அடக்கியவர். புலவர் சவுக்கடி பொறுத்தவர். கவிக்கு ஆயிரம் பொன் கொடுத்த வள்ளல்.

"மருவலர்கள் திறைகொண்ட நல்லதம்பிச் சர்க்கரை
மன்றாடி மகிபாலன்" என்கிறார் பூந்துறை பால தண்டாயுதபாணிப் புலவர்,

19) கொற்றவேல் சர்க்கரையார்:

பழைய கோட்டை மரபில் மிகப் புகழ் பெற்றவர். இவர் காலத்தில்தான் சம்பிரதி சடைப் பெருமாள் பிள்ளை மரபுப் பாடல்களைத் தொகுத்தெழுதி வைத்தார். சர்க்கரையார் மிகச்சிறந்த தமிழ்ப் புலவர். நல்லமங்கையம்மன் மீது 100 பாடல்கள் கொண்ட சதக நூல் பாடினார். சில பாடல்கள்தான் கிடைத்துள்ளன. ஐதர் அலிக்குப் பண உதவி செய்தவர். இவர் கால்நடை மருத்துவம், பயிர் மருத்துவம், மக்கள் மருத்துவம் எல்லாவற்றிலும் மிகத் தேர்ந்தவர். சிறந்த தத்துவஞானி. வாழ்க்கைக்கு வேண்டிய நல்ல பல நீதிகளைக் கூறியவர். "ஒரே தெய்வம்" "கொங்கு மண்ணே சுகம் தரும்" என்று கூறியவர். செயங்கொண்டார் கோயில் தீபத்தம்பத்தைச் சபதம் ஏற்று நிறுத்திக் "கருட கம்ப அபிஷேகம்" செய்தவர். தீபத்தம்பத்தின் மேற்குப்புறம் இவர் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது.

"இழவுமணம் இரண்டுமே ஒன்று" "பட்டொடு பருத்தி சமம்" "தங்கமும் மண்ணும் ஒன்று" "தனவானும் ஏழையும் சமம்" என்ற சமரச எண்ணம் உடையவர்"

"சார்ந்த குணமே விரதம் அல்லாது
பிதுர் விரதம், சனிவெள்ளி விரதம்
ஏகாதசி விரதம் யாவுமே தப்பு"

என்கின்றார் சர்க்கரையார்.

20) நல்லசேனாபதிச் சர்க்கரையார்

இரட்டைப் புலவர்களால் புகழ்ந்து பாடப்பட்டவர். சதுரங்கம் ஆடுவதில் மிக வல்லவர். இவர் தம்பி இரத்தினச் சர்க்கரையவர்களின் மகனே விடுதலை வீரர் தீரன் சின்னமலை. புலவர்கள் கவிக்கும், புவிக்கும், எல்லோர் செவிக்கும் இனிமை செய்தவர்.

"நற்காரை யூர்மன்னர் நல்லசேனாபதி"
"நதி பெருகும் காரை மன்னன்
நல்லசேனாபதிச் சர்க்கரை"

என்று பாடுகிறார் பாண்டமங்கலம் அம்பலவாணக் கவி.



21) நல்லதம்பிச் சர்க்கரையார்

திருச்செங்கோடு வீரபத்திரக் கவிராயரால் "காதல் பிரபந்தம்" பாடப்பட்டவர். புலவரை இகழவில்லை என்று காய்ச்சிய நெய்யில் கையை விட்டுச் சத்தியம் செய்தவர். புலவரின் எச்சில் வாயைக் கழுவியவர். இவர் புகழ் தமிழ்நாடு முழுவதும் பரவியது. இந்நிகழ்ச்சியை இராமநாதபுர சமஸ்தான வித்துவான் அமுதகவிராயர் குறிப்பிடுகின்றார். இவர் தம்பி கல்லங்காட்டுச் சின்னசாமிக்கவுண்டர் பரதேசியால் உபதேசம் பெற்று மாடு, ஆடு, நோய் தீர்த்தவர். 100 வயது வாழ்ந்தவர்.

"காரை ஆனூர் மேவு காராள நல்லதம்பி" என்று புலவர் இவரைப் புகழ்கிறார்.

22) நல்லசேனாபதிச் சர்க்கரையார்:

திப்புவால் சிறை வைக்கப்பட்ட இவர் பின்னர் விடுதலையானார். காரையூரில் திப்புவின் காரியத்துக்குக் கர்த்தர் ஆன கபூர் சாயபு நாடனைவரையும் அழைத்து இவருக்குச் சிறப்புச் செய்தார். இவரிடம் 10 சுழிகள் உள்ள பஞ்சகல்யாணிக்குதிரை இருந்தது. திப்பு இவரிடம் வந்து சைவ விருந்து உண்டு 200 பொன் கொடுத்து குதிரையை வாங்கிச் சென்றார். 12.07.1807-ல் பழைய கோட்டை மரபு வரலாற்றை மெக்கென்சியின் உதவியாளருக்கு எழுதிக் கொடுத்தார். காரையூர்ச் செப்பேட்டையும் படி எடுத்துக் கொள்ள அனுமதி அளித்தார். அவை இரண்டும் இன்றும் மிகச்சிறந்த வரலாற்று ஆவணங்களாகத் திகழ்கின்றன. இவற்றின் மூலப்படிகள் சென்னை தமிழக அரசின் பழஞ்சுவடி நூலகத்தில் பாதுகாப்பாக உள்ளன.

23) நல்லதம்பிச் சர்க்கரையார்:

எண் சோதிடக் கலையில் வல்லவர். இவருக்கு சம்பந்தச் சர்க்கரையார் என்ற பெயரும் உண்டு. சங்ககிரிச் சிறையில் சந்தித்த வெற்றிவேல் கவிஞருக்கு மனைவியின் மாங்கல்யத்தைப் பரிசாகத் தந்தவர். சிறையில் தந்தது பழையது என்று கூறி கன்னிச் சரபகவி வெற்றிவேல் கவிஞருக்குத் திருமணத்தில் புது மாங்கல்யம் தந்தவர். இவரது மனைவியார் கருணையாம்பாளையம் முத்தாத்தாள். இவரது தம்பி குட்டப்பாளையம் அர்ஜுன கவுண்டர். தன் மாமனாரிடம் கற்ற அட்டாவதானக் கலையில் சிறந்து விளங்கினார். நல்லதம்பிச் சர்க்கரையாரை

"கொடை அதனிலே நிதம் தடை ஏதும் இலாதபடி
கொடுபுதூர் நல்லதம்பிக்
குணமிகும் சர்க்கரை உத்தமக் காமிண்ட
கொங்கு இறைவர்" என்றும்,

தம்பி அர்ஜுன கவுண்டரை,

"குட்டைப் பதியில் வாழ்
நந்தலில் வாது மிக மாடு ஆடு பால்பசு
நானாவிதச் செல்வமும்
வல்லமைகளும் கொண்ட
வடிவழகர் அர்ச்சுனன்"

என்று பாராட்டுகிறார் உலகுடை நல்.ராசகோபாலபிள்ளை. இவரது மற்ற சகோதரர்கள் ஊடையம் தத்துக்குச் சென்ற சபாபதிக் கவுண்டர், தென்னங்கரைப்பாளையம் சேனாபதிக்கவுண்டர் ஆகியோர், சேனாபதிக்கவுண்டர் அரவக்குறிச்சி ஆறுமுக சேர்வைக்கு எருமை பரிசு கொடுத்தவர். நல்லதம்பி சர்க்கரையார் மகள் அம்மணியம்மாள்.

24) <u>கொற்றவேல் சர்க்கரையார்:</u>

குதிரைச்சாமான் வேலைகளை அரவக்குறிச்சி ஆறுமுகத்தைக் கொண்டு சிறப்பாகச் செய்தவர். அவருக்குக் கறவைப்பசு பரிசு கொடுத்தவர். இவர் குதிரைச் சவாரியில் மிகவும் வல்லவர். ஊடையம், குட்டை நகர், வாழையூர் அண்ணன்மார், பூந்துறை, புதூர் மைத்துனர்கள் ஆகியோருடன் குதிரைச் சவாரிப் போட்டியில் வென்றவர். இவரது மகள் அம்மணியம்மாள். இவரது மனைவியார் குயவம்பாளையம் முத்தாத்தாள்.

"சிறந்த புகழ்க் கொற்றவேல் மகீபர்" எனப் பாடுகிறார்
அரவக்குறிச்சி ஆறுமுகம் சேர்வை, அவர் "முன்னம் கறவைப்பசு
குதிரைமுழுச்சாமான் செய்தே பெற்றேன்.
இன்னம் கறந்து குடிக்கின்றேன்" என்று பாடுகிறார்.

சடைப்பெருமாள் பிள்ளை எழுதி வைத்த வரலாற்றுப் பாடல்கள் அழிவுறும் நிலையில் இருந்ததால் இவர் காலத்தில் வாழ்ந்த சடையபிள்ளையால் மீண்டும் படி எடுக்கப்பட்டது.



25) <u>நல்லசேனாபதிச் சர்க்கரையார்:</u>

இவர் நொய்யல்கரை அரண்மனையைக் கட்டியவர். அரண்மனையை அரண்மனைப்புதூர் என அழைப்பர். இவர் மிகுந்த பலசாலி. வண்டி இரும்பு இருசை தலைமுடியால் கட்டித் தூக்குவார். ஒரு மனு எடையை பல்லால் கடித்துத் தூக்குவார் என உலகுடையாபாளையம் ஆறுமுகக்கவிராயர் கூறுகிறார்.

இவரது மனைவியார் செலம்ப கவுண்டன்வலசு வள்ளியாத்தாள் அவர்கள். இவர் செலம்பக்கவுண்டன்வலசு சுந்தரகவுண்டர், குட்டப்பாளையம் சேனாபதிக் கவுண்டர் துணையோடு காங்கய நாட்டவர்கள் ஒத்தழைப்புடன் மிகச்சிறப்பாகச் சிவன்மலைக் குடமுழுக்கு விழாவை நடத்தினார். வள்ளியாத்தாள் அவர்கட்கு மடவளாகம் லட்சுமணபாரதி சீட்டுக்கவி எழுதியுள்ளார்.

26) <u>நல்லதம்பிச் சர்க்கரையார்:</u>

இவர் 1886-ல் பிறந்தார். ஒன்பதாவது வயதில் தந்தையை இழந்தார். தாயார் வள்ளியாத்தாள் அவர்கள் வளர்த்து ஆளாக்கினார். குழந்தைப் பருவத்திலேயே எவங்கரை வாசுதேவராவிடம் தமிழ், ஆங்கிலம் கற்றார். தாயார் அரண்மனைப் பணிகள் விவசாயப் பணிகளையெல்லாம் குட்டப்பாளையம் சேனாபதிக்கவுண்டர் சம்பிரதி இராமையாபிள்ளை அவர்கள் உதவியுடன் சிறப்பாகத் செய்து வந்தார்.

அப்போதைய எஸ்டேட் சட்டப்படி இவர் மைனர் ஆனதால் அரசுப் பொறுப்பில் அரண்மனை நிர்வாகத்தை அரசு ஏற்றுக் கொண்டு ஒரு மேனேஜரை நியமிப்பதாகவும், இவரை சென்னையில் அரசாங்கப் பொறுப்பில் படிக்க வைப்பதாகவும், கோயமுத்தூர் மாவட்டக் கலெக்டர் ஆணை அனுப்பினார். தகுந்த வக்கீலை வைத்து வாதாடியும், நேரில் வந்த கலெக்டரிடம் வற்புறுத்தியும் அரசு எடுப்பதை தவிர்த்த பெருமை இவர்கள் தாயார் வள்ளியாத்தாள் அவர்களுக்குண்டு. கலெக்டர் அறிவுரையின்படி வைத்தியலிங்கம் ஆசிரியரிடம் காங்கயத்தில் தங்கிக் கல்வி கற்றார்.

19 வயதில் 12.07.1905 அன்று சிலம்பகவுண்டன் வலசு மாமா வெங்கட்ரமண சாமிக்கவுண்டர் மகள் அம்மணியம்மை அவர்களைத் திருமணம் செய்து கொண்டு அடுத்த நாள் 13.07.1905 அன்று பட்டக்காரராகப் பட்டாபிஷேகம் செய்யப் பெற்றார்கள்.

கால்நடை வளர்ப்பில் மிகவும் கவனம் செலுத்தினார். கிராமத்தில் பள்ளிக்கூடம் ஏற்படுத்தினார். அன்னதானம் செய்வதில் மிகவும் சிறப்புற்று விளங்கினார். கால்நடைப் பண்ணையை பார்வையிட வந்த சென்னை மாகாண கவர்னர் பென்ட்லண்டு துரை அவர்களை அரண்மனையில் 24.10.1916 அன்று மிகவும் சிறப்புடன் வரவேற்றார். கவர்னர் வரவேற்பை மிகவும் பாராட்டினார்.

முருக பக்தரான இவர் மாதம் ஒருமுறை தவறாமல் சிவன்மலை சென்று வழிபட்டு வருவார். காலையும், மாலையும் நியமப்படி செபதபங்கள் செய்வார். பெரியவர்கள் குடும்ப விவசாய வேலைகளை மிக அக்கறையுடன் செய்து வந்தார். பி.எஸ். என அழைக்கப் பெறும் சென்னை உயர் அலுவலர்கள் பழக்கம் ஏற்பட்டது. சிங்கார வேலம்பிள்ளை சிறந்த நண்பர் ஆனார்.

23 வயது ஆகும்போது 1909-ஆம் வருடம் அறச்சலூர், சொட்டையூர், வெங்கனூர், குன்னத்தூர் வேட்டுவர்கள் "பெரிய வேட்டை"க்கு வழக்கம் போல் ஆடி 18 நோன்புக்கு முன்பு வந்தார்கள். அரண்மனை அருகேயுள்ள கோட்டைக்காட்டில் வேலிகளை வெட்டிப் புகுந்தபோது மாடுகள் மிரண்டு தாவின. மாடியில் இருந்த இவர் ஆட்களை அனுப்பினார். வாக்குவாதம் நடைபெற்றது மோதல் ஏற்பட்டது. குட்டப்பாளையம் அண்ணன் அர்ச்சுனன் அவர்களும் செலம்பக்கவுண்டன்வலசு மாமாவும் குதிரை மீது ஏறி துப்பாக்கியுடன் வெங்கரைவரை துரத்திச் சென்றார்கள். இவர் போலீசுக்குத் தகவல் கொடுத்து வரவழைக்கவே வேட்டுவர்எல்லோரும் கைதானார்கள். இரண்டாண்டு வழக்கு நடைபெற்றது. "வேளாண்மைக் காடு தோட்டங்களில் வேட்டையாடுவதை அர அனுமதிக்காது" என்று நீதிபதிகளும், ஜூரிகளும் தீர்ப்பளித்தனர். அதோடு கொங்கு வேளாளர்களைத் துன்பத்தில் ஆழ்த்திய "பெரிய வேட்டை" நின்றது.

இவர் ஈரோடு தாலூக்கா போர்டு தலைவராக விளங்கிச் சிறப்பாக பணியாற்றினார்கள். அதற்காக அடிக்கடி ஈரோடு சென்று அங்குள்ள அரண்மனை பங்களாவில் தங்குவார். அரசு இவருக்கு "ராயபகதூர்" பட்டம் வழங்கியது. (1912)

இவரை குட்டப்பாளையம் க.பழனிவேல் வாத்தியார், குட்டப்பாளைய சுப்பராய வாத்தியார் ஆகியோர் சிறப்பித்துப் பாடியுள்ளனர். சம்பிரதி ஓ.எ சடையபிள்ளை அவர்களும் பாடியுள்ளார்கள்.



இவர் பட்டாபிஷேக நிகழ்ச்சியை வேளாளபுராணம் பாடிய வீராச்சிமங்கலம் கந்தசாமிக்கவிராயர், பூந்துறை மகாவித்துவான் அவிநாசிலிங்கக் கவிராயர், தென்னங்கரைப்பாளையம் கே.எஸ். பழனிவேல் உபாத்தியாயர், சிலம்பகவுண்டன்வலசு கே.எஸ். வேலுமணி உபாத்தியாயர் போன்ற பல புலவர்கள் கண்டு பாடல்கள் பாடியுள்ளனர். அவை "பட்டாபிஷேக மங்களக்கவி" என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளது.

புலவர் அ.மு.குழந்தையவர்கள் "நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் தாலாட்டு" என்ற இலக்கியத்தைப் பாடியுள்ளார். சிலமலைப் புலவர் இவர் பெயரில் ஊஞ்சல்பாட்டுப் பாடியுள்ளார்.

"பார்மேவு நல்லசேனாபதிச் சர்க்கரைப்
பாண்டியன் தவத்துதித்த
பரவுபுகழ் நல்லதம்பிச் சர்க்கரைக் கோன்"

"நேர்சிறந்த நல்லதம்பிச் சர்க்கரைக் கோன்
நிலைத்த பெரும் புகழாளன்"

என்றெல்லாம் புலவர்கள் பலபடப் பாராட்டியுள்ளனர்.

கொங்கு நாட்டில் பல ஏட்டுச் சுவடிகளைத் தொகுத்து அச்சிட்டு நூலாக வெளியிட்டவர் திருச்செங்கோடு தி.அ. முத்துசாமிக் கோனார் அவர்கள். 1912 முதல் அவர் பட்டக்காரர் அவர்களிடம் தொடர்பு கொண்டு ஏடுகள் தேடுவதிலும், ஆய்வு செய்வதிலும், நூல்களை அச்சிட்டு வெளியிடுவதிலும் பல்வேறு உதவிகளைப் பெற்றுள்ளார். நல்லதம்பிச் சர்க்கரையார் காதல், சிவமலைக் குறவஞ்சி, கொங்குமண்டல சதகம், திருச்செங்கோட்டுப் புராணம் போன்ற நூல்களுக்கு உதவிகள் பெற்றுள்ளார். "ஆராய்ச்சி செய்து அச்சிடுதலில் சிறிதும் எனக்குப் பொருட்கவலை உண்டாகாதபடி பழையகோட்டைப் பட்டக்காரர் ஸ்ரீமான் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் கைமாறு கருதாது பேரன்புடன் பொருளுதவி செய்தனர். இவர்களது பெருந்தன்மையும் வண்மையும், வித்தியாபிமானமும் மதிக்கற்பாலன" என்று 1923-ஆம் ஆண்டு எழுதியுள்ளார்கள்.

1916 ஆம் ஆண்டு சென்னை மாநில கவர்னர் பெண்ட்லண்டு அவர்கள் பழைய கோட்டைக்கு வந்த விபரம் "கால்நடையின் காவலர்கள்" பகுதியில் கூறப்பட்டுள்ளது.

27.11.1935 ஆம் ஆண்டு நீலகிரி மாவட்டக் கழகம் கலைக்கப்பட்டுக் கோவை மாவட்டக் கழகத்தோடு இணைக்கப்பட்டது. கோவை மாவட்டக் கழகம், ஈரோடு மாவட்டக்கழகம் என இரண்டு மாவட்டக் கழகங்கள் அமைக்கப்பட்டன. ஏற்கனவே ஈரோடு வட்டக் கழகத் தலைவராகவும், கோவை மாவட்டக் கழகத் துணைத் தலைவராகவும் பணியாற்றிய பட்டக்காரர் அவர்கள் நீதிக்கட்சியின் சார்பில் காங்கயம் தொகுதியில் போட்டியிட்டு உறுப்பினராகி ஈரோடு மாவட்டக் கழகத் தலைவரானார். அதற்கு முன்பு 9.1.1933ல் இரண்டாவது முறையாக வட்டக்கழகத் தலைவராகத் (தாலூகா போர்டு) தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஈரோடு கான்சாகிப் கே.ஷேக் தாவூது சாயபு அவர்களால் முன்மொழியப்பட்டு ஈங்கூர் ஈ.ஆர்.கந்தசாமிக்கவுண்டர் அவர்களால் வழிமொழியப்பட்டு பெரும்பாலான வாக்குகளால் வட்டத்தலைவர் ஆகியிருந்தார்.

செவ்வாய், புதன் இரண்டு நாட்களிலும் ஈரோட்டில் இருந்த பழையகோட்டை அரண்மனைப் பங்களாவில் தங்கிப் பொது மக்கள் குறைகேட்டு உரிய அதிகாரிகள் மூலம் நீக்கினார். மற்ற நாட்களில் பழையகோட்டை அரண்மனையில் தங்கி வட்டக்கழகப் பணிகளைக் கவனித்து வந்தார்.

சென்னை மாநில கவர்னர் எர்ஸ்கின் பிரபு தன் துணைவியாரோடு 18.10.1939 அன்று தாலூக்கா போர்டு வரவேற்பை ஏற்றுக் கொண்டு புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தார். வட்டக் கழக வரவேற்பு ஏற்பாடுகளைக்

....



கவனிக்க கான்சாகிப் கே.எ.ஷேக் தாவூது சாயபு, பெரியார் அவர்களின் தங்கை எஸ்.ஆர்.கண்ணம்மாள் ஆகியோர் தலைமையில் குழுக்களை அமைத்துச் சிறந்த முறையில் ஏற்பாடு செய்திருந்தார்.

கவர்னர் தம் உரையில் "இந்தியாவிலேயே கால்நடை வளர்ப்பதில் மிகவும் தேர்ச்சி பெற்றவரை நீங்கள் தலைவராகக் கொண்டிருப்பதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். அவருடைய சிறந்த அனுபவம் இந்த போர்டுக்குட்பட்ட விவசாயிகளுக்கு மிகவும் பேருதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை" என்று பட்டக்காரரை மிகவும் பாராட்டினார்.

வரவேற்பு நிகழ்ச்சிகள் அனைத்தும் ஈரோடு கேசவலால் காளிதாஸ் சேட் அவர்களின் "காளிதாஸ் பிலிம் கம்பெனி" யினர் திரைப்படமாக எடுத்தனர்.

அன்று மாலை கவர்னர் எர்ஸ்கின் பிரபு தன் துணைவியாரோடு பழையகோட்டை அரண்மனைக்கு வருகைபுரிந்தார். 19.10.39 அன்று வெளிவந்த பத்திரிக்கைச் செய்தியை அப்படியே கீழே காணலாம்.

பழைய கோட்டையில் சென்னை கவர்னர்

தேநீர் விருந்துபசாரம்

அரண்மனையில் ஆனந்தக் காட்சி

மாட்டுப் பண்ணைக்கு கவர்னர் விஜயம்

வழிநெடுக கவர்னருக்கு உபசாரம் !

பழையகோட்டை அக்.19- சென்னை கவர்னரும், லேடி எர்ஸ்கினும் இன்று பிற்பகல் இங்கு விஜயம் செய்தார்கள். கவர்னர் வருவதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்னரே ஜமீன்தார்களும், மிராசுதார்களும் தலைமை அதிகாரிகளும் வந்து கூடிவிட்டனர்.

....

பழையகோட்டைப் பட்டக்காரர் ராயபகதூர் நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் அரண்மனைக்கு அரை மைல் தூரத்திலிருந்தே ரஸ்தாக்களில் வளைவுகளும் கொடிகளும் கட்டப்பட்டிருந்தன.

பெரிய கொடிகள் மரங்களின்மேல் ஆகாயத்தில் வெகு அழகாகப் பறந்து கொண்டிருந்தன. அரண்மனை முன் கால் மைல் தூரத்திற்கு அழகிய பந்தல் போடப்பட்டிருந்தது. நொய்யல் கரையில் இக்காட்சி கண்ணைக்கவரக் கூடியதாயிருந்தது.

கவர்னர் வருவதற்கு 15 நிமிடங்களுக்கு முன்னமே பிரமுகர்கள் தங்கள் ஆசனத்தில் வீற்றிருந்தனர். சரியாக 4.15 மணிக்கு கவர்னரும், லேடி மே ஜோரி எர்ஸ்கினும், கலெக்டரும், சூபரின்டெண்டும் வந்து சேர்ந்தனர். வாத்தியங்கள் கோஷித்தன.

வந்திருந்தவர்களில் முக்கியமானவர்கள் ஊத்துக்குளி ஜமீன்தார், சமத்தூர் ஜமீன்தார், புரவிபாளையம் ஜமீன்தார், நடராஜ காலிங்கராயர், ஜி.டி.நாயுடு, திவான்பகதூர் சி.எஸ்.ரத்தினசபாபதி முதலியார், சம்பந்த முதலியார், டிபுடி டைரக்டர் ஆப் அக்ரிகல்ச்சரல் சி.ராமசாமி, ஜில்லா மெடிகல் ஆபீசர் சி.ரெங்கபாஷ்யம், ஜில்லா வெட்டினரி ஆபீசர் தோழர் ஜயகான், கோவை வைஸ் பிரசிடெண்டு தோழர் ஆர்.வி.லக்ஷ்மிநாயுடு, சங்கர் கந்தசாமிக்கவுண்டர், ஈரோடு ஜில்லா போர்டு வைஸ் பிரசிடெண்டு சுப்பிரமணியக்கவுண்டர், ஈரோடு நகரசபை சேர்மன், லண்டன் மிஷனைச் சேர்ந்த மிஷனரிகள், ஆண், பெண் மிஷனரிகள் ஆகியவர்களும் ஆண்களும் பெண்களுமாக சுமார் 80 பிரபலஸ்தர்கள் தேநீர் விருந்தில் கலந்து கொண்டனர்.

தேநீர் விருந்து ஸ்பென்ஸர் கம்பெனியாரால் உயர்ந்த முறையில் நடத்தப்பட்டது. மேற்படி விருந்து முடிந்ததும் லேடி எர்ஸ்கின் பட்டக்காரர் அரண்மனையிலுள்ள பெண்களோடு சிறிது நேரம் உரையாடினார்கள்.

.. ..



5 மணிக்கு சுமார் 2 மைல் தூரத்திலுள்ள மாட்டுப்பண்ணையைப் பார்வையிட கவர்னர் பரிவாரம் புறப்பட்டது. அங்கும் வளைவுகளும் தோரணங்களும், கொடிகளும் கட்டப்பட்டிருந்தன. ஜனங்கள் திரள் திரளாக வழிநெடுகக் கூடியிருந்தனர்.

மொத்த மாடுகள் சுமார் 2000 காணப்பட்டன. அவைகளில் பொலி காளைகள் சுமார் 200, உழவு காளைகள் சுமார் 200 ஜோடி. குதிரைகள் சுமார் 200, மாடுகள் வயதுக்குத் தக்கபடி பிரித்து கட்டப்பட்டிருந்தது பார்க்க மிக்க அழகாயிருந்தது.

பட்டக்காரருக்குச் சேர்ந்த 14000 ஏக்கர் நிலத்தில் 6000 ஏக்கர் நிலங்களுக்கு மேல் மாடுகள் மேய்ச்சலுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

கவர்னரும் அவருடைய பரிவாரங்களும் 5.15க்குப் பண்ணைக்குள் நுழைந்தார்கள். வாத்தியங்கள் முழங்கின. பட்டக்காரர் கவர்னரையும் லேடி எர்ஸ்கின் முதலியோரையும் அழைத்துச் சென்று மாட்டுப்பண்ணையைச் சுற்றியும், குதிரைப் பண்ணையைச் சுற்றியும் காண்பித்தார். மாலைகள் சூட்டப்பட்ட பின் 6மணிக்கு இவ்விடம் விட்டு கவர்னரும் பரிவாரங்களும் ஈரோட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

கவர்னர் ஈரோட்டிலிருந்து பழைய கோட்டைக்குச் செல்லுகையில் இடைவழியில் அவல் பூந்துறையிலும், அறச்சலூரிலும் கவர்னருக்கும், லேடி எர்ஸ்கினுக்கும் மாலைகள் சூட்டப்பட்டன.

(விடுதலை 19.10.1939)

பட்டக்காரர் அவர்கள் சுயமரியாதை இயக்கத்திலும், நீதிக் கட்சியிலும் தொடர்பு கொண்டிருந்தார்கள். 17.2.1929 அன்று செங்கல்பட்டில் நடைபெற்ற முதல் சுயமரியாதை இயக்க மாநாட்டில்

.. ..

டாக்டர். சுப்பராயன் அவர்களோடு பட்டக்காரரும் பவகல் மகாராசா படத்திறப்பு விழாவில் பங்கேற்றார்கள். பெரியார் அவர்கள் தனிப்பட்ட முறையில் பட்டக்காரர் அவர்கட்கு நன்றி கூறினார்

பெரியார் அவர்கள் 11 மாதம் மேனாட்டுப்பயணம் முடிந்து 11.11.1932 இல் ஈரோடு வந்தபோது வரவேற்றவர்களில் பட்டக்காரரும் ஒருவர். தாலுக்கா போர்டு, ஜில்லா போர்டு, சட்டசபை தேர்தல்களில் நீதிக்கட்சி வேட்பாளராகவே பட்டக்காரர் அவர்கள் போட்டியிட்டார்கள்.

தாலுக்கா போர்டு, ஜில்லா போர்டு, பட்டக்காரர் செய்திகள் குடியரசு, விடுதலை இதழ்களில் தவறாமல் பிரசுரிக்கப்பட்டன.

இந்த தொடர்பே அவரது இளைய மகன் பெரியாரின் பெருந்தொண்டராகக் காரணமாக இருந்தது.

பெருந்துறை காசநோய் மருத்துவமனையின் வருடாந்திரக் கூட்டம் கோவை மாவட்ட ஆட்சியர் ஏ.சி.வுட் ஹௌஸ் அவர்கள் தலைமையில் கோவையில் 8.7.1937 அன்று நடைபெற்றது. பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரையார், திவான் பகதூர் சி.எஸ்.ரத்தினசபாபதி முதலியார், டி.ஏ.இராமலிங்கம் செட்டியார், வி.சி.வெள்ளியங்கிரிக்கவுண்டர், பி.சி.சாத்தப்ப செட்டியார், வி.எஸ்.செங்கோட்டையா, ஏ.வேணுகோபால பிள்ளை, எஸ்.வின்சென்ட் முதலியோர் கலந்து கொண்டனர். பலர் மருத்துவமனை வளர்ச்சிக்கு நன்கொடை அளித்தனர்.

பட்டக்காரர் அவர்கள் ஒரு வார்டு கட்டிக் கொடுத்தார்கள். அந்த மருத்துவமனையின் "ஜீவிய கால அங்கத்தினராக" (ஆயுட்கால உறுப்பினர்) நியமிக்கப்பட்டார்கள்.



## 27) நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார்

26-ஆம் பட்டம் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கட்கும், சிலம்பகவுண்டன் வலசு வெங்கட்ட ரமணசாமிக்கவுண்டர் மகள் மீனாட்சி அவர்கட்கும் மூத்த மகனாக 2-4-1921 அன்று பிறந்தவர்.

இவரது தந்தை மறைந்தது 08.09.1945 ஆகும். இவர் 28.08.1945 முதல் இளையபட்டக்காரர் ஆனார். தொடக்கத்தில் அரண்மனையிலேயே ஆசிரியரிடம் தமிழும், தெலுங்கும் கற்றார். பின்னர் ஈரோட்டு அரண்மனை பங்களாவில் தங்கி ஆங்கிலக் கல்வி கற்றார். பின்னர் கோயமுத்தூர் பங்களாவில் தங்கி கோவையில் பள்ளியிறுதித் தேர்வு வரை கற்றுத் தேர்ச்சி பெற்றார். [illegible]

ஆலாலசுந்தர பண்டிதர் அவர்களையும், பாஸ்கர தீட்சிதர் அவர்களையும் இறைநெறியில் வழிகாட்ட குருவாகக் கொண்டார். [illegible]

ஈரோடு நில அடமான வங்கித் தலைவராகவும், கோயமுத்தூர் மாவட்டக் கழகத் தலைவராகவும் விளங்கினார். நாமக்கல்லில் நடைபெற்ற கொங்கு வேளாளர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கினார். கொங்கு வேளாள கவுண்டர்கள் பெருமன்றம் தொடங்கித் தலைவராகத் திகழ்ந்தார். இச்சமூகத்தில் முதல் அமைப்பு இதுவேயாகும்.

சகோதரியார் வள்ளியம்மாள் அவர்கள் திருப்பூர் புதூர் வெங்கடாசலக் கவுண்டர் அவர்களையும், சிவகாமியம்மை பெத்தம்பாளையம் குப்புசாமி அவர்களையும் திருமணம் செய்து கொண்டனர். குப்புசாமி அவர்கள் தமிழ்நாட்டின் காவல்துறைத் துணைத்தலைவராக விளங்கினார். சகோதரியார் ருக்மணி அம்மையார் அவர்கள் ஊத்துக்குளி ஜமீன்தார் அகத்தூர் முத்துராமசாமிக் காலிங்கராயர் அவர்களை மணந்து கொண்டார்கள். அவருடைய சகோதரி அகத்தூர் அம்மாள் அவர்களை இவர் திருமணம் செய்து கொண்டார்.

அரண்மனை சண்டிகாதேவியம்மன் மரச்சப்பரத்தில் இருந்ததை மாற்றி கும்பகோணம் பூபதி அவர்களைக் கொண்டு வெள்ளியில் அமைத்தார். நவராத்திரி பூசை விஜயதசமி விழாக்களை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார். அப்போது நடைபெறும் சாயபு கத்தி வீச்சு, குதிரைப் பூசை ஆகியவைகளையும் மிகவும் சிறப்பாக நடத்தினார்.

[illegible]

தந்தையார் அவர்களைப் போலவே கால்நடைப் பண்ணையையும், விவசாயத்தையும் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டார். பல கண்காட்சிகளில் பழையகோட்டைக் காளைகளும், பசுக்களும் பல சிறப்புப் பரிசுகளைப் பெற்றன. டெல்லியில் நடைபெற்ற அகில இந்தியக் கால்நடைக் கண்காட்சி குறிப்பிடத்தக்கதாகும்.

சிவன்மலையாண்டவர் கோயில் அறங்காவலராக இருந்து பூசைகளையும், தேர்த்திருவிழாக்களையும் சிறப்பாக நடத்தினார். பொங்கல்விழாவையும் பட்டிப் பொங்கல் விழாவையும் மிகச் சிறப்பாக நடத்தினார்.

காங்கயம் பள்ளிக் கட்டிடத்தைத் தந்தையார் பெயரிலும், பள்ளி விடுதியைத் தம்பி அர்ச்சுணன் பெயரிலும் கட்டிக் கொடுத்தார். அர்ச்சுணன் நினைவு நாளில் அன்னதானத்தைச் சிறப்பாகச் செய்தார்.

காளை சேர்க்கத் தங்கள் மாடுகளைக் கொண்டுவரும் உழவர்கட்கு அன்புடன் உதவுவார்.

சென்னையில் தீரன் சின்னமலைக்குத் தமிழக அரசின் சிலையமைப்புக் குழுவில் அங்கம் பெற்று வரலாற்றுக் குழுத் தலைவராக விளங்கினார். புலவர் செ.இராசு அவர்களைத் தஞ்சையிலிருந்து வரவழைத்து கள ஆய்வு செய்து வரலாற்று நூல் உருவாக்க முக்கியக் காரணமாக விளங்கினார்.

சட்டமன்ற உறுப்பினராகவும், தமிழக மேலவை உறுப்பினராகவும், விளங்கித் தமிழக அமைச்சரவையில் கூட்டுறவு, உணவு, அமைச்சராகச் சிறப்புடன் பணியாற்றினார்.



## நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் உயர்நிலைப்பள்ளி

பழையகோட்டைப் பட்டக்காரர் நினைவுக் குறிக்குழு 4.6.1947 அன்று திரு.வி.சி.வெள்ளியங்கிரிக் கவுண்டர் தலைமையில் கூடியது. பழையகோட்டை மாட்டுப்பண்ணையில்(புதூர்) காலஞ்சென்ற பட்டக்காரர் ராயபகதூர் நல்லதம்பி சர்க்கரை மன்றாடியார் அவர்களின் உருவச்சிலை வைப்பதென்றும், அன்னாரின் பெயரால் காங்கயத்தில் ஒரு உயர்நிலைப்பள்ளி கட்டுவதென்றும், அன்னார் மகனார் காலஞ்சென்ற இளையபட்டக்காரர் ந. அர்ச்சுனன் அவர்கள் நினைவுக் குறியாய் ஒரு மாணவர் உணவு விடுதி கட்டுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. பழையகோட்டைப் பட்டக்காரர் திரு.ந. நல்லசேனாபதிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் ரூ.2,50,000/- கொடுப்பதாக வாக்களித்தார்கள்.

### பள்ளி திறப்பு விழா

4.7.1948 அன்று காங்கயத்தில் உள்ள நடுநிலைப்பள்ளியில் 9ஆம் வகுப்பைத் தொடங்கி வைத்துப் பள்ளியைப் பட்டக்காரர் திரு. நல்லசேனாபதிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் திறந்து வைத்தார்கள். அப்போது அவர்கள் ஆற்றிய உரை "உயர்நிலைப் பள்ளிகள் எல்லாம் பெரும்பாலும் நகரங்களிலேயே உள்ளன. இந்த நடுநிலைப்பள்ளியில் மூன்றாவது படிவம் படித்து முடித்த பிள்ளைகள் பெரும் பணச்செலவு செய்து நகரத்திற்குச் சென்று படிக்க முடியாததால் அத்துடன் படிப்பை நிறுத்திவிடுகின்றனர். இக்குறைபாடு நீங்கி நமது பிள்ளைகள் எல்லாம் உயர்தரக் கல்வி கற்பதற்காக காங்கயம் நடு நிலைப்பள்ளியை உயர்நிலைப்பள்ளி ஆக்க வேண்டுமென்று என் தந்தையார் நீண்ட காலமாக ஆசைப்பட்டார்கள். அன்னாரின் ஆசை இன்று நிறைவேறியதற்காக நான் பெருமகிழ்வெய்துகிறேன். இப் பெருமை என்னை மட்டும் சேர்ந்ததல்ல. காங்கய நாட்டுக்கே பெருமையாகும். புதிய கட்டிடம் கட்டி முடியும் வரையிலும் இங்குள்ள எனது கட்டிடத்தில் 4ஆம் படிவ வகுப்பு நடத்த ஏற்பாடு செய்துள்ளேன்.

நமது நாட்டுப்புற மக்கள் கல்வி பயிலப் பள்ளி மட்டும் இருந்தால் போதாது. ஒவ்வொரு உயர்நிலைப்பள்ளி உள்ள இடத்திலும் மாணவர் விடுதி கட்டாயம் வேண்டும். "அர்ச்சுனன் மாணவர் விடுதி" என காலஞ்சென்ற என் தம்பியின் பெயரால் மாணவர் விடுதி ஒன்று நடத்த முடிவு செய்துள்ளோம். கட்டிடம் கட்டியாகும் வரையிலும் மாணவர் விடுதியும் எங்கள் கட்டிடத்திலேயே நடைபெறும்."

-வேளாளன்", புலவர் அ.மு.
குழந்தை அவர்களின் மாத இதழ். 1.8.1948.

~~இளைய பட்டக்காரர்~~

~~அர்ச்சுனன் மன்றாடியார்~~

## பழையகோட்டை மரபு:

பழையகோட்டை மரபில் எப்பொழுதும் சாதிமத வேறுபாடு, ஏற்றத்தாழ்வு, மேல்-கீழ் என்ற வேற்றுமை பாராட்டுவது இல்லை. 19ஆம் பட்டக்காரர் கொற்றவேல் சர்க்கரையார்

"சாதிமத பேதம் எண்ணாதநான் கொற்றவேல்"
"தனவானும் ஏழையும் சமம் என்னும் கொற்றவேல்"

என்று தன்னைப்பற்றிக் கூறுகிறார்.

"சார்ந்த மனமே விரதம் அல்லால் பிறர் விரதம்
சனிவெள்ளி விரதம் ஏகாதசி விரதம்
யாவுமே தப்பு"

என்பதும் அவர் பாடல் பகுதி.

"கோதைநகர் வண்ணான் குலவீரபத்திரன்" என்ற சர்க்கரை மன்றாடியார் காதல் நூல் பாடிய புலவரின் எச்சில்வாயைக் கழுவினார் ஒரு பட்டக்காரர். காதல் நூலில்

"பண்டு பறையன் என்று பாராமல் கூடவைத்து
உண்டு புகழ்படைத்த உத்தமக் காமிண்டன்"

என்று கூறப்படுகிறது. அந்திம காலத்தில் ஒரு பட்டக்காரரை அந்தணருக்குக் கறவைப்பசு கொடுக்குமாறு கூற அதை மறுத்து சமையல்காரருக்கு கறவைப்பசு கொடுத்தார் ஒரு பட்டக்காரர்.

தங்கள் கொடுமணல் காணியுரிமையை வெற்றிலைக்காரர் என்னும் தேவர் சமுதாயக் கணக்கன் கூட்டத்தார் அனுபவிக்க ஒரு பட்டக்காரர் கொடுத்தார்.

..



## நல்லதம்பிச் சர்க்கரையார்

26 ஆம் பட்டக்காரர் தந்தை பெரியாரின் சிறந்த நண்பர். முதல் சுயமரியாதை மாநாடு செங்கல்பட்டில் நடந்த அன்று பகல் மகாராசா படத்திறப்பு விழாவில் 17.2.1929அன்று தந்தை பெரியாருடன் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரையார் (திராவிடன் 18.2.1929). தந்தை பெரியார் 1931 டிசம்பர் மாதம் புறப்பட்டு எகிப்து, ருஷியா, கிரீஸ், துருக்கி, ஜெர்மனி, ஸ்பெயின், பிரான்சு, போர்ச்சுகல், இங்கிலாந்து, இலங்கை முதலிய நாடுகட்குப் பயணம் செய்து 11 மாதம் கழித்து 1932 நவம்பர் 11 அன்று ஈரோடு வந்தார். அவரை வரவேற்றவர்களில் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரையாரும் ஒருவர்.

ஈரோடு தாலுக்கா போர்டு தலைவராக அப்பொழுது பட்டக்காரர் இருந்தார். தந்தை பெரியார் அவர்கட்கு தாலுக்கா போர்டு சார்பில் வரவேற்பு அளித்தார். 9.1.1933 அன்று தாலுக்கா போர்டு உறுப்பினர்கள் கூட்டத்தில் ஈரோடு முதலாளி கே.ஏ.ஷேக்தாவூது சாயபு அவர்கள் முன்மொழிய ஈங்கூர் ஈ.ஆர்.கந்தசாமிக்கவுண்டர் அவர்கள் வழிமொழிய இரண்டாவது முறை பட்டக்காரர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## ந.அர்ச்சுனன் மன்றாடியார்

நல்லதம்பிச் சர்க்கரையாரின் இரண்டாவது மகன் ந.அர்ச்சுனன் அவர்கள். இளமையிலேயே சீர்திருத்த எண்ணம் கொண்டிருந்த அர்ச்சுனன் தன் தந்தையின் நண்பராகிய பெரியாருடன் நெருங்கிப் பழகி அவர் சீடர் ஆனார். 18.10.1943 அன்று கோவை மாவட்ட திராவிடர் கழகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பெத்தாம்பாளையம் பழனிசாமி செயலாளர். மாவட்டக் கழக நிர்வாகக் கூட்டங்களைத்தும் ஈரோடு பழைய கோட்டை அரண்மனைப் பங்களாவிலேயே நடத்துவார்.

....

19.11.1943 அன்று அறிஞர் அண்ணா அவர்களின் 'திராவிடநா... வளர்ச்சி நிதிக்காக அண்ணா அவர்களின் சந்திரோதயம் நாடகம் ஈரோடு செண்ட்ரல் தியேட்டரில் நடந்தது. தமிழ்நாட்டில் எங்கும் வசூலாகாத அள... 5000ரூபாய் வசூலாக அர்ச்சுனன் அவர்கள் காரணமாக விளங்கினார். அவ... பெரிய அளவில் நன்கொடையும் அளித்தார். அந்நாடகத்தில் அண்ணா அவர்களும் நடித்தார்.

அந்நிகழ்ச்சியில் தந்தை பெரியார் அவர்கட்குக் கோவை மாவட்... திராவிடர் கழகம் சார்பில் கவிதையில் அருமையான வரவேற்பிதழ் ஒன்றை அர்ச்சுனன் வாசித்தளித்தார். அது பலராலும் புகழப்பட்டது.

1943-44ல் டி.கே.எஸ்.சகோதரர்கள் ஈரோட்டில் 11 மாதங்கள் தங்கி நாடகங்கள் நடத்தினர். அவர்கள் ஊர் திரும்பியபோது எல்லோருக்கும் விருந்தளித்து பரிசுகளும் பண உதவியும் அர்ச்சுனன் செய்தார்.

கோவை மாவட்ட திராவிட இளைஞர் கழகத்தையும் உருவாக்கி அதற்கும் தலைமையேற்று அதன் முதல் ஆண்டு மாநாட்டை 17.4.1944 அன்... ஈரோடு மாசன உயர்நிலைப்பள்ளி சரசுவதி உறாலில் மிகச் சிறப்பாக நடத்தினார். அறிஞர் அண்ணா அவர்கள் தலைமை தாங்கினார்கள். அக்கூட்டத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்கள் இரா.நெடுஞ்செழி... கா.அன்பழகன் ஆகியோரை அழைத்திருந்தார். அவர்கள் இருவரையும் அழைத்து அறிமுகப்படுத்தியவர் அர்ச்சுனன் என்றால் அது மிகையாகாது. அம்மாநாட்டில் அன்பழகன் கொடியேற்றினார். நெடுஞ்செழியன் தொடக்க உரையாற்றினார்.

அன்று இரவு பாரதிதாசன் பிறந்தநாள் விழாவைத் தலைமை தாங்கி அர்ச்சுனன் மிகச்சிறப்பாக நடத்தினார். விழாப்பந்தல் எங்கும் பி.தியாகராயர், பெரியார், ஏ.டி.பன்னீர்செல்வம், பாரதிதாசன், ஜீ... ஆகியோர் படங்கள் அலங்கரித்தன. இக்கூட்டத்திலும் இரா.நெடுஞ்செழியன் கா.அன்பழகன் கலந்து கொண்டனர்.



கோபி (27.5.44)உட்படப் பல ஊர்களுக்குச் சென்று அங்கெல்லாம் திராவிடர் கழகத்தைத் தொடங்கி வைத்தார். அப்பயணங்களில் பெத்தாம்பாளையம் பழனிசாமி அவர்களும் உடன் கலந்து கொண்டார்.

1944 ஆம் ஆண்டிலிருந்து கருஞ்சட்டைத் தொண்டர்களைப் பெரியார் உருவாக்கினார். 11.5.1946 அன்று மதுரை வைகைக் கரையில் தியாகராயர் நகரில் நாகம்மையார் பந்தலில் 60000 பேர் கூடிய பெரும் மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டிற்குப் பெரியார் தலைமை தாங்கினார். அண்ணா அவர்கள் கொடியேற்றுவித்தார். ந.அர்ச்சுனன் அவர்கள் மாநாட்டுச் சிறப்புரை ஆற்றினார். ந.அர்ச்சுனன் அவர்கள் தம் துணைவியாரோடு கருப்பு உடையில் அம்மாநாட்டில் கலந்து கொண்டார்.

திராவிடர் கழகத்தின் மாநிலக் குழுவின் துணைத் தலைவராகவும் அர்ச்சுனன் தேர்ந்தெடுக்கப்பட்டார். திராவிடர் கழகத்தின் பணியைத் தம் முழுநேரப் பணியாக ஆக்கிக்கொண்டார். 26.5.1944 அன்று நடைபெற்ற தன் சகோதரியார் வள்ளியம்மை ஆர்.வி.ஈ.வெங்கடாசலக்கவுண்டர் திருமணத்தின் காரணமாக சில தினங்கள் கழக நடவடிக்கைகளில் ஈடுபட இயலவில்லை என்று 10.6.1944 'குடியரசு' இதழில் தெரிவித்திருந்தார்.

திராவிடர் கழகச் செயல் திட்டங்களுக்காக 50000 ரூபாய் நிதி சேகரிக்க வேண்டும் என்று திராவிடர் கழகம் 9.2.1946ல் தீர்மானித்தது. துணைத்தலைவரான ந.அர்ச்சுனன் நிதிதிரட்டும் குழுவின் தலைவராக நியமிக்கப்பட்டார். டிக்கட் புத்தகங்கள் அடித்து மாநிலம் எங்கும் அனுப்பி மாவட்டத் தலைநகர்களுக்கும், முக்கிய ஊர்களுக்கும் பயணம் மேற்கொண்டு வசூலில் பேரார்வம் காட்டினார் (4.3.46 திருச்சி).

.. ..

. . . .

எழுத்திலும், பேச்சிலும் பெரியார் அவர்களும், அண்ணா, நெடுஞ்செழியன், கா. அன்பழகன், ஈ.வி.கே. சம்பத் போன்ற அனைவரும் அர்ச்சுனன் அவர்களை "இளையபட்டக்காரர்" "மொரப்பட்டக்காரர்" என் மிக அன்பாக அழைத்தனர். ஈரோட்டிலிருந்த பழையகோட்டை அரண்மனை பங்களா திராவிடர் கழக அலுவலகம் போலவே பயன்பட்டது. நிர்வாகக் குழுக் கூட்டங்கள் அங்கு நடைபெற்றன. பேரணிகள், ஊர்வலங்கள் அங்கிருந் புறப்பட்டன. என்.இ. பாலகுரு மாணவர் இயக்கப் பிரச்சாரகராக நியமிக்கப்பட்டார். அவருடைய முகவரியே "என்.இ. பாலகுரு, பழையகோ பங்களா, ஈரோடு" என்பதுதான்.

அர்ச்சுனன் அவர்கள் சிறந்த பேச்சாளராகவும், கவிஞராகவும் திகழ்ந்தார்.



## நிறைமொழி மாந்தர்கள்

தொல்காப்பியர், மந்திரம் என்பது விளங்காத சொற்களால் ஆனவை அல்ல. "வையத்துள் வாழ்வாங்கு வாழும் சான்றோர்கள் வாயிலிருந்து வெளிவரும் சொற்களே மந்திரங்களாகும்" என்று கூறுகிறார்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்பது தொல்காப்பியர் கூற்று ஆகும். அவ்வாறு நிறைமொழி மாந்தர்களாகப் பழைய கோட்டை மரபில் பல பண்புடைப் பெருமக்கள் வாழ்ந்துள்ளனர். அவர்கள் பலரும் பாராட்டத் தங்கள் வாழ்வில் பல அற்புதங்கள் செய்துள்ளனர். அதற்கு அவர்கள் வாழ்ந்த தூய்மையான தன்னலமில்லாத வாழ்க்கையும், மிகு ஒழுக்கமும், தெய்வ பக்தியும், நற்பண்புகளும் காரணங்களாகும்.

## பாம்பு விஷம் உறுஞ்சியது

மனிதன் பாம்பைக் கண்டு பயந்தான். அதை வழிபட்டான். கோயில்கள் எங்கும் பாம்பு உருவங்களைச் சிலையாகச் செய்து தெய்வம் ஆக்கினான். வழிபட்டான். நாகேசுவரன் என்ற பெயரில் கோயில்களை உருவாக்கினான். சிவபெருமானைப் "பாம்பலங்காரர்" என்று பெயரிட்டுப் போற்றினான். விஷம் உடைய நாகத்தை நல்ல பாம்பு என்றான். நாகருக்குப் பொங்கல் வைத்தால் அதனால் தமக்குத் தீங்குகள் வராது என்று நினைத்தான். தன் மழலைச் செல்வங்களுக்குக் கூட

"காக்கைக்குப் பொங்கல் வச்சுக்
கை முறிஞ்சு போச்சு
நாகருக்குப் பொங்கல் வச்சு
நல்லாப் போச்சு"

என்று பிஞ்சு உள்ளங்களிலே பதிய வைத்தான். நாக வழிபாடு உலகெங்கும் பரவியிருந்தது.

உலகில் உள்ள பாம்புகளில் மிகச் சிலவற்றிற்கே ஆளைக் கொல்லும் விஷம் உள்ளது என்பர். கொங்கு நாட்டுக்கே உரிய நீதி நூலாகிய "நீதி ஒழுக்கம்"

"கடியாத பாம்பை அடியாதே"

என்று கூறுகிறது. அப்படியிருந்தும் ஆண்டுதோறும் பலர் பாம்புக்கடியால் மரணமடைகின்றனர். மருந்துகளாலும் மந்திரங்களாலும் "விஷம் இறக்கி" பாம்புக்கடி பட்டவர்களைக் காப்பாற்றும் முயற்சியில் பல அருளாளர்கள் ஈடுபட்டுள்ளனர்.

பழைய கோட்டை மரபில் சொக்கன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் நிறைவாழ்வு வாழ்ந்தவர். தமக்கென வாழாப் பிறர்க்குறியாளர். மந்திரம் கைவந்து கைமாறு கருதாமல் பாம்பு கடித்து விஷம் ஏறிய பலரைக் காப்பாற்றும் நற்பணியைச் செய்தார். அவர் புகழ் பரவியது.

அவர் மருமகன் முத்துவேல் கவுண்டர் காரையூர் அருகிலேயே விவசாயம் செய்து வந்தார். ஒருநாள் தோட்டத்தில் பணிபுரிந்த அவரைப் பாம்பு கடித்து விட்டது. கடித்தது நல்லபாம்பு. விஷம் தலைக்கேறி அவர் மயக்கமுற்றார். இதைக் கேள்விப்பட்ட பட்டக்காரர் - மாமனார், விரைந்து சென்று மருமகனைப் பார்த்தார். உடனே ஒரு மந்திரத்தை உச்சரித்தார். மருமகனைக் கடித்த பாம்பு பட்டக்காரரைத் தேடி வந்தது. உடனே பட்டக்காரர் "செயங்கொண்ட நாதர் மீது ஆணை, அவரை அலங்கரிக்கும் நல்ல பாம்பே, நீ கக்கிய விஷத்தை எடுத்துக் கொள்" என்றார், என்ன ஆச்சரியம். மருமகனைக் கடித்த கடிவாயில் பாம்பு வாயை வைத்து தான் கக்கிய விஷத்தை உறிஞ்சியது. மருமகன் மீது படர்ந்திருந்த நீலநிறம் மெல்ல மாறியது. தூங்கி விழித்து எழுந்தது போல மருமகன் உயிருடன் எழுந்தார். ஆம்! பட்டக்காரர் தன் மருமகனுக்கு மறுவாழ்வு அளித்தார்.

இந்த அற்புத நிகழ்ச்சியை அருகிலிருந்து கவனித்துப் பிரமிப்படைந்தார் பழையகோட்டை அரண்மனைத் தலைமைக் கணக்கர் சம்பிரதி ராமபிள்ளை ஒரு அழியாத கவிதையாகப் பாடினார். அப்பாடல்

"சொக்கன் எனும் சர்க்கரை உத்தமக் காமிண்டர்
சொந்த மருமகன் முத்துவேல் வேளுக்கு
மிக்க விஷம் கூடியதோர் சர்ப்பம் ஒன்று
மிரட்ட வந்து கடித்ததனால் விஷமும் மீற
தக்கதொரு மந்திரத்தால் அழைக்கச் சர்ப்பம்
தான் வரவே சர்க்கரையார் அதனைப் பார்த்து
கக்குவிஷம் என்று சொல்லக் கடிவாய் தன்னில்
கடித்தபல் கொண்டுறிஞ்சிக் காடே கிற்றே"

என்பது அச்சிறப்புமிகு பாடலாகும்.



பாம்புக்கடிக்கு அடி:

முதல்வருக்குப் பின் பழையகோட்டை மரபில் அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்டர் என்ற பெயரில் விளங்கியவர் ஐந்தாம் பட்டக்காரர். அவர் மனைவி பூந்துறைக் காடை குலத்துப் பெரியவீட்டு வாரணவாசிக் கவுண்டர் மகள். வாரணவாசி என்பது காசியின் பெயர். பூந்துறைக் காடை குலத்தில் பலர் அப்பெயரைப் பெற்றிருந்தனர். அவர் ஒரு தத்துவஞானி. சமய தீட்சை கைவரப் பெற்றுப் பலருக்குத் தீட்சை அளித்தவர். மருமகன் அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியாரும் தன் மாமனாரிடம் பஞ்சாக்கர மந்திரம் உபதேசம் பெற்றார். சமயப் பெருவாழ்வு வாழ்ந்தார். அழகன் சர்க்கரை மிகச் சிறந்த கவிஞரும் ஆவார். செயங்கொண்டீசர் பதிகம், சண்டிகா தேவி பதிகம் ஆகியவற்றைப் பாடிப் பரவியவர். அவர் தீர்த்தயாத்திரை சென்று தெய்வீகத்தலங்கள் பலவற்றைத் தரிசித்தவர். இராமேசுவரம் சென்றவர் பக்தி முதிர்ச்சியால் முத்திநகர் ஏழில் ஒன்றாகிய காசி சென்று விசாலாட்சி சமேத விசுவநாதரைத் தரிசிக்கும் பெருவிருப்புடன் காசி சென்றார். ஆனால் காசித்தலத்தில் விசுவநாதருடன் ஐக்கியம் ஆனார். அவர் விருப்பப்படி காசித்தலத்தில் அவர் நினைவால் ஒரு சிவலிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டது. அந்த லிங்கத்தை இன்னும் மக்கள் "சர்க்கரைலிங்கம்" என்றே பெயரிட்டு அழைக்கின்றனர்.

அவர்மீது அன்பு கொண்ட பழையகோட்டை அரண்மனையாரும், பயிரகுலப் பங்காளிகளும் சர்க்கரைலிங்கம் என்ற பெயரில் ஒரு லிங்கம் பிரதிட்டை செய்தனர். கஸ்தூரிபா கிராமம் அருகில் கொன்னக்காடு என்ற இடத்தில் அந்த சர்க்கரைலிங்கம் கோயில் உள்ளது. அதைக் குறிக்கும் சில கல்வெட்டுக்களும் அங்கு உள்ளன. அங்கு காசித் தம்பிரான் என ஒருவர் இருந்ததாக அருகில் கல்வெட்டும் உள்ளது.

அழகன் சர்க்கரையார் (5) ஒரு அதிசயப் பிறம்பு ஒன்றை வைத்திருந்தார். அந்தப் பிறம்பினுள் மந்திரம் பொறித்த தங்கத் தகடு ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அவர் அந்தப் பிறம்பை மிகவும் புனிதம் வாய்ந்ததாகக் கருதினார். துயதீபம் இட்டுப் பிறம்புக்கு வணக்கம் செலுத்துவார். அப்பிறம்பை கண்ணெனக் காத்துவந்தார்.

பழையகோட்டைப் பகுதியில் யாருக்காவது பாம்புக் கடி ஏற்பட்டு விஷம் ஏறினால் அவர்களைப் பட்டக்காரரிடம் எடுத்து வருவார்கள். பிறம்புக்கு வழிபாடு செய்து காரையூர் செயங்கொண்ட நாதரை வணங்கி பிறம்பை எடுத்து பாம்பு கடித்தவரை 108 முறை பட்டக்காரர் தலையில் அடிப்பார். விஷம் முற்றி நாடி படுத்துவிட்டவர்கள் கூட பிறம்படியால் உயிர்பெற்றனர்.

இதை ஒரு புலவர் ஒரு பாடலாகப் பாடி நடந்த அதிசய நிகழ்ச்சியை ஆவணப்படுத்தியுள்ளார்.

"நயங்கொண்ட விஞ்சை உரு லட்சம் செய்தே
நான் அழகன் சர்க்கரைஎன் கைப்பி றம்புள்
சுயங்கொண்ட தங்கத்தின் தகடு தன்னைச்
சொருகிஅடைத் துள்ளதற்குத் தூபம் இட்டு
செயங்கொண்ட நாதரின்மேல் ஆணை வைத்துச்
சிரம்மீதில் நூற்றெட்டுத் தரம்அ டித்தால்
பயங்கொ ண்டசர்ப்பவிடம் ஏறி நாடி
படுத்துவிட்ட மனிதரையும் எழுப்பலாமே"

என்பது அப்பாடலாகும். இப்பாடல் அந்தப் பிறம்பின்மீது எழுதப்பட்டிருந்தது என்பர்.

பேய்பிடித்தால் பிறம்படி

மருமகன் முத்துவேல் கவுண்டரைப் பாம்பு விஷத்திலிருந்து காப்பாற்றிய சொக்கன் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியாரிடமும் ஒரு அதிசயப் பிறம்பு இருந்தது. யாருக்கேனும் பேய் பிடித்திருந்தால் அவர்களைச் சொக்கன் சர்க்கரையார் 108 அடி அடிப்பார். அடி பொறுக்காமல் பேய் விலகிவிடும். இந்த நிகழ்ச்சியையும் பழையகோட்டை அரண்மனைச் சம்பிரதி ராமபிள்ளை ஒரு அழகிய வெண்பாவாகப் பாடியுள்ளார். அப்பாடல்

"செயித்தபிறம் பால்வந்து சேர்ந்தசொக்கன் சர்க்கரைக்கு
வயித்தியம் ஒன்றுவந்து வாய்த்ததுவே - பயித்தியத்தை
நூத்திஎட்டு மேஅடித்து நோவுபொறுத் தோர்க்கந்த
மாத்திரத்தில் நீக்குமருந் தாம்"

என்பதாகும்.



நஞ்சையன் சர்க்கரை நாவன்மை

பழையகோட்டை மரபில் நஞ்சையன் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் நல்வாழ்வு வாழ்ந்த ஒழுக்கசீலர். வாழ்க்கையிலும், பழக்கவழக்கங்களிலும் மிகக் கட்டுப்பாடு உடையவர். குதிரையேற்றத்தில் மிகவும் வல்லவர்.

"நெட்டைச் சிவலைக் குதிரை ஏறிஇவர்
நித்தமும் ராவிலே சுற்றுவாராம்"

என்கிறார். இவரைப் பாடிய மடவளாகம் சிவராம தேசிகர்.

தெற்குச் சீமையிலிருந்து இவர் காலத்தில் வந்த தீவட்டிக் கொள்ளைக்காரர்களை அடித்து விரட்டினார். கையில் பட்டத்து வாளை எடுத்துக் கொண்டு குதிரை மீதேறி மெய்க்காவலன் சொக்கநாதனோடு ஆனூர் அம்மன் கோயிலில் இராக்காலம் பூசையில் வழிபட்டு வந்த பின்னரே உணவு உண்ணும் பழக்கமுடையவர்.

ஓலையிலும், கணக்கு ஏடுகளிலும், பத்திரங்களிலும் தன் கையெழுத்தாகத் தன் பெயரை எழுதாமல் "ஆனூர் அம்மன் துணை" என்று எழுதும் பழக்கத்தை வாழ்நாள் முழுதும் கொண்டிருந்தார்.

அதிகாலையில் எழுந்து காலைக்கடன்களை முடித்துக் கிழக்கு வெளுக்கு முன் தன் காலைச் சிற்றுண்டியை முடிப்பார். அவர் சாப்பிடுவது என்ன தெரியுமா? காளியாண்டிப் பண்டாரம் செய்த கம்பஞ்சோற்றுடன், தனது மின்வாய்க்காட்டில் பழுத்த வாழைப்பழம், பசுத்தயிர், வழுக்கைப் பதத்தில் உள்ள இளநீர் இவைகளைக் கலந்து சாப்பிடுவாராம்.

"நிறைமொழி" என்பதற்குப் பரிமேலழகர் "விரும்பிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தே விடும் மொழி" என்பார். அதுபோல் நஞ்சயன் சர்க்கரையார் வாக்குப் பலிதம் உடையவர். அவர் சொல் அப்படியே நடந்துவிடும் ஆற்றல் உடையது.

"வாழ என்றுசொன்னால் வாழ்ந்திடுவார் அவர்
வாக்கினில் செவ்வாய் இருப்பதனால்
தாழ என்றுசொன்னால் தாழ்ந்திடுவார் அவர்
தயவைக் கோரி அடியுங்கடி"

என்பது அவரைப் பற்றிய கும்மிப் பாடலுள் ஒரு பாடலாகும்.

<u>ஒரு தத்துவ ஞானி</u>

கொற்றவேல் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் (19) கல்வி கற்ற மேதை, பெரும் தமிழ்ப்புலமை உடையவர். நல்ல சிந்தனையாளர். மிகச் சிறந்த பக்தர். பழனி சென்று வழிபடும் நெறியுடையவர். குதிரையில் ஏறி 9 நாழிகையில் அதாவது 3 ½ மணி நேரத்தில் பழைய கோட்டையிலிருந்து பழனி சென்றடைவாராம். இதைச் செயங்கொண்டீசர் தேவஸ்தானச் சம்புலிங்க ஓதுவார்

"ஆற்றோரக் கோட்டையை அகன்றுபழ னாபுரியில்
சாற்றுநவ நாழிகையுள் சார்ந்தாரே - ஏற்றமிகும்
கொற்றவேல் சர்க்கரையார் குதிரைச் சவாரிக்கு
மற்றுயார் நிகராம் மதி"

என்று பாடியுள்ளார்.

இவர் "நல்லமங்கையம்மன் சதகம்" பாடியவர். அதில் இவர் கூறிய கருத்து இவரது தத்துவ ஞானத்தைப் புலப்படுத்துகிறது.

"காட்டுடன் தோட்டமும் சமம் என்னும் கொற்றவேல்"
"இழவுமணம் இரண்டுமே ஒன்றெனும் கொற்றவேல்"
"பட்டொடு பருத்திநூல் சமம் என்னும் கொற்றவேல்"
"குறைவுடன் நிறைவு சமம் என்னும் கொற்றவேல்"
"வரவொடு செலவு சமம் என்னும் கொற்றவேல்"
"தங்கமும் மண்ணுமே ஒன்றெனும் கொற்றவேல்"
"தக்கசுக துக்கம் ஒன்றெனும் கொற்றவேல்"
"சாதிமத பேதம் எண்ணாதநான் கொற்றவேல்"
"தனவானும் ஏழையும் சமம் என்னும் கொற்றவேல்"
"சாவதும் வாழ்வதும் சமம் என்னும் கொற்றவேல்"

என்று தன்னை அடையாளம் காட்டுகிறார் கொற்றவேல் சர்க்கரை. இந்தநிலை வந்தால் உலகில் துன்பமே இருக்காதல்லவா?

<u>வித்தகர் விசுநாதர்</u>

விசுவாதச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் "தரும அரசு" "வள்ளல்" என்று புகழப்பட்டவர். சிதம்பர கவுண்டம்பாளையம் நடேச பாஸ்கர தீட்சிதரைக் குலகுருவாகக் கொண்டு சமயதீட்சை பெற்றுப் பிறருக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர். நிறைமொழி மாந்தரான அவர் அளப்பரிய ஆற்றல்கள் பெற்றவர்.



குதிரைகளின் நிறம், சுழி, அங்க அமைப்பு இவைகளைப் பார்த்தவுடன் அக்குதிரையின் குணங்களையும், அதனை உடையவர்களின் வாய்ப்புக்களையும் உடனே கூறுவார். ஒரு பசுவைக் கண்ணால் பார்த்தவுடன் இது பால்தரும் பசுவா? எவ்வளவு பால் தரும் என்று உடனே கூறுவார். ஒரு குழந்தையைக் கண்ணால் பார்த்தே அதன் ஆயுள் முதலியவற்றைக் கூறும் ஆற்றல் பெற்றவர். அவரது குருவே வியக்கும் வண்ணம் இவ்வாறு பல ஆற்றல்களை விசுவநாதச் சர்க்கரை பெற்று விளங்கினார்.

"அசுவத்தின் சுழியதனைப் பார்த்து அதன்குணத்தை
அவ்விடத்தே அறிந்து சொல்வார்;
பசுவைக் கண் ணால்பார்த்துப் பால்உளது இல்லாதது
என்று அப்பொழுதே சொல்வார்;
சிசுவைக் கண் ணாற்பார்த்துச் சீக்கிரமாய்
ஆயுளையும் கணித்தே சொல்வார்;
விசுவசர்க் கரையார் இவ் விதரணை எங்கு
உணர்ந்தாரோ விளம்புவீரே!

என்பது நடேச பாஸ்கர தீட்சிதர் பாடலாகும்.

<u>எதிர்வரும் பலனை இயம்புபவர்</u>

சொக்கன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் தம்பி குமார சர்க்கரை. அவர் தமக்குரிய பூமிகள் பெற்று வாழ்ந்த ஊர்தான் பழைய கோட்டை அருகேயுள்ள குமாரபாளையம். அவர் சோதிடக்கலையில் மிகவும் வல்லவர். எதிர்காலப் பலனை மிகச் சரியாகத் துல்லியமாக் கூறும் பேராற்றல் பெற்றவர். வஞ்சியங்குளத்தருகே அவருக்குரிய நிலம் இருந்தது. அவர் மூன்று மாதம் காஞ்சிபுரம், சீகாளத்தி, இராமேசுவரம் யாத்திரை சென்றார். ஊர்மக்களே உழுவதற்கு வசம் இல்லாதிருந்த அந்த முள்காட்டைத் திருத்திப் பயிர் செய்தனர். அந்த அளவிற்கு மக்களிடம் நன்மதிப்பைப் பெற்றவர் இவர்.

"பஞ்சபட்சி சரநூல் ஆராய்ச்சி செய்து
பகுத்தறிந்தே எதிர்காலப் பலனையெல்லாம்
தஞ்சம் என்று வந்தவர்க்குத் தயவாய்ச் சொல்லும்
தகைமை உளார்"

என்று பாராட்டப் பெற்றவர்.

மந்திரம் கற்றவர்

18ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் வாழ்ந்தவர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார். நூறாண்டு நிறைவாழ்வு வாழ்ந்தவர். அவர்தம்பி கல்லங்காட்டுச் சின்னச்சாமி என்பவர். அவர் பழையகோட்டைக்கு வந்த ஒரு தவமுனிவரிடம் மந்திரம் கற்று அதன்மூலம் குதிரை, மாடு, ஆடுகளின் நோய்கதைத் தீர்க்கும் வல்லமையைப் பெற்றிருந்தார். அவர் பேராற்றல் பெற்றவர்.

உலகுடையபாளையம் நல்.இராசகோபாலபிள்ளை அவரைப் பற்றி

"தோள்நூறு பத்துடைய பாணனது வீரம்
துலங்குசின் னச்சாமியாம்
துங்கமுள கல்லதின் காட்டில் உயர் ஓடைமேல்
தோதான சிறுமனையினில்
வாள்நூறு வயது குறைவின்றி இப்பூவினில்
வாழ்ந்துவரு ததியில் ஓர்நாள்
வந்தஒரு பரதேசி மந்திரமது கற்றுஅசுவம்
மாடாடு நோய் தீர்ப்பாரே"

என்று பாடியுள்ளார்.

அட்டாவதானி

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர். 23-ஆவது பட்டம் பெற்ற பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார். அவருமடய நான்காவது தம்பி குட்டப்பாளையத்தில் வாழ்ந்த அர்ஜுன கவுண்டர். குறைவில்லாது செல்வம் கொழித்த அவர் மாடு, ஆடு, பால் பசுச் செல்வத்துடன் வாழ்ந்தார். தன் மாமனாரிடம் அவர் ஒரு அற்புதக் கலையைக் கற்றார். அதுதான் எட்டுவகைக் கலைகளில் வல்ல அட்டாவதானக் கலை.

அவர் வாய் சதா "வேலும் மயிலும் துணை" என்று சொல்லிக் கொண்டிருக்கும். அவர் முதுகில் 8 பேர் நெல், மிளகு, கொள்ளு, மொச்சை, கடுகு, சூழற்சிக்காய், நெருஞ்சிமுள், புளியம்பழம் ஆகிய பொருட்களை அரை நாழிகை (12 நிமிடம்) போட்டுக் கொண்டே இருப்பார்கள். இறுதியில் அவர்கள் போட்ட ஒவ்வொரு பொருளின் கூட்டுத் தொகையை மிகவும் சரியாகக் கூறுவார். அவரை "வல்லமைகள் கொண்ட வடிவழகன்" என்று நல்.ரா சகோபாலப்பிள்ளை பாடியுள்ளார்.



நல்லசே னாபதிச் சர்க்கரைத் துரைமைந்தர்
நல்கு குட்டைப் பதியில்வாழ்
நந்தலில் லாது மிக மாடு ஆடு பால்பசு
நானாவிதச் செல்வமும்
வல்லமை களும்கொண்ட வடிவழகன் அர்ச்சுனன்
வள்ளல் இவர் சிறுவயதிலே
வாய்த்ததன் மனைவி அவர் தந்தை சொல் லித்தந்த
வைத்தசிறு அட்டதானம்
நெல்மிளகு கொள்மொச்சை கடுகொடு கழற்சிவிதை
நெருஞ்சிமுள் புளியம்பழம்
நேரான எட்டும் அவர் முதுகில் ஒவ்வொன்றாய்
நிறுத்தாம லே போடவும்
சொல்லுமவர் வாய்வேலும் மயிலும் துணை எனச்
சோராம லேசெப்பலும்
சூழும் அரை நாழிகையுள் அவையவைகள் ஒவ்வொன்றும்
சொரிந்தமொத்தம் பகர்வாரே!"

என்பது அவர் பாடலாகும்.

## வெற்றியும் விருதுகளும்

சேரர், சோழர், பாண்டியர், விஜய நகர அரசர்கள், உம்ம த்தூர்த் தலைவர்கள் நாயக்க மன்னர்கள், ஐதர், திப்பு, கம்பெனியார் ஆகியோர் நாட்களில் அரசியல் நடவடிக்கைகளில் நேரடியாக ஈடுபட்டவர்கள் பழைய கோட்டை மரபினர்.

கொங்கு நாட்டு மக்களுக்குத் துன்பம் ஏற்பட்ட காலங்களிலெல்லாம் துயர் துடைத்து அவர்களைக் காக்கவும், கால்நடைகளைப் பேணவும், வேளாண்மை சிறக்கவும் பெருந்துணையாக இருந்தவர்கள் பழையகோட்டை மரபினர்.

மக்களுக்கும், கால்நடைகளுக்கும், பயிர்கட்கும், நோய் ஏற்பட்ட பொழுது ஓடோடிச் சென்று அவைகளை நீக்கிக் காக்கும் காவலராக இருந்துள்ளனர் பழைய கோட்டை மரபினர்.

சாதி சமய வேறுபாடு இன்றி எல்லா மக்களையும் அரவணைத்துச் சமூக நீதிக்கு ஒரு எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தவர்கள் பழைய கோட்டை மரபினர். அவர்களின் வாழ்க்கையே கொங்குச் சமுதாய வாழ்க்கை!

அவர்கள் பெற்ற வெற்றிகளும் அதன் விளைவாகப் பெற்ற விருதுகளும் மிகப்பல.

### உத்தமச் சோழன்

பழைய கோட்டை மரபில் சர்க்கரை என்பார் உத்தம சோழனின் படையில் வீரராக இருந்து சேனாதிபதி ஆனார். சென்ற போர்களில் எல்லாம் வெற்றியைச் சர்க்கரை தேடித் தந்தார். இதனால் மகிழ்ந்து உத்தம சோழன் என்ற தன் பெயரையே சர்க்கரைக்கு அளித்தார். உத்தம சோழன் என்ற பெயர் பழைய கோட்டை மரபினரின் பழைய கல்வெட்டுக்களில் சில இடங்களில் பயின்று வருகிறது. அரசர்கள் இவ்வாறு தங்கள் பெயர்களை உயர் அதிகாரிகளுக்கு விருதாகக் கொடுப்பது வழக்கம். தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டியவன் "இராசராசப் பெருந்தச்சன்" என்பவன்.

"இத்தரை மீதினில் சேனா பதியாய் இருந்துவெற்றி
ஒத்து வரப்பெற்ற தற்கா தனக்கிங்கு உறுபெயராம்
உத்தம சோழனென் றன்பால் தரப்பெறும் ஓங்குபட்ட
வர்த்தனர் வாழ்வுறும் ஆனூர் திகழ்கொங்கு மண்டலமே!"

என்பது கொங்கு மண்டல சதகப்பாடல் ஆகும்.



### விக்கிரம சோழன்

உறையூர்ப் பட்டணத்தில் விக்கிரம சோழ ராசேந்திரன் என்ற சோழ மன்னன் ஆண்டுவந்தான். மணலூர் நாட்டு வெள்ளை வேட்டுவரில் வெங்கலமடராயன் சோழ அரசனுக்குச் செலுத்த வேண்டிய கப்பம், வரிப்பணம் இவற்றைச் செலுத்தவில்லை. வெங்கலமட ராயனின் கோட்டையை கரியான் சர்க்கரை அழித்து வெங்கலமடராயனைப் பணியச் செய்தார்.

சோழன் மகிழ்ந்து இருநிதி விமானம், சோழருக்குரிய ஆத்திமாலை, புலிக்கொடி, சிங்கமுகக் கவிகை, கடக சூடாமணி ஆகிய விருதுகளைக் கொடுத்து சோழநாட்டில் காவேரி மேல்கரையில் உள்ள கண்டியூர், தஞ்சாவூர், விதரியான அத்திப்பாளையம், கொடுமுடி, சிராப்பள்ளி, வெஞ்சமாங் கூடல், காலிங்கனூர், காங்கயம், விசயமங்கலம் முதலிய ஊர்களையும் கொடையாகக் கொடுத்தான். இச்செய்தி பெரும்புல்வர் வே.ரா. தெயவசிகாமணிக் கவுண்டர் 29.10.1964 அன்று பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் அவர்கட்கு அனுப்பிய முடிசூட்டுப் பாடலில் கூறப்படுகிறது.

### உத்தமக் காமிண்டன்

ராசதேவ பாண்டியனுக்காக உத்தமக்கா சோழனை வென்ற காரணத்தால் பாண்டியன் கரியான் சர்க்கரைக்கு உத்தமக் காமிண்ட ன் என்ற பட்டத்தை அளித்தான். 1807-ல் எழுதப்பட்ட பழைய கோட்டை ஆவணம் பின்வருமாறு கூறுகிறது.

"பயிற குலத்தில் கரியான் சர்க்கரை என்பவரை ராசதேவ பாண்டியன் உத்தம சோழ ராசாவுடனே யுத்தம் பண்ண வேண்டியதற்காக தளநாயகனாய் நேமுகம் பண்ணி அனுப்புகையில் கரியான் சர்க்கரை சதுரங்க பல சமேதராய்ப் போய்ச் சோழ ராசாவுடனே யுத்தம் பண்ணி செயித்துக் கொண்டு மதுராபுரிப் பட்டணம் ஆளும் பாண்டிய ராசா சமூகத்துக்கு வந்த இடத்திலே மிக்க சந்தோஷப்பட்டுக் கரியான் சர்க்கரைக்கு உத்தமக்காமிண்டன் என்ற கிதாபையும் கொடுத்து பட்டாபிஷேகமும் பண்ணி சகல வைபவத்துடனேயும் வெகுமதிகளும் வரிசைகளும் நடப்பித்தார்கள்"

## பூதவலி தொலைத்தது

உத்தமக்காச் சோழன் வழிவந்த ஒரு சோழமன்னன் சத்துரு சாதன பாண்டியனை எதிர்த்தான். நாகைப் பொன்பத்தி மித்திரன் என்ற பௌத்தன் மூலம் நிற்சிந்தன் என்ற பூதத்தையும் 1000 பேய்க் கூட்டங்களையும் பாண்டியன் மீது அனுப்பினான். பாண்டியன் வீரர்கள் பலர் சென்று நிற்சிந்தனிடம் தோற்றனர். உறந்தைப் பாக்கத்தில் குடியிருந்த கரியான் சர்க்கரை மகன் சர்க்கரை பாண்டியனுக்காகப் போரிட்டு நிற்சிந்தனையும், பேய்க் கூட்டங்களையம் வென்றார். உத்தமக்கா சோழனையும் வென்றார். சர்க்கரையைப் பாண்டியன் அழைத்து உத்தமக்காமிண்டன் என்று பாராட்டி குமாரவர்க்கமாகப் பட்டாபிஷேகம் செய்வித்து மீன்கொடியும், வேப்ப மாலையும், சுவேதசத்திரமும், சரியாசனமும் தந்து காங்கய நாட்டில் நத்தக் காரையூர் வள்ளியறச்சல், முத்தூர், மருதுறை முதலிய ஊர்களைக் கொடுத்தான்.

"உறந்தைப் பாக்கம் குடியிருந்தார் - முன்னோர் உத்தமச் சோழனை வென்று வந்தார்" என்பது பழையகோட்டைக் கும்மி வரிகள்.

## சோழனை வெருட்டியது

சோழன் ஒருவன் கொங்கு நாட்டிற்குப் பல்வேறு இடர்களை விளைவித்தான். அப்போது கொங்குப் பாண்டியர் ஆட்சி. பாண்டியர் ஏவலால் பயிரகுலச் சர்க்கரை மரபில் வந்த ஒரு மாவீர் சோழனைப் புறங்காட்டி ஓடச் செய்தார். பாண்டியன் மகிழ்ந்து சர்க்கரை மரபு இளைஞனுக்கு மன்றாடி என்று பட்டம் வழங்கினான்.

இதனை ஒரு பழம் பாடல்

"ஆறெல்லாம் செந்நீர் அவனியெல்லாம் பல்பிணங்கள்
தூறெல்லாம் சோழன் சுரிகுஞ்சி - வீறுபெறு
கன்னிக்கோன் ஏவலினால் காரைக்கோன் பின்தொடரப்
பொன்னிக்கோன் ஓடும் பொழுது"

எனப் புகழ்கிறது. இப்போரில் சர்க்கரை கொங்கு நாட்டு மதுக்கரையைக் காத்தார் என்று வாலசுந்தரக் கவிராயர் தன் கொங்கு மண்டல சதகத்தில் கூறுகிறார். (எண் 57)



## வண்ட மல்லியை வென்றது

வடநாட்டில் வண்டமல்லி என்ற பெரு வீரன் விளங்கி வந்தான். ஒவ்வொரு ஊராகச் சென்று அனைவரையும் வென்று வெற்றிக் கொடி நாட்டி வந்தான். ஆனூரில் சர்க்கரை அவைக்கும் வந்தான். என்னை வெல்லவல்லார் எவரேனும் உண்டோ என்றான். ஆனூர்ச் சர்க்கரை உன்னை வெல்ல என் வீரன் ஒருவனே போதும் என்றார். விசயநகரத்திலிருந்து சண்டிகாதேவியைப் பூசிக்க வந்திருந்த இம்முடிக்கைச் சிவந்தாரையன் வண்டமல்லியைப் புறமுதுகு காட்டச் செய்தார்.

"புல்லியென் னோடு வெல்வார் இலையென்று புகழ்விருது
சொல்லி எங்கெங்கும் திரிபோது சர்க்கரைத் தோன்றல் முன்னே
வெல்லவல் லான்ஒரு பட்டன் துணிந்து வெகுண்டு வண்ட
மல்லியைத் தோய்த்துச் செயங்கொண்ட தும்கொங்கு மண்டலமே"

என வாலசுந்தரக் கவிராயர் கூறுகிறார். சிவந்தாரைய்யர் சண்டிகாதேவி அர்ச்சகர்.

"இம்முடிக்கைச் சிவந்தார் இறைவிவிஞ்சை மந்திரத்தின்
மும்முடிப் பூசைவாங்கும் முதல்வியே"

- சண்டிகாதேவி விஜயதசமிப் பாடல்

"அன்புபெறு சிவந்தா ரைய சிரோமணியை
இன்பமுறு சொட்டைக்கு இசைந்தகுரு வாய்ப்படைத்தோன்"

- பழம் பாடல்

## வெண்ணெய் மலை வெற்றி

கரூர் அருகேயுள்ள வெண்ணெய் மலையில் சில வீரர்கள் மக்களைத் துன்புறுத்திக் தொல்லை கொடுத்தனர். அவர்களை எவராலும் அடக்க முடியவில்லை. இதனை மக்கள் கரியான் சர்க்கரையிடம் முறையிட்டனர். கரியான் தன் மகனும் பெரு வீரனுமான சர்க்கரை என்பவனை அனுப்பி அந்த வெண்ணெய் மலை வீரரின் குறும்புகளை அடக்கினார். இதனை,

"கரியான்சொல் சர்க்கரை பெற்றதும் உத்தமக் காமிண்டன்தான்
குரியான சொட்டையில் வீரரை வென்று குறும்படக்கிச்
சரியாய் நிறுத்திடும் வெண்ணெய்நன் மாமலைச் சார்பினிலே
வரிவாழை சூழ்ந்தனை வோர்களும் வாழ்கொங்கு மண்டலமே"

என்கிறார் வாலசுந்தரக் கவிஞர் (சதகம் 56).

## விசயநகர வெற்றி

அச்சுதராயர் விசயநகரத்தை ஆட்சி செய்யும் போது நல்லசர்க்கரை உத்தமக் காமிண்டன் என்னும் பழையகோட்டை மரபினர் ஒருவர் விசயநகர அரசுக்கு நண்பராக விசயநகரத்தில் தங்கியிருந்தார். அச்சுதராயர் அவர் மீது மிக்க அன்பு கொண்டிருந்தார். விசயநகரத்தில் உள்ள யானைக்கைச் சிவந்தாரைய்யர் என்பவரிடம் நல்லசர்க்கரை சொட்டைமுனை ஆயுதச் சண்டையில் பயற்சி பெற்றுப் பெரு வீரராகத் திகழ்ந்தார். அப்போது விசயநகரத்திற்கு வந்த வச்சிரவாகு என்ற வீரன் என்னை வெல்லவல்லார் உளரோ என்று சபதம் கூறினான். விசயநகர மல்லர்கள் பலர் வச்சிரவாகுவிடம் தோற்றனர். அரசன் மிக வருந்தி என் அவையில் வச்சிரவாகுவை வெல்வார் யாரேனும் உண்டோ என்று வினவினாண். நல்லசர்க்கரை முன்வந்து பல்வேறு வகைகளில் போர் செய்து வச்சிரவாகுவைத் தோற்கடித்தார்.

விசய நகர மன்னன் நல்லசர்க்கரைக்கு "எட்டுத்திக்கும் சொட்டைக்காரர் கண்டன்" என்ற விருதாவளியையும், சரியாசனமும் கொடுத்து, அனேக விருதுகளும், வீரவெண்டயமும் கொடுத்தான். நல்லசர்க்கரை விசயநகரத்தில் உள்ள மூன்று தேவியருள் ஒரு அம்மனை எனக்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அரசன் மிகவும் மகிழ்ச்சி கொண்டு சண்டிகாதேவியையும், சண்டிகாதேவி விக்கிரகத்துக்கு மந்திர பூர்வமாகப் பூசை செய்யும் யானைக்கைச் சிவந்தாரைய்யரையும் உடன் அனுப்பினான். அந்த விசயநகர மன்னன் அச்சுதராயர் அளித்த சண்டிகா தேவியம்மனே பழைய கோட்டை அரண்மனையில் எழுந்தருளியுள்ளார். சொட்டைமுனை ஆயுதமும் அக்கோயிலில் உள்ளது. இராமநாதபுரம் சேதுபதிகட்கு வளைதடி (பூமராங்) ஆயுதம், விசயநகர மரபினர்க்கு கட்டாரி ஆயுதம், பழையகோட்டை மரபினருக்குச் சொட்டை முனை சிறப்பு ஆயுதம். பின்னர் வந்த பல பட்டக்காரர்களும் சொட்டைமுனைக்கு வல்லவர்களாகச் சிறப்பிக்கப் பட்டுள்ளனர்.

பல பட்டக்காரர்கள் சொட்டைமுனையால் சிறப்பிக்கப்படுகின்றனர்.

"பதினெட்டு முனைகட்டி எதிரிட்டு வருசொட்டை
பாருக்குள் வீரப்பன்"

என்று கரியான் சார்க்கரையும்

"வட்டமிடு பரிநகுலன் உத்தமக் காமிண்டன்
மன்னு சொட்டைக்கு அதிபன்"

என்று நல்லதம்பிச் சர்க்கரையும்



"சமுதாடு வல்லையம் சொட்டைமுனை"

என்று கொற்றவேல் சர்க்கரையார் முடிசூட்டுப் பாடலிலும்

"தரணியோர் புகழ்கின்ற சொட்டைமுனைகாரனே"

என்று நல்லசேனாபதிச் சார்க்கரையும்

புகழ்ந்துரைக்கப்படுகின்றனர்.

## தென்னிலை வெற்றி

தேவராயன் என்ற விஜயநகர மன்னனின் சார்பில் தாராபுரத்தில் உம்மத்தூர்த் தலைவன் நஞ்சய உடையார் அரசாண்டு வந்தான். அப்பொழுது மணலூர் நாட்டுத் தென்னிலையில் வெங்கச்சி வேட்டுவர் தலைவன் கொங்குராயன் ஆட்சிபுரிந்து வந்தான். அவன் தென்கரைநாடு, காங்கயநாடு, அரையநாடு, பூந்துறை நாட்டு மக்கள் தனக்குச் சவளக் காணிக்கை (தலைவரி) கொடுக்க வேண்டும் என்று கட்டளையிட்டான். மக்கள் கொடுக்க முடியாமல் மிகவும் அல்லலுற்றனர். கொங்குராயன் ஒருநாள் காங்கய நாட்டு மாந்தபுரம் வந்து பலரை வெட்டிக் குத்திச் சில்லரை பண்ணி ஆடுமாடுகளை வரிக்காகக் கவர்ந்து சென்றான்.

கொங்குராயனை எதிர்த்து மக்கள் போரிட்டனர். அவர்களில் வள்ளியறச்சல் புல்லர் குலத் தொண்டைமான் மன்றாடி மகன் மாந்தக் கவுண்டர், காவல் வேட்டுவரில் பெரிய தம்பிக் கவுண்டர் மகன் பெரியண்ணன், காரையூர் மணியகுல ராவுத்தாக் கவுண்டர் மகன் வாரணவாசிக் கவுண்டரும் தொடர்ந்து எதிர்த்துப் போர் செய்து மொஞ்சனூர்க் குளத்து அருகே இறந்தார்கள்.

மக்கள் எல்லோரும் கொங்குராயன் கொடுமையை தாராபுரம் சென்று நஞ்சய உடையாரிடம் முறையிட்டார்கள். நஞ்சய உடையார் "தென்னிலையை வென்று கொங்குராயன் தலையை வெட்டிக் கொண்டு வந்து வைத்தவர்களுக்கு உம்பளிக்கை (மானியம்) கிராமமும் கட்டளையிட்டு 24 நாட்டுக்கும் முதன்மையாக நடப்பிவிக்கிறோம்" என்று கூறினார். எல்லோரும் இந்த அரிய செயல் வீரம்மிக்க காரையூர் அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்டனை அல்லாமல் வேறொருவரால் ஆகாது என்று கூறினார்கள். உடனே காரையூர் அழகன் சர்க்கரை உம்மத்தூர்த் தலைவர் நஞ்சய உடையாரைச் சந்தித்தார். தென்னிலையை வெல்ல ஒப்புக் கொண்டார். காரையூரில் உள்ள மணியகுல முதன்மை. காசவேட்டுவர் முதன்மை, செட்டியார் முதன்மை மூன்றும் அழகன் சர்க்கரைக்கே எழுதப்பட்டது. இதை ஒப்புக் கொண்டு கீழ்க்கண்டவர்கள் கையெழுத்திட்டனர்.

தென்கரைநாடு வேணாவுடையாக் கவுண்டர்
பொன்குலுக்கிநாடு அங்கித்தொழு அவிநாசிக் கவுண்டர்
குண்டடம் வடுகப்ப கவுண்டர்
வாரக்கநாடு துடியலூர் சின்னப்பகவுண்டர்
ஆறுநாடு சோழியாண்டாக் கவுண்டர்
குறுப்புநாடு விசயமங்கலம் வேட்டுவர் விசயாக் கவுண்டர்
காஞ்சிக்கோயில் காலிங்கராயக் கவுண்டர்
பூந்துறை நாடு விசுவராயக் கவுண்டர்
வெள்ளோடு சின்னப்ப கவுண்டர்

நசியனூர் காசிலிங்கக் கவுண்டர்
எழுமாத்தூர் நல்லபெரியாக் கவுண்டர்
அரையநாடு வெங்கம்பூர் குட்டக் கவுண்டர்
அஞ்சூர் காங்கய கவுண்டர்

மொஞ்சனூர் குடுமியாக் கவுண்டர்
கார்வளி வெள்ளைவேட்டுவர் முத்தரைக் கவுண்டர்
காங்கயநாடு காங்கயம் பல்லவராயக் கவுண்டர்
வள்ளியறச்சல் தொண்டைமாக் கவுண்டர்
காடையூர் கழுவன காங்கய மன்றாடியார்
பட்டாலி காலில் பெரிய சிதம்பரக் கவுண்டர்
கீரனூர் குடுமி வேட்டுவர் செம்பராய கவுண்டர்
மருதுறை விழுப்பராயன்
பாப்பினி சேனாபதி செட்டியார்
பரஞ்சேர்வழிக் காலில் சேனாபதிக் கவுண்டர்
கண்ணபுரத்து செட்டிபட்டக்காரர் அர்த்தனாரி
வெள்ளகோயில் காலில் வீரப்பெருமாள்
முத்தூர் திருவம்பலக்காரர்

ஆகியோர் சாட்சிக் கையொப்பமிட்டனர்.

அழகன் விசயநகரம் சென்று தேவராயரைக் கண்டு வேண்டிய உதவிகள் பெற்று தென்னிலைக் கோட்டையை இடித்துக் கொங்குராயனைக் கொன்று அவன் தலையை நஞ்சய உடையார் முன் வைத்தார். நஞ்சய உடையார் மகிழ்ந்தார்.



நஞ்சைய உடையார் அழகன் உத்தமக் காமிண்டன் அவர்களுக்கு தாளி, சவுக்களி, குஞ்சரம், காளாஞ்சி, கபாலை, குல்லா இவைகளையெல்லாம் கொடுத்துப் பல்லக்கில் தாராபுரத்தில் பட்டணப் பிரவேசம் செய்வித்து நான்கு நாள் தாராபுரத்தில் தங்க வைத்து பல்லக்கு வரிசையுடன் காரையூருக்கு அனுப்பி வைத்தார்கள்.

12.07.1807-ஆம் ஆண்டு எழுதப்பட்ட ஆவணத்தில் ராசா நாள் முதல் நடந்துவரப்பட்ட விருதுகள் கீழ்க்கண்டவை குறிக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| 1. | பல்லாக்கு | 11. | வெட்டுப்பாவாடை |
| 2. | உபயசாமரம் (2) | 12. | கங்கீத மேளம் |
| 3. | சூரியபாண் | 13. | வாத்தியம் |
| 4. | சேதசத்திரம் | 14. | சோடு தீவட்டி (2) |
| 5. | கட்டியம் | 15. | காளாஞ்சி |
| 6. | டமக்கா | 16. | பட்டத்துக் கத்தி |
| 7. | கொம்பு | 17. | வெடி |
| 8. | கனகதப்பட்டை | 18. | சமுதாடு |
| 9. | துத்தாரி | 19. | வல்லயம் |
| 10. | அலகோசா | | |

**ஒரு எல்லைச் சண்டை**

1617 ஆம் ஆண்டு தாராபுரம் சீமை காங்கய நாட்டுப் பழைய கோட்டைப் பட்டக்காரர் சீமையான காரையூருக்கும் பூந்துறை நாட்டு அறச்சலூருக்கும் எல்லைத் தகராறு நடைபெற்றது.

பட்டக்காரர் வஞ்சியங் குளத்திலும், அறச்சலூரார் சேனாபதிபாளையத்திலும் தங்களுடைய ஆட்களை நிறுத்தியிருந்தனர். சண்டை ஏற்பட்டு இரண்டு பக்கமும் பலர் மரணமடைந்தனர். இந்தத் தகராறை இருபத்து நாலு நாட்டாரும், தாராபுரம் சீமைக்குக் கர்த்தராய் வந்த திம்மப்ப முதலியாரும், தாராபுரம் தலத்துச் சம்பிரதி தட்சிணாமூர்த்தி அய்யன், திருவாளிப் பிள்ளை, தலத்துச் சேர்வை எல்லாரிமாவுத்தர், தளவாய் திருமலை நாயக்கன், சிட்ட ராவுத்தர், நஞ்சைய நாயக்கர் ஆகியோர் தீர்த்து வைத்தனர். எல்லை அளந்து கல் போட்டுக் கொடுத்தனர்.

அறச்சலூருக்கும், காரையூருக்கும் நடு எல்லை கிணறு என்று கொண்டு கிழக்கில் சென்னாக் கல்லு, வஞ்சியங்குளம், ஏரிக்குத் தெற்கு நல்லமங்கைபுரம், காரையூர்க்காடு, ஏரிக்கு வடக்கு அறச்சலூர்க் காடு, கருங்கல் மேடு, தாந்தூக்கிப் புளியமரம், நெடுஞ்சாத்துக் கருந்தேவன் குதிச்ச கல்லடுக்கு, நல்லாகட்டிபாளையம், இலவநத்தம், காரைமடைக் கல்லடுக்கு ஆகியன கூறப்பட்டன.

பூந்துறை அளப்பிச்சாக் கவுண்டர், வெள்ளோடு முதலியாக் கவுண்டர், நசியனூர்ப் பிறப்பண கவுண்டர், எழுமாத்தூர் விசுவநாதச் சின்னைய கவுண்டர், வேட்டுவரில் பட்டாலிக் கவுண்டர், அறச்சலூர்ப் பொட்டாக் கவுண்டர், முருங்கைப் பெருந்தொழு தீத்தாக் கவுண்டர், அனுமன் பள்ளி சர்க்கரைக்கவுண்டர், ஈங்கூர் செங்கோடகவுண்டர் ஆகிய அனைவரும் சம்மதித்து கையெழுத்திட்டு காரையூர் பழைய கோட்டை சர்க்கரைக் கவுண்டருக்கு மேலோலை எழுதிக் கொடுத்தனர்.

வேணாடுடையார், பல்லவராயர், காங்கேயர் உள்ளிட்ட பலர் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளனர் தலந் திருவாளிப் பிள்ளை பட்டயம் எழுதியுள்ளார். மேலோலை பழங்கடையாய் சீரணமாகப் போனதால் காரையூர் தலத்துக் கணக்கு அரசபிள்ளை நகல் எழுதியுள்ளார்.

## பெரிய வேட்டை

கொங்கு நாட்டு வேட்டுவ சமுதாயத்தில் சிலர் ஆடிப் பதினெட்டுக்கு முன்பு ஒவ்வொரு வருடமும் ஒரு விநோத வழக்கத்தைக் கொண்டிருந்தனர். பெருங்கூட்டம் கூடிக் கொண்டு நாய்கள் புடைசூழ வேட்டைக்குப் புறப்படுவார்கள். வேலிகளையும், வேளாண்மை நிலங்களையும் வேட்டையின் பெயரால் பாழ்படுத்துவார்கள். வேலிகள் இருந்த இடம் தெரியாது. பயிர்கள் அழியும். பலநாள் தொடர்ந்து பல ஊர்களுக்குச் செல்லுவார்கள். யாரும் தட்டிக் கேட்கக் கூடாது. தடுக்கக் கூடாது. அது எழுதப்படாத விதியாக இருந்தது. அதற்கு அந்நாளில் பெரிய வேட்டை என்று பெயர்.

26ஆம் பட்டக்காரருக்கு 23 வயது. பட்டம் ஏற்று நான்காண்டுகள் ஆயிற்று. ஒரு ஆடிமாதம் அறச்சலூர், சொட்டையூர், வெங்கனூர், குன்னத்தூர் வேட்டுவர்கள். பழைய கோட்டைப் பகுதிக்குப் பெரும் கூட்டமாக வந்தனர். வேலிகளை வெட்டி வழிஏற்படுதி வெள்ளாமைக் காட்டுக்குள் புகுந்து அரண்மனைக்குக் கிழக்கேயுள்ள தொழுவத்தின் கிழுவமுள் வேலியுள்ள காட்டில் புகுந்து விட்டனர். தொழுவு மாடுகள்



மிரண்டு வேலியையத் தாண்ட பலமாடுகள் அடிபட்டது. மாடியிலிருந்து பட்டக்காரர் பார்த்தார். அரண்மனை ஆட்கள் சென்று தடுக்கவே கைகலப்பு ஏற்பட்டது.

நிலைமை மீறவே குட்டப்பாளையம் அர்ச்சுனக் கவுண்டரும், செலம்ப கவுண்டன் வலசு மாமாவும் துப்பாக்கிகளை எடுத்துக் கொண்டு அவர்களைத் துரத்திக் கொண்டு வெங்கரை வரை சென்றனர். அதற்குள் பட்டக்காரர் போலீசுக்குத் தகவல் கொடுத்து உயர் போலீஸ் அதிகாரிகளுடன் சென்று அவர்களைக் கைது செய்தார்.

இரண்டாண்டுகள் வழக்கு நடைபெற்றது. விளைச்சல் காடுகளில் வேட்டையாடக் கூடாது. அரசு அதை அனுமதிக்கக் கூடாது எனத் தீர்ப்பு வந்தது. பெரிய வேட்டை அன்றிலிருந்து நின்றது.

# தெய்வீக பக்தி

பழையகோட்டை மரபினர் பலர் பக்தியிலும், ஆலயத் திருப்பணிகள் செய்வதிலும் மிகச் சிறந்தவர்களாக இருந்துள்ளனர். சண்டிகா தேவியம்மன் கோயில், ஆனூரம்மன் கோயில், நத்தக்காரையூர் செயங்கொண்டீசுவரர் கோயில், சிவன்மலையாண்டவர் கோயில், சிவன்மலை அனுமந்தராயர் கோயில் ஆகியவற்றை முறையாக வணங்கியும், கொடைகள் கொடுத்தும், சிறப்பு விழாக்களை ஏற்பாடு செய்தும் சிறப்புற்றிருந்தனர். பழைய கோட்டை மரபினர் காசி, இராமேஸ்வரம், காஞ்சிபுரம், ஸ்ரீ காளத்தி, பழனி, திருச்செங்கோடு, மதுரை ஆகிய தலங்களுக்கு யாத்திரை சென்று வந்த குறிப்புகள் பல கிடைத்துள்ளன. கொங்கு நாட்டின் தேவாரப் பாடல் பெற்ற கரூர், வெஞ்சமாங்கூடல், கொடுமுடி, திருச்செங்கோடு, பவானி, அவிநாசி, திருமுருகன் பூண்டி ஆகிய ஏழு தலங்களையும் முறையாக வணங்கும் வழக்கத்தையும் கொண்டிருந்தனர் என்பது சிறப்புக்குரிய செய்தியாகும்.

## ஆனூர் அம்மன் கோயில்

இன்று நத்தக்காரையூர்க் கிராமத்தில் ஒரு உள் கிராமமாக ஆனூர் இருப்பினும் ஆனூர் தான் பழைய கோட்டைப் பட்டக்காரர்களின் பூர்வீக ஊர். அங்குள்ள கோட்டையுள் அரண்மனை இருந்தது. கோட்டைக்குள் தான் ஆனூர் அம்மன் கோயிலும் இருந்தது.

மூவேந்தர்கள் ஒன்றாக ஒருமுறை கூடிய போது கொங்கு நாட்டின் நான்கு தலைவர்கட்கு முடிசூட்டினர். சங்கரண்டாம்பாளையம் பெரியகுல வேணாடுடையார், வெள்ளோடு உலகபுரம் சாத்தந்தை குல உலகுடையார், ஆனூர் பயிரகுலச் சர்க்கரை மன்றாடியார், பூந்துறைக் காடைகுல நண்ணாவுடையார் ஆகிய நால்வருமே முடிசூட்டப்பட்டவர்கள்.

"வேணாடுடையான் வெள்ளோடு உலகுடையான்
ஆனூர்க்குச் சர்க்கரை மன்றாடி - வேணு புகழ்
நாவேந்து பூந்துறைசை நண்ணா வுடையார்க்கு
மூவேந்தர் சூட்டும் முடி"

என்பது அப்பாடலாகும்.



"ஆனூர் புரக்கின்ற சர்க்கரை"
"ஆனூர் வாழ் நஞ்சையன் சர்க்கரை"
"கொங்கினில் காரை ஆனூர் எனும்பட்டமது
கொண்ட பயிரன் சர்க்கரை"
"திருமருவு காரை ஆனூர்ப் பட்டம்
திகழ்பெரிய சர்க்கரை"
"காரை ஆனூர் அரசெனும்
விசுவநாதச் சர்க்கரை"

என்ற பாடல் தொடர்கள் மூலம் ஆனூரின் தலைமையும், சிறப்பும் பெறப்படுகிறது. காரையூர் முழுமையாகப் பெற்ற பின் கூட ஆனூரின் முக்கியத்துவம் குறையவில்லை என்பதும் தெரிகிறது. "ஆற்றோரக் கோட்டை" என்று புலவர்களால் புகழப்பட்ட நொய்யல்கரை அரண்மனையில் வீற்றிருந்த போதும் பட்டக்காரர்கள் பலரும் ஆனூர்த் தொடர்பு கூறியே குறிக்கப்பட்டனர். 26-ஆவது பட்டக்காரர் கூட "ஆனூர் மன்னர் நல்லதம்பிச் சர்க்கரை" என்றே பாடலில் குறிக்கப்பெறுகிறார்.

ஆனூரில் ஒரு கோட்டை இருந்தது. அது "ஆனூர்ப் பழங்கோட்டை". அதன் பெயர் தான் பழைய கோட்டை ஆயிற்று. நஞ்சையன் சர்க்கரை ஆனூர் கோட்டையை 100 குடியானவர்கட்கு அன்னமிட்டுக் கோட்டை கட்டும் பணியில் ஈடுபடுத்தினார். இதனை மடவளாகம் சிவராம தேசிகர்

"கொங்கு வேளாளர் பயிர குல மன்னன்
கூடுநல் ஆனூரில் கோட்டை கட்ட
மங்கிய ஏழைக் குடித்தனக் காரர்க்கு
மாதம் நூறு வரை அன்னமிட்டார்"

என்று பாடுகிறார்.

அந்த ஆனூர்க் கோட்டைதான் ஆனூர்ப் பழங்கோட்டை எனப்பட்டது, இன்றும் கூடக் "கோட்டைக்காடு" என்ற பெரிய நிலப்பரப்பு பழைய கோட்டைப் பட்டக்காரர்கட்கு உரியதாக உள்ளது.

ஆனூர்க் கோட்டைக்குள்தான் ஆனூர் அம்மன் கோயில் இருந்தது. இதனை

"தரணியில் பேர் பெற்ற நற் பழைய கோட்டையுள்
தங்கும் ஆனூர்ச் சக்தியே"

என்ற பாடல் பகுதியால் அறியலாம்.

ஆனூர் அம்மன் பழைய கோட்டைப் பட்டக்காரர் மரபிற்குக் குல தெய்வம். அத்தனூர் அம்மன், அருங்கரையம்மன், நங்கபுரம் அம்மன் என்று கொங்கு நாட்டு அம்மன் கோயில்கள் ஊர்ப் பெயருடன் இணைத்து அழைக்கப்படுவது போல ஆனூர் அம்மனும் பெயர் பெற்றது. ஆனூர் அம்மனை காளி, பத்ரகாளி, கரியகாளியம்மன் என்றும் அழைத்துள்ளனர்.

"நேர் சிறந்த ஆனூர்த் தாய் பாதம் வாழி"

என்ற சர்க்கரை மன்றாடியார் ஊஞ்சல் பாட்டுக் கூறுகிறது. ஆனூர் அம்மனை வணங்குவதையும், திருப்பணி செய்வதையும் விழாவெடுப்பதையும் தங்கள் முதல் கடமையாகக் கொண்டு பழைய கோட்டை மரபினர் விளங்கினர்.

நல். இராசகோபால பிள்ளை.

"போதனாம் நல்லசேனாபதிச் சர்க்கரை
புந்திமகிழ் கொண்டுனக்குப்
போதிய படித்தரம் பொங்கு மடமும்
புதிய பணிகளும் புரிவர்"

என்று தன் பாடலில் கூறுகிறார்.

அக்கோயில் முதல் பட்டக்காரரின் தந்தை சோமன் சர்க்கரை கனவில் கண்டு முதலில் கட்டப்பட்டது "சோமன் சர்க்கரையார் சொப்பனத்தில் வந்த சூலி கபாலி எந்நாளினுமே குன்றாது அருள் செய்யும் ஆனூர் வாழ் அம்மன்" என்பது ஒரு பாடல் பகுதி.

"சர்க்கரையார் அடிபணியும் ஆனூர் அம்மை" என்று சிறப்பிக்கப் பெறும். ஆனூர் அம்மன் கோயிலை அழகன் சர்க்கரையார் திருப்பணி செய்ய விரும்பினார். அப்பணிக்காகச் "சிற்பி சோமசுந்தரம்" என்ற ஸ்தபதியாரையும் பொறுப்பாக நியமித்துப் பணிகள் தொடங்கினார். இச்செய்தி எங்கும் பரவியது. பல ஊர்களில் காணியுரிமை கொண்டு வாழ்ந்த பயிர குலப் பெரியவர்கள் தாங்களும் திருப்பணியில் பங்கு கொள்ள விரும்பினர். அழகன் சர்க்கரையும் அதற்கு ஒத்துக் கொண்டார். ஆனால் திருப்பணி முடியும் வரை சிற்பிகள் பழைய கோட்டை அரண்மனையில் நல்ல விருந்து உண்டு கோயில் பணிகளைச் செய்தனர். இதனை சிற்பி சோமசுந்தரமே ஒரு பாடலில் தெரிவித்துள்ளார்.



"உயரு புகழ் ஆனூர் வாழ் உத்தமிமண் டபம் கட்ட
உவந்து வந்து
பயிர குலப் பெரியோர்கள் பணம் மட்டும் தான் கொடுத்தார்
பணியாளர்க்கு
வயிறு நிறையச் சோறும் வாய்க்கு வெற்றிலை பாக்கும்
வாங்கித் தந்து
தயிரொடு மூ வேளையிட்ட தர்மமிது அழகன் சர்க்
கரையதாமே"

என்பது அந்தப் பாடல்.

பட்டக்காரர்கட்குப் பட்டம் சூட்டும் பட்டாபிஷேக நிகழ்ச்சிகள் பலவற்றுள் இறுதியாக நிகழ்வது ஆனூர் அம்மன் வழிபாடே. இதனை

"செங்கோல தானவாள் கைக்கொண்டு
செண்டிகா தேவி திருவடி வணங்கி
செப்பமுள்ள போசனம் ஒப்புவமை இல்லாது
சேர்ந்த அனைவோரும் உண்டு
செழித்த ஆனூர் அம்மை தரிசனம் செய்தபின்
சிறப்பான சொர்ணதானம்
செய்தெவரு மே மகிழ்வு எய்தினார்கள்"

என்ற கொற்றவேல் சர்க்கரையார் முடிசூட்டுப் பாடலின் இறுதிப் பகுதி விளக்குகிறது.

சில பட்டக்காரர்களின் வீட்டுத் திருமணமும், மகனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டும் நிகழ்ச்சியும் ஆனூர்க் கோயிலில் நடைபெற்றுள்ளது. இந்நிகழ்ச்சி கரியான் சர்க்கரை பற்றிய பாடலில் இடம் பெறுகிறது.

"சார்ந்தமதி அழகன் சர்க் கரையார் மைந்தர்
சற்குணவான் கரியசர்க் கரையார் ஆவார்
தேர்ந்ததிரு மணம் ஆனூர்த் தேவி கோயில்
திறமான பந்தலிலே சிறப்பாய்ச் செய்து
தேர்ந்தமக னுக்கு இளமைப் பட்டம் சூட்டி
நிலைத்தவர் குடும்ப பாரம் தாங்க
கூர்ந்ததுற வரம் பூண்டு தலங்கள் சுற்றிக்
குண்டலியின் யோகமதைக் குறிக் கொண்டாரே"

என்பது அப்பாடலாகும்.

சில பட்டக்காரர்கள் நாள்தோறும் ஆனூர் அம்மனை வழிபடும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். நஞ்சையன் சர்க்கரையார் நாள்தோறும் கையில் பட்டத்து வாளை எடுத்துக் கொண்டு தடி வீச்சில் வல்ல சொக்கநாதன் உடன் வர இரவில் சென்று அம்மனின் இரவுக் காலப் பூசையை முடித்த பின்னரே இரவு உணவுண்ணும் வழக்கத்தைக் கொண்டிருந்தார்.

"கைதனில் பட்டத்து வாளுடனே ஆனூர்க்<br>
காளியின் இராக்காலப் பூசைக்கிவர்<br>
பொய்சொல்லாச் சொக்க நாதனுடன்<br>
போய் வந்த பின்னரே புசிப்பெடுப்பார்"

என்ற பாடல் விளக்கும்.

சில பட்டக்காரர்கள் அரண்மனைக் கடிதங்களிலும் பத்திரம் முதலிய ஆவணங்களில் கூடத் தங்கள் பெயரை எழுதாமல் "ஆனூர் அம்மன் துணை" என்று மட்டும் எழுதினர். (காஞ்சிப் பெரியவர் "நாராயண ஸ்மிருதி" என்றும் ,"காசி மடத்து அதிபர் "சிவ சிவ" என்றும் எழுதுவது வழக்கம்)

"பத்திர சத்திரஞ் சாதி ஓலை எல்லாம்<br>
பண்புள்ள தன் பெயர் போடாதே<br>
நித்தமும் ஆனூர் நிமிலி துணை என்று<br>
நீண்ட கையெழுத்துப் போட்டிடுவார்"

என்பது பழைய கோட்டை மரபுப் பாடலில் ஒன்றாகும்.

ஆனூர் அம்மன் கோயிலில் "செல்ல மூப்பன்" என்ற நாடார் சமூகப் பெரியவரின் உருவச் சிலை ஒன்றுள்ளது. அவர் உருவம் அங்கு இருப்பதற்கான காரணத்தை அரண்மனைக் கணக்கர் ராமபிள்ளை பெரிய சர்க்கரையாருக்கு எழுதிய சீட்டுக் கவியில் குறித்துள்ளார். ஆனூர் அம்மனின் வேண்டுகோள்படி செல்ல மூப்பன் குடிப்பழக்கத்தை விட்ட விபரம் கூறப்பட்டுள்ளது.

ராமபிள்ளை பாடலில்

" நாடார் கூட்டம்<br>
திரண்டு வந்து செல்லையனைத் தரிசிப்பார்கள்<br>
அறிந்தவர்கள் அம்மனுக்கும் அபிஷேகித்து<br>
அனைவரும் நம் பட்டத்துக்கு அடிமை ஏவல்<br>
பரிந்து செய்வர்"

என்று கூறப்பட்டுள்ளது.



மற்றொரு பாடலில்,

"தாயென உனைத்தினம் போற்றிப் பணிந்திடும்<br>
சர்க்கரைத் துரைகள், இன்னம்<br>
சகலகுடி நாடார்கள் எவரும் மனத் தன்புடன்<br>
தாழ்ந்தடி வணங்கி வந்து<br>
சாலவே அபிஷேக மாதி நைவேத்யம்<br>
தந்துகை கூப்பி நிற்க"

என்ற தொடர்கள் காணப்படுகின்றன.

ஆனூர் அம்மன் கோயிலில் வடபுறம் கம்பக் கருப்பணன், அல்லது கம்பத்துக் கருப்பணன் என்ற காவல் தெய்வமும் உள்ளது. புலவர்கள் கம்பத்துக் கருப்பணன் பற்றியும் பாடல்கள் பாடியுள்ளனர்.

பழைய கோட்டை மரபினரால் ஆனூர் அம்மன் கோயில் மிகச் சிறப்புடன் திருப்பணி செய்யப்பட்டு தூய்மையாக விளங்குகிறது. ஆனூர் அம்மன் சிலை புதியதாகச் செய்து எழுந்தருளச் செய்திருந்தாலும், பழைய சிலையையும் கிழக்குப் பிரகாரத்தில் தனிச் சந்நிதியாக அமைத்து வழிபட்டு வருவது மிகவும் சிறப்புக்குரியதாகும். இக்கோயிலில் நவக்கிரகங்கள் தங்கள் தேவிமாருடன் எழுந்தருளியிருப்பது மிகவும் சிறப்புக்குரியதாகும். சம்பிரதி சடையபிள்ளை அவர்கள் ஆனூரம்மன் மீது பதிகம் ஒன்று பாடியுள்ளார். பழைய கோட்டைப் பட்டக்காரர் மரபினர் அளிக்கும் புனிதமான படித்தரத்தால் நாட்பூசை பரம்பரைப் பண்டாரங்களால் மிகச் சிறப்பாகச் செய்யப்படுகிறது.

## சண்டிகா தேவி கோயில்

பழையகோட்டை அரண்மனையுள் எழுந்தருளி அருள்புரியும் தெய்வம் சண்டிகாதேவி. அரண்மனையில் சண்டிகாதேவி கோயில் அமைய ஒரு வரலாற்று நிகழ்ச்சி காரணம் ஆனது.

ஒரு சமயம் நல்ல சர்க்கரை உத்தமக் காமிண்டன் விஜயநகரம் சென்று அச்சுதராயர் அரண்மனையில் தங்கி இருந்தார். போர்க்கலை முதலியன கற்ற பெரு வீரரான நல்ல சர்க்கரை தேவகிரிச் சிவந்தாரய்யர் என்பவரிடம் "சொட்டைமுனை" என்ற விசேடப் போர்க்கருவியில் பயிற்சி பெற்றுச் சிறந்து விளங்கினார். அப்போது டில்லியிலிருந்து விஜயநகரம் வந்த "வச்சிரவாகு" என்ற மல்லன் தன்னை" எவரேனும் வெல்வார் உண்டோ" என்று சவால் விட்டான். விஜயநகர மல்லர்கள் அனைவரும்

டில்லி வச்சிரவாகுவோடு போர் செய்து தோற்றனர். விஜயநகர ஆட்சியில் டில்லி மல்லனை வெல்ல ஒருவரும் இல்லையா? என்று அச்சுதராயர் கேட்க "இதோ நானிருக்கிறேன்" என்று பழைய கோட்டை நல்ல சர்க்கரை முன் வந்தார். குரு தேவகிரி சிவந்தாரையர் ஆசியாலும், ஆனூரம்மன் அனுக்கிரகத்தாலும் நல்ல சர்க்கரை டில்லி வச்சிரவாகுவை மிக எளிதில் வென்றார்.

விஜய நகரின் மானம் காத்த நல்ல சர்க்கரை விஜய நகர மன்னர் அச்சுதராயர் சபையில் மிகு சிறப்புப் பெற்றார். அச்சுதராயர் நல்ல சர்க்கரையைச் சரியாசனத்தில் அமரச் செய்து அநேக விருதுகளையும் வீரவெண்டயம் முதலானவை தந்து "எட்டுத் திக்கும் சொட்டைக்காரர் கண்டன்" என்ற பட்டத்தையம் அளித்தார். மிகு சிறப்புக்களோடு பழைய கோட்டைக்கு அவரை அனுப்பி வைக்கும் போது அங்குள்ள மூன்று அம்மன்களில் ஒரு அம்மனைக் கொடுக்கும்படி நல்ல சர்க்கரை அரசரைக் கேட்டார். அரசர் மகிழ்ந்து சண்டிகா தேவியையும், அந்த அம்மனுக்கு மந்திரபூர்வமாகப் பூசை செய்ய யானைக்கைச் சிவந்தாரய்யர் என்பவரையும் உடன் அனுப்பி வைத்தார். நல்ல சர்க்கரையாரால் சண்டிகாதேவி பழைய கோட்டை அரண்மனையில் பிரதிட்டை செய்யப்பட்டது.

இதனை,

"தோற்றும் கலியுக மூவாயிரத்துத் தொளாயிரத்தில்
தேற்றிடும் விக்கிரம தை ஏழ் குரு தசமி தினத்தில்
போற்றுநல் சர்க்கரை வச்சிர வாகுவைப் போர் தடிந்து
மாற்றிப் புகழ் அச்சுதராயர் கையினில் வாங்கினனே"

"வாங்கி வர விஜயநகரத்து ராயர் வா என்று
சர்க்கரையை அழைத்துக் கூலி
தேங்கி நின்று போவது யாது என வினாவத்
தீரமுள்ள மூன்று தேவிகளில் ஒன்றைப்
பாங்குடனே தருதி எனப் பகரக் கேட்டு
பண்புள சக்கரத்தோடு செண்டிகையும் கூட
ஒங்கு செவந்தாரையுமே வழி அனுப்ப
உவப்போடு வந்தனர் காரை ஆனூருக்கே"

என்ற பாடல்கள் விளக்குகின்றன.



சண்டிகாதேவி அரண்மனைக்கு எழுந்தருளச் சொட்டை முனை ஆயுதம் காரணமாக இருந்ததால் இன்றும் செண்டிகாதேவி ஆலயத்தில் சொட்டை முனை ஆயுதம் சிறப்புடன் வைக்கப்பட்டுள்ளது.

சண்டிகா தேவி ஆலயத்தில் நவராத்திரி விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெறும். நவராத்திரிக் கொலு விசேடம் பற்றிக் காரையூர் செயங்கொண்டய்யர் "கலிவெண்பா" என்ற இலக்கியத்தைப் பாடியுள்ளார். நாற்பத்து முக்கோணச் சக்கரத்தில் சண்டிகா தேவி எழுந்தருளியுள்ளார்.

பிள்ளைச் சர்க்கரையார் சண்டிகா தேவி சக்கரத்திற்கு அதிக பலம் உண்டாக 48 நாட்கள் விரதமிருந்து பூசை செய்து நிறைவேற்றினர்.

"எண் திசையும் புகழுடைய பிள்ளைச் சர்க்கரை மன்னன்
இனிமையாக
மண்டியிட்டு விரதமொடு பூசை மிகவே செய்தோர்
மண்டலத்துள்
கொண்ட உரு லட்சமது நாற்பத்து முக்கோணம்
கோரி ஏந்தி
செண்டிகையின் சக்கரத்தை அதிகபலம் செய்து வைத்துச்
சிறப்புற்றாரே"

எனச் சிவமலை ஆறுமுகக் குருக்கள் இதைக் குறிப்பிடுகிறார்.

பட்டாபிஷேகத்தின் போது முதல் வணக்கம் சண்டிகா தேவிக்கே, சண்டிகாதேவி பதிகத்தில்

"தருவே காரைப் புது நகரம்
தழைக்கும் சண்டிகேஸ்பரியே"

எனக் கூறப்பட்டுள்ளது. ஆனூரம்மையோடு சண்டிகாதேவியையும் இணைத்து ஒன்றாகப் பாடல்கள் பாடியுள்ளனர்.

"சேணாடர் பரவும் ஆனூர் அம்மையே
சண்டிகா தேவி உமையே"

என்பது அப்பாடல் பகுதியாகும்.

தென்னிலைப் போரில் வெற்றியைக் கொடுத்தது சண்டிகா தேவியே என்று ஒரு புலவர் பாடுகிறார். பல அற்புதங்களைச் சண்டிகாதேவி செய்துள்ளார்.

சிவமலை பரமசிவக்குருக்கள் காக்கை வலி நீக்கியது.

கந்தக்குருக்களின் கசப்பு நோய் நீக்கியது.

சிவமலை ஆறுமுகக் குருக்கள் பாம்பு விஷத்தை இறக்கியது.

போன்றவை கூறப்படுகின்றன.

"எந்த வாரத்திலும் எந்த நேரத்திலும்
உந்தனை நினைத்த இடத்து உத்தமி நீ வந்துதவி
அஞ்சல் என்று காத்து அனுதினமும் ரட்சிப்பாய்"

என சண்டிகா தேவியை வேண்டுவர்.

சண்டிகா தேவி மீது 'நவகம்' என்ற ஒன்பது பாடல் கொண்ட தொகுதி ஒன்றுள்ளது. உள்ளத்தை உருக்கும் அப்பாடல்களை 26ஆம் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் தேவியார் கருணையாத்தாள் நாள்தோறும் தன் பிரார்த்தனையில் பாடு வார். அவற்றில் இரு பாடல்கள் :

அன்னையும்நீ தந்தையும்நீ அண்ணனோடு தங்கையும் நீ
என்னைமனம் தேற்றுவிக்கும் ஈடில்லாத் தோழியும்நீ
உன்னை அன்றி இவ்வுலகில் உள்ளவர்கள் இல்லையென்றும்
சன்னிதியில் வந்துநின்றேன் சண்டிகா தேவி அம்மே!

ஒருவரையும் நோவாமல் உற்றவரைக் காயாமல்
வருபவரை இன்மொழியால் வரவேற்று உபசரித்து
இரும்எனவே சொல்லி இனியமொழி கூறஅருள்
தரவருவாய் எனைஈன்ற சண்டிகா தேவிஅம்மே!

அழகன் சர்க்கரையார் சண்டிகாதேவி பதிகம் பாடியுள்ளார்.

நத்தக்காடையூரில் மணிய குலத்தாரின் கரிய காளியம்மன் கோயிலும், செங்குந்தர்கட்குக் காமாட்சி அம்மன் கோயிலும், ஊர்ப்பொதுவாக மாரியம்மன், முனியப்பன், கருப்பணசாமி கோயில்களும் உள்ளன. நொய்யல் விநாயகர், செங்காட்டு முனியப்பன், கோட்டைக் கருப்பணசாமி கோயில்களும் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளன.



## செயங்கொண்டீசுவரர் கோவில்

நத்தக்காடையூரில் உள்ள சிவன்கோயில். அம்மன் பெயர் நல்லமங்கையம்மன் பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் மரபில் பலர் மிகச் சிறந்த சிவபக்தர்களாகவும், பஞ்சாக்கர உபதேசம் பெற்றவர்களாகவும், சிவவேடப் பொலிவு தாங்கியவர்களாகவும், சிவநேயர்களைப் போற்றும் நற்பண்புள்ளவர்களாகவும் இருந்துள்ளதால், செயங்கொண்டீசர் மீது மிகவும் பக்தியுடையவர்களாகத் திகழ்ந்தனர்.

அழகன் சர்க்கரையார் "செயங்கொண்டநாதர் பதிகம்" பாடியுள்ளார். கொற்றவேல் சர்க்கரையார் "நல்லமங்கையம்மன் சதகம்" பாடியுள்ளார். நடேச பாஸ்கர தீட்சிதர் "நல்ல மங்கையம்மன் அந்தாதி" பாடியுள்ளார். வேறு சில புலவர்களும் தனிப்பாடல்கள் பாடியுள்ளனர். இக்கோயிலைப் பலகாலமும் திருப்பணி செய்தவர்கள் பழைய கோட்டை மரபினரே. நஞ்சையன் சர்க்கரையார் மகன் பாலவடிவேல் கவுண்டர் தன் சொந்த விவசாய வருமானத்தைக் கொண்டு ஒருவராகவே செயங்கொண்ட நாதர் கோயில் திருமதிலைக் கட்டினார்.

கொற்றவேல் சர்க்கரையார் செயங்கொண்டநாதர் கோயிலைப் புதுப்பித்து முன்னர் இன்றும் ஓங்கி நிற்கும் தீபத் தம்பம் நிறுத்தினார். தீபத் தம்பம் நிற்கவில்லை. ஒடிந்து விழுந்தது. தபசிருந்து தீட்சை (தாடி) வளர்த்து கருடகம்பம் நின்றால்தான் என் தாடி குறையும். தீபத் தம்பம் நிற்காமல் முறிந்தால் என் தாடி வளரும் என்று உள்ளமுருகப் பாடியுள்ளார். அவர் நிறுத்திய தீபத்தம்பம் மேற்குப் பக்கம் அவருடைய உருவச் சிலை தாடியுடன் உள்ளது.

"அங்கமது பாதியதில் அம்பிகையை வைத்த நமது
அரனுடைய கருடகம்பம்
அடுத்த வருடத்துடனே நிறுத்தி முடிவாகில் என்
அழகுவெண் தாடி குறையும்"

"நீள்கருட கம்பமது இனித்துண்டாம் ஆகில்என்
நீண்டஇத் தாடி வளரும்" என்பன அவர் பாடல்.

கும்பாபிஷேகம் போல இது கருடகம்ப அபிஷேகம் என்று அழைக்கப்பட்டது.

அழகன் சர்க்கரையார் மனைவியார் சிவகாமி அம்மையார் நல்லமங்கையம்மனின் கை துண்டானதைப் பற்றி மிக வருந்தி புது அம்மன் சிலை வைக்கக் காரணமாக இருந்தார். அழகன் சர்க்கரை விஞ்சை உரு லட்சம் கொண்ட தங்கத் தகடு செருகிய கைப்பிரம்பால் விஷம் நீக்கினார். செயங்கொண்டநாதர் அருளினால் அந்த அற்புதத்தைச் செய்தார்.

"சுயங்கொண்ட தங்கத்தின் தகடு தன்னைச்
சொருகி அடைத் துள்ளதற்குத் தூபம் இட்டு
செயங்கொண்ட நாதரின் மேல் ஆணை வைத்துச்
சிரம் மீதில் நூற்றெட்டுத் தரம் அடித்து"

அவர் விடம் நீக்கினாராம்.

செயங்கொண்ட நாதர் கோயிலில் மருதுறை ஆலால சுந்தரபண்டிதர் பட்டவில்வமரத்தை விபூதி போட்டுத் தழைக்க வைத்துள்ளார். அர்ச்சகர் மகள் ஊமைப் பெண் சிவகாமியைப் பேச வைத்துள்ளார். இக் கோயிலில் ஐந்து கல்வெட்டுக்கள் பட்டக்காரர் மரபுச் செய்திகளைக் கூறுகின்றன. விசுவநாதச் சர்க்கரையார் நொய்யல் ஆற்றை அடைத்துப் புது அணை கட்டிப் பாசனப் பெருக்கம் செய்ததை ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. மற்ற நான்கும் செயங்கொண்டநாதர் கோயில் திருப்பணி பற்றியவை. மணிய குலத்தாரும், ஊர் வணிகர்களும், சிவாச்சாரியார் குடும்பத்தினர் பற்றிய கல்வெட்டுக்களும் உள்ளன.

(1) "ஸ்வஸ்தி ஸ்ரீ மகாமண்டலீசுவரன் ஸ்ரீ வீரமல்லிகார்ச்சுனராயர்க்குச்
செல்லா நின்ற பிரபவ வருஷம் வைகாசி மாதம் 23-ம் தேதி
காங்கய நாட்டுக் காரை ஊரில் வெள்ளாளன் பயிரர்களில் கொங்க
வேளதரையர் இராட்சதப் பெருமாள் இட்ட தூண்"

(2) "ஸ்வஸ்தி ஸ்ரீ காரை ஊரில் வெள்ளாளன் பயிரர்களில் அழகன் உத்தம
சோழக் காமிண்டன் கரியான் உத்தம சோழக் காமிண்டன் தூண்"

(3) "ஸ்வஸ்தி ஸ்ரீமகாமண்டலீசுவரன் ஸ்ரீவீர மல்லிகார்ஜுனராயர்க்குச்
செல்லாநின்ற பிரபவ சம்வத்சரத்து வைகாசி மாதம் 23-ம் தேதி
காங்கைய நாட்டில் காரையூரில் வெள்ளாளன் பயிரர்களில் கொற்றன்
உத்தமக் காமிண்டன் அழகப் பெருமாள் இட்ட தூண்"



(4) "ஸ்வஸ்தி ஸ்ரீ காங்கய நாட்டுக் காரையூரில் வீரநாயனார்
கொங்க வேளதரையர் சிறுவப்பன் கொங்கவேளதரையர்
இட்ட தூண்"

(5) "ஸ்வஸ்திஸ்ரீ மகாமண்டலீசுவரன் அரிய ராயவிபாடன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் ராமதேவமகாராயர் காரியத்துக்குக் கர்த்தரான முத்து வீரப்ப நாயக்கனய்யனவர்கள் தெட்சிண சமுத்திராதிபதியாய்ப் பிருத்விராச்சியம் பண்ணியருளா நின்ற கலியுகம் 4722 இதில் சாலிவாகன சகாப்தம் 1543-க்கு மேல் செல்லாநின்ற துன்முகி வருஷம் பங்குனி மாதம் 9-ம் தேதி ஆதித்த வார நாள் காங்கய நாட்டில் காரையூரில் வெள்ளாளப் பயிரர்களில் நல்லதம்பிக் கவுண்டர் விசுவநாதச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் தம்முடைய வெற்புவாசிச் சொத்திலே காஞ்சி நதி தீரத்தில் நவப்பிரதிஷ்டையாக அணையும் வாய்க்காலும் கண்டு மேற்கு சர்க்கரைப்பாளையம் கிழக்கு பெரிய காரையூரிலே தெற்கு கோயிற்கரையளவும் இதுவெல்லாம் சுவாமி செயங் கொண்ட நாத தம்பிரானார்க்குப் பூர்வம் நடந்து வந்தது. இந்தப் புஞ்சையில் நஞ்சை நிலங்கண்டதெல்லாம் சுவாமிக்கு விட்டோம். இப்பால் பெரிய காரையூரிலேயிருந்து ஆற்றுக்குப் போகிற இட்டேரிக்குக் கிழக்கும் புதுக்கோட்டையில் பெரிய குளமும் சின்னக் குளமும் இது கூடின நிலமும் அப்பால் நீரோடி நிலம் ஏழுமாவாக கூடிய நிலத்தில் பாதி நிலம் சுவாமிக்கு விட்டோம். கோயிலுக்கு மேற்கு கந்தப்பன்பாளையத்திலிருந்து சர்க்கரைப் பாளையத்திற்குப் போகிற இட்டேரி மட்டும் அதுக்கு வடக்கு சர்க்கரை பாளையத்து மட்டும் காரையூர் சுற்றுக் கிராம குடியில் கலியாணத்துக்குப் பதினஞ்சு பணமும், திருப்பணி வேடிக்கை குடிக்கொரு பணமும் கட்டளையிட்டோம். ஊர்க்கணக்கு பொன்னாளிப் பிள்ளை மகன் சடைய பிள்ளை எழுத்து"

பிற்காலத்திலும் தென்னிலை வேட்டுவர்களால் காங்கய நாட்டில் தொல்லை ஏற்பட்டது. இப்போது பாதிக்கப்பட்டவர் காடையூர் காங்கேய மன்றாடியார். அவர் நல்லதம்பிச் சர்க்கரையாரிடம் உதவி கேட்டார். நல்ல தம்பிச் சர்க்கரை தென்னிலை சென்று வெற்றி வாகை சூடினார். அவ்வெற்றி செயங்கொண்டநாதர் அருளால் ஏற்பட்டது எனப் பூந்துறை பாலதண்டாயுதபாணிக் கவிராயர் பாடியுள்ளார்.

"குமார காங்கய மன்றாடி
கொற்றவர்க்கு அரிதான சர்க்கரை நீ வா என்று
கொண்டாடி வரவழைத்து
திட்டமுடன் வென்றுவா என்னவே வெட்டியே
செயங்கொண்ட நாதர் அருளால்
தென்னிலையில் சென்று முக்குறுணி தாலியைத்
தீர்க்கமுட னே அறுத்து
வட்டமிடு பரிநகுலன் உத்தமக் காமிண்டன்
மன்னு சொட்டைக்கு அதிபன்
மருவலர்கள் திறைகொண்ட நல்லதம்பிச் சர்க்கரை"

என்பது அவர் பாடலாகும்.

காரையூர் செயங்கொண்டநாதர் கோயிலில் ஒரு குதிரைப் பந்தயம் நடைபெற்றது. நவராத்திரி விழா விஜயதசமி அன்று செயங்கொண்டநாதர் கோயில் தேர்வரு நான்கு வீதிகளையும் மூன்று சுற்றுச் சுற்றி முதலில் வரவேண்டும். கலந்து கொண்டவர்கள், ஏழுபேர். கொற்றவேல் சர்க்கரையார், ஊடையம், குட்டப்பாளையம், தாழையூர் அண்ணன்மார் மூவர், பூந்துறை, புதூர் மைத்துனர் இருவர், அரவக்குறிச்சி ஆறுமுக சேர்வை ஆகியவர்கள் தான் ஏழுபேர்.

முதலில் வந்து வெற்றி பெற்றவர் கொற்றவேல் சர்க்கரைதான். வென்றவர்க்கும் அவர் குதிரைக்கும் மாலை சூட்டப்பட்டது. மேளதாளத்தோடு வரவேற்பு பால்பாயாசம், தாம்பூலம் தரப்பட்டது. செயங்கொண்டநாதர் கோயில் தேவரடியார்கள் சந்தனம் பூசினர். கொற்றவேல் தனக்குச் செய்யப்பட்ட மரியாதையை விட மிக அதிகமாக மற்ற ஆறு பேருக்கும் செய்யுமாறு கூறி மகிழ்ந்தார்.

இக்கோயில் பணியாளர்களாகிய காரையூர் செயங்கொண்டய்யர், காரையூர் குருநாத நட்டுவன், சம்புலிங்க ஓதுவார், காரையூர் தேவஸ்தானம் கிடுமுட்டி ஊழியம் கணபதி ஆகியோர் பட்டக்காரர்கள் ஆதரவு பெற்ற புலவர்களாகவும் விளங்கினர்.

இக்கோயில் நெடுநாட்களுக்குப் பின் பழைய கோட்டை மரபினரால் புதுப்பிக்கப்பட்டுள்ளது. கோயில் வளாகத்திலேயே சீதேவி பூதேவி சமேத வரதராசப் பெருமாள் கோயில் உள்ளது. இக்கோயில் கல்வெட்டுக்கள் 1920-ஆம் ஆண்டுபடி எடுக்கப்பட்டன.



## சிவமலை:

சிவமலைக் கோயில் பழைய கோட்டைப் பட்டக்காரர் மரபினருக்கு உரியதாக இருந்தது. 27-ஆம் பட்டக்காரர் நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் தமிழக அரசின் இந்து சமய அறநிலையத்துறைக்கு ஒப்படைத்தார்கள்.

## தேர்ப்பாதை:

சிவமலைக்குத் திருப்பணிகள் பலவற்றை பழைய கோட்டை மரபினர் செய்துள்ளனர். கரியான் சர்க்கரையார் நூறு செம்மறியாடுகள் விற்று வந்த பணத்தில் சிவன் மலையாண்டவர் தேர் வரும் பாதையை அமைத்தார்.

"பாரும் காரைமன் கரியான் சர்க்கரை பக்தி மிகப் பெருகி
பண்புள சிவமலை ஆண்டவர் தேர்வரு பாதை அதை நிரவி
நேரும் கலியுகம் நாலாயிரமொடு நானூற்றைம்பது [redacted] மேல்
நிகழும் நந்தன ஆண்டுதை பத்தேழ் நிலை பெயர் தேதியினுள்
சீரும் கொண்டிட வே கிரி சுற்றிச் செப்பமிடத் தனது
செம்மறி யாடுகள் நூறது விற்றுச் சேர்ந்த பணத்தினிமே
ஏரும் குதிரைகள் இரண்டது வைத்திங்கு ஒன்றங்கு ஒன்றதின் மேல்
எக்கியே வந்திரு வேளையு மே தினம் ஏழுள் முடித்தனரே"

என்பது சிவமலை சிவகிரி பண்டிதர் பாடலாகும்.

## மலைப்பாதை:

அழகன் சர்க்கரையார் மகன் தீர்த்தகிரிச் சின்னமலை என்பவர் பாறைகளைப் பிளந்து சிவமலைக்கு மலைப்பாதை அமைத்தார். அதைக் குறிக்கும் பாடல்,

"அழகன் சர்க்கரைச் சிறுவன் அனுமந்தர் கோயில்வரப்
பழகுவதைப் பார்த்துக் கல் பாறைகளை - மளமள எனப்
பேர்த்துச் சிவமலைமேல் பெரும்பாதை செய்தாரே
தீர்த்தகிரிச் சின்னமலைத் தேன்"

என்பதாகும்.

## நொண்டிச் சிந்து:

பெரிய சர்க்கரையார் மனைவி வள்ளியாத்தாள் ஆரியப் பட்டியைச் சேர்ந்தவர். கற்றறிந்த புலவரான அவர் சிவமலை நொண்டிச் சிந்து பாடியுள்ளார்.

"திருமிகு சிவமலைவாழ் - முருகனே
சீதரன் மருமகனே - நம்பினோர்கள்
சிந்தனையைத் தீர்த்துவைக்கும் கந்த நாதனே"

என்ற வள்ளியாத்தாள் என்ற தன் பெயரை கொம்பொடிந்த வெள்ளியம்மாள் என்று எழுதியவர். இவர் மூத்த மகன் பட்டத்திற்குரிய விசுவச் சர்க்கரை கால் வெண்குட்டம் சிவமலையாண்டவர் அருளால் நீங்கியது.

__விசுவநாத சர்க்கரையார் திருப்பணி:__

விசுவநாதச் சர்க்கரையார் சிவமலைத் திருப்பணி செய்தார். அவர் அதற்காக இரண்டு மாதம் சிவமலையிலேயே தங்கியிருந்தார். அவர் குருநாதர் நடேச பாஸ்கர தீட்சிதர்

"திருவுலவு சிவமலைக் குமரேசன் ஆலயத்
திருப்பணியிலே இரண்டு
திங்களாய் அங்கேயே தங்கியுள
பயிர குலதிலகமே காரை ஆனூர்
தரும அரசெனும் விசுவநாதச் சர்க்கரை
வள்ளல்"

என்று பாடியுள்ளார்.

__சிவமலைக் குடமுழுக்கு:__

25-ஆம் பட்டக்காரர் நல்லசேனாபதிச் சர்க்கரையார் மனைவி வள்ளியாத்தாள் காங்கேயம் பல்லவராயர் மகள். சிலம்ப கவுண்டம்பாளையம் சுந்தரக் கவுண்டர், குட்டப்பாளையம் சேனாபதிக் கவுண்டர், காங்கேய நாட்டார் ஆகியோருடைய துணையுடன் சிவமலைக் குடமுழுக்கு விழாவைச் சிறப்பாக நடத்தினார்.

சிவமலையைச் சேர்ந்த சிவகிரி பண்டிதர், ஆறுமுகக் குருக்கள் ஆகியோர் பழைய கோட்டைப் பட்டக்காரர் ஆதரவு பெற்ற புலவர்கள்.

__கொங்கேழு சிவாலயம்:__

கொங்கு நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் ஏழு. அவை கரூர், வெஞ்சமாங்கூடல், கொடுமுடி, திருச்செங்கோடு, பவானி, அவிநாசி, திருமுருகன் பூண்டி என்பவை. இவைகளைத் தொகுத்துக் கூறி நாள்தோறும் நினைத்து வாழ்ந்தவர்கள் கொங்கு மக்கள். இதனை

"ஆதி கருவூர் அணி வெஞ்சை மாக்கறைசை



நீதி அவிநாசி நீள்நணா - மேதினியின்
தஞ்சமாம் செங்குன்றூர் தண்முருகன் பூண்டிதமை
நெஞ்சமே நித்தம் நினை"

என்ற பாடல் விளக்கும்.

கொற்றவேல் சர்க்கரையார் ஒரு குதிரையில் ஏறிக்கொண்டு காலையில் தொடங்கி அன்று அஸ்தமனத்துக்குள்ளே ஒரு பகலில் ஏழு கொங்குச் சிவாலயங்களையும் தரிசித்துத் திரும்பினார். மக்கள் அதிசயமும் ஆச்சரியமும் பெற்று அவர் "கருங்குண்டுக் குதிரை" என்ன பாக்கியம் செய்ததோ என்று அந்தக் குதிரைக்குக் காணிக்கை பத்து, நூறு, ஆயிரம் எனக் காணிக்கை வைத்து வணங்கினார்களாம்.

இதனை

"பெரிய சர்க்கரை உத்தமக் காமிண்டர்
பேரன் கொற்றவேல் சர்க்கரை யாரிவர்
கரிய குண்டுக் குதிரைமேல் ஏறியே
காணும் ஓர் பொழுது அத்த மனத்துளே
அரிய கொங்குச் சிவாலயம் ஏழையும்
அணுகிச் சேவித்து அரண்மனை சேர்ந்த அப்
பரியைக் காணுதற்குப் பாத காணிக்கை
பத்து நூறுடன் ஆயிரம் ஆகுமே"

என்ற சம்புலிங்க ஓதுவார் பாடல் விளக்குகிறது.

__சிவ வேட விருப்பம்:__

பயிரன் சர்க்கரையார் கள் குடித்தோரைக் கண்டால் குதிரையின் கடிவாளம் பிடித்து முன் ஓடச் சொல்வார். சண்டையிடும் பெண்களைக் கண்டால் சாணிக்கூடை சுமக்கச் சொல்லுவார். ஆனால் விபூதி பூசியவர்களைக் கண்டால் வணங்கி அழைத்து விருந்தளித்து மகிழ்வார்.

"பிள்ளை சர்க்கரை மன்றாடி யார்சுதன்
பிரியமுள்ள பயிரநல் சர்க்கரை
கள்ளை உண்டு களிப்போரைக் கண்டிடில்
கடிய குதிரைமுன் கயிறு பிடிக்கச் செய்வார்
சள்ளைப் பெண்டுகள் சண்டையைக் காணுங்கால்

சாணிக்கூடை சுமை வைத்துச் சாடுவார்
வெள்ளை விபூதி வேஷத்தைக் கண்டிட்டால்
விரும்பி வேண்டி விருந்துண்ணச் செய்வரே"

என்பது அதை விளக்கும் பாடல்.

சர்க்கரை மடம்

கரியான் சர்க்கரையார் இளைய புதல்வர் சொக்கன் சர்க்கரை சிறந்த சிவபக்தர். எப்பொழுதும் முருகா முருகா என்று உச்சரித்துக் கொண்டேயிருப்பார். மேனி முழுதும் முழுநீறு பூசும் பழக்கம் உடையவர். நிருவிகற்ப சமாதி அடையப் பழனி சிறந்த இடம் என்று கருதிப் புன்னம் என்ற ஊரில் குடும்பத்தை விட்டுப் பழனி சென்றார். பழனியில் சண்முக நதிக்குச் செல்லும் பாதை அருகில் உள்ள நிலத்தை வாங்கி வேளாளர்களுக்காகச் "சர்க்கரை மடம்" என்ற மடத்தை ஏற்படுத்தினார். அங்கு ஒரு குகை அமைத்து குண்டலினி யோகம் புரிந்து வந்தார். தீட்சை தர தைப்பூசத்தன்று முத்தூர் செல்லக் குப்பண கவுண்டருக்கு மடத்துப் பணியாளர் பழனிவேல் மூலம் ஓலை அனுப்பினார். குப்பண கவுண்டர் குதிரை மீதேறி விரைந்து சென்றார். அவர் சென்று பார்க்கும்போது சொக்கன் சர்க்கரை சமாதியில் அடங்கிவிட்டார்.

"ஊரையே விட்டங்கு சென்று சண்முக நதிக்கு
உறுபாதை அதன் அருகினில்
உற்றதோர் நிலந்தனுக்குத் தக்கவிலை தந்து
உரிமையது செய்துகொண்டு
ஏரையே தெய்வம்என எண்ணும் வேளாளர்க்கு
இனிய சர்க்கரை மடம்என
எவரும் சொலும்படி அமைத்து அதில் சிறியகுகை
ஏற்றபடி செய்து அதனுளே
பாரையே நினையாது குண்டலியின் யோகமது
பண்பொடு புரிந்துவருநாள்"

என்பது அப்பாடல் பகுதியாகும். இன்னும் அந்த மடம் பழைய கோட்டைப் பட்டக்காரர் அவர்கட்கு உரியதாக உள்ளது.



தல யாத்திரை :

கொற்றவேல் சர்க்கரையார் பழனிக்கு வழிபடச் செல்வார். குதிரையில் ஏறி 9 நாழிகையில் பழனியை அடைவார். அதாவது 3 ½ மணி நேரத்தில். அதனை காரையூர் சம்புலிங்க ஓதுவார்,

ஆற்றோரக் கோட்டையை அகன்றுபழ னாபுரியில்
சாற்றுநவ நாழிகையுள் சார்வாரே - ஏற்றமிகும்
கொற்றவேல் சர்க்கரையார் குதிரைச் சவாரிக்கு
மற்றுயார் நிகராம் மதி.

என்று பாடியுள்ளார். கொங்கேழு தலங்கலை ஒரே நாளில் வழிபட்டதும் இவரே.

சொக்கன் சர்க்கரையார் தம்பி குமார சர்க்கரை குடும்பத்தோடு காஞ்சிபுரம் ஸ்ரீகாளத்தி, ராமேசுவரம் ஆகிய இடங்களுக்கு மூன்று மாதம் தலயாத்திரை சென்றதாக சம்பிரதி ராமபிள்ளை பாடியுள்ளார்.

அழகன் சர்க்கரை என்பவர் காசியாத்திரை சென்றார். ஆனால் அவர் காசியிலேயே சமாதியாதி விட்டார். அவர் நினைவாக அங்கு "சர்க்கரை லிங்கம்" உள்ளது.

கரியான் சர்க்கரையாரும், அவர் நண்பர் முத்தூர் செல்ல குப்பண கவுண்டரும் ஆளுக்கொரு குதிரையில் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் தரிசிக்கக் சென்றனர். வைகை ஆற்றில் தண்ணீர் இல்லாததால் கோயில் பொற்றாமரைக் குளத்தில் நீராடினர். வெளியில் கட்டியிருந்த சர்க்கரையாரின் குதிரையும், குளத்திற்கு நீராட வந்துவிட்டது. கோயிலுக்கு வந்த மதுரை மன்னர் வீரப்ப நாயக்கர் அதைப் பார்த்து வியந்தார். கடிவாளம் இல்லாமல் உங்கள் பின் குதிரை வருமா என்று கேட்டார். அவ்வாறே குதிரை வந்தது. மாலை மரியாதை செய்து விருந்தளித்து சர்க்கரையாரை வீரப்பநாயக்கர் பாராட்டினார், சர்க்கரையாரின் குதிரையும் மதுரை நாயக்க அரசரிடம் மாலை மரியாதை பெற்றது. மணிச்சலங்கையும் அதற்குச் சூட்டப்பட்டது.

இரு அம்மன்கள்:

பழைய கோட்டை மரபினர்க்கு ஆனூரம்மன், சண்டிகாதேவி என்ற இரண்டு அம்மன் கோயில்கள் உள்ளன. ஆனூரில் ஆனூரம்மனும், அரண்மனையில் சண்டிகா தேவியும் எழுந்தருளியுள்ளனர்.

ஆனூரம்மன் முதல் பட்டக்காரர் அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் தந்தை சோமன் சர்க்கரையார் கனவில் தோன்றி ஆனூர் கோயில் கொண்டவர். சண்டிகாதேவி விசயநகர மன்னர் அச்சுதராயரால் கொடுக்கப்பட்டு நல்லசர்க்கரையார் விசய நகரத்திலிருந்து கொண்டுவரப்பட்ட தெய்வம்.

பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் ஆனூரம்மனைக் குலதெய்வம் என்றும் சண்டிகா தேவியை துணை செய்யும் தெய்வம் என்றும் வணங்கி வருகின்றனர்.

"சோமன் சர்க்கரையார் சொப்பனத்தில் வந்த
சூலி கபாலி எந்நாளிலுமே
குன்றாது அருள் செய்யும் ஆனூர் வாழ் அம்மனை
குலதெய்வமாகவே தான் படைத்தார்"

"துங்கபத்ரா நதி தீரத்திலே - உள்ள
துய்ய விசய நகரத்திலே
சொட்டை முனையிலே திட்டமானகுரு
சூரன் செவந்தா ரைய்யருடன்
ராயரவர்கள் மகிழ்ந்தளித்த தெய்வம்
நாற்பத்தி முக்கோணச் சக்கரத்தில்
தூய அருள்கொண்ட செண்டிகா தேவியை
துணைசெய்யும் தெய்வம் எனப் படைத்தார்"

என்ற சடையபிள்ளை அவர்களின் பாடல்கள் இதை உணர்த்துகிறது.

சிவன் மலையாண்டவரைத் தங்கள் குடும்ப இஷ்ட தெய்வம் என வணங்கினர்.

## காஞ்சியில் மடம் கட்டல்:

பழைய கோட்டைப் பட்டக்காரர் காரையூர் கொற்றவேல் வீரசங்கிலி நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் நந்தன ஆண்டு வைகாசி மாதம் 11-ஆம் நாள் காஞ்சிபுரம் நாட்டார் மடம் சேசி காவல் பண்டாரத்துக்கு மடம் கட்டிக் கொடுத்து பூசை தொடர்ந்து நடைபெற 40 பொன் ஆண்டுதோறும் கொடுப்பதாக எழுதிக் கொடுத்த பட்டயம்.



"நந்தன வருடம் வைகாசி மாதம் 11 -ம் தேதி நகரம் காஞ்சிபுரம் காலாண்டார் தெருவிலிருக்கும் நாட்டார் மடம் சேசிகாவல் பண்டாரத்துக்கு காங்கய நாடு பழைய கோட்டை காரையூர் கொற்றவேல் வீரசங்கிலி நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் எழுதிக் கொடுத்த தருமசாசனம்.

யென்னவென்றால் உங்களுக்குப் பெரிய நாடு மடம் கட்டி அதில் சிவ பூசை மகேசுர பூசையும் ஸ்ரீ ஏகாம்பர நாதருக்கு வில்வார்ச்சனையும் நிரந்தரம் நடக்கும்படி வருஷம் ஒன்றுக்கு நாற்பது பொன் கொடுத்து சந்தான பாரம்பரியமாயி நடப்பு வித்து வரக்கடவோமாகவும்.

இந்தப்படி சம்மதித்து தர்மசாசனம் யெழுதிக் கொடுத்தோம். பழைய கோட்டை காரையூர் கொற்றவேல் வீரசங்கிலி நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் கையெழுத்து. இதற்கு சாட்சி ஸ்தலம் உள்ளூர் தெய்வசிகாமணி பண்டாரம், நாட்டு முருகப்ப முதலியார் கோனேரி நாடு சபாபதி முதலியார். எழுதின நன்மைக்கு கைதந்தா பிள்ளை கையெழுத்து, ஸ்தலம் உள்ளூர் தெய்வசிகாமணி பண்டாரம் அறிவேன். நாட்டு முருகப்ப முதலி அறிவேன். கோனேரிநாடு சபாபதி முதலி அறிவேன்.

யிது எழுதினவன் காரையூர் ஸ்தலத்துக் கணக்கு நல்லயபிள்ளை மகன் சடையபிள்ளை கையெழுத்து." (இந்தப் பட்டயம் உவே. சாமிநாத அய்யர் அவர்களால் பழைய கோட்டை அரண்மனையிலிருந்து எடுத்துச் சொல்லப்பட்டு திருவான்மியூர் உ.வே. சாமிநாதய்யர் நூலகத்தில் உள்ளது)

## திருச்செங்கோட்டுத் திருப்பணி:

கொங்கேழு சிவாலயங்களில் ஒன்று திருச்செங்கோடு. திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற தலம். இக்கோயிலில் கந்தன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் பல்வேறு கொடைகளும், திருப்பணிகளும் செய்துள்ளார்.

நாள்தோறும் அபிஷேகத்திற்கு இரண்டு பலம் சந்தனம், காவிரித் திருமஞ்சனநீர், இளநீர் இரண்டு, வேதம் ஓதுதற்கரிய தொகை, ஐந்துபடி அரிசி, ஒரு படி பயறு, காய்கறிகள், நெய், வெல்லம் கொடுத்தார். தேருக்கு மஞ்சனச் சங்கிலி கொடுத்தார். மலை மேல் வாசல் கதவு அமைத்தார். பரிவட்டம், மாலை, தீபம், மடதர்மம் இவைகளையெல்லாம் அளித்ததாகத் திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை (309) கூறுகிறது.

"அனுதினமும் அபிடேக சந்தனம் பலமிரண்டு
ஆனகா விரிமஞ்சனம்
அளிசீத மான இள நீரிரண்டு ஒரு சுருதி
அத்தியா னத் தருமமும்
தினம் அமுது படியைந்து பயறுபடி கறிகளொடு
சேர நெய் வெல்லமுடனே
செங்கோட ருக்கிவை படித்தரம் நடத்தினன்
சித்திரத் தேர் மீதினில்
மனமகிழ் மஞ்சனச் சங்கிலி கொடுத்தனன்
மலைமேலை வாசல் கதவு
வைத்தனன் அநேகபரி வட்டமா லிகைதீபம்
மடதர்ம மும் செய்தனன்
கனமிகுதி ஈதல்சவு ரியமகிமை பெற்றனன்
காரை ஆ னூருடையவன்
கந்தன்என வந்தசர்க் கரைபயிரன் உத்தமக்
காமிண்ட மன்றாடியே!

என்பது திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலைப் பாடலாகும்.

<u>சர்க்கரை மன்றாடியார் காதலில்:</u>

பழைய கோட்டை மரபினர் வணங்கும் தெய்வங்களையெல்லாம் காதல் நூல் விளக்குகிறது.

" நாதர்சயங்கொண்ட நாயகர்பொற் றாள்பணியும்
சாதகனாம் நல்லதம்பிச் சர்க்கரை"
"நானிலமெல் லாம் படைத்த நல்லமங்கை நாயகி"
"பால் நிறைந்த ஆனூர்ப் பகவதி"
"நல்லாண்டார் தாள் பணியும் நல்லதம்பிச் சர்க்கரை"
"தாட்டிமைசேர் நல்லாண்டார்"
"சூழ்திசை எல்லாம் பரசும் சோதி சிவமலையான்"
"நாட்டும் புகழ் வரதராயர்"
"வீரி மாதங்கி எனும் தாய் கரிய காளியம்மன்"
"காவுக் கருப்பணன்"

சம்பிரதி ராமபிள்ளை "உங்கள் வளர்த்துகுல தெய்வமாகும் வலிய நல்லாண்டவர்" என்று கூறியுள்ளார். சொக்கன் சர்க்கரையார் நல்லாண்டார் பொங்கலில் குயவர்கள் ஞாயம் தீர்த்ததாகப் பாடல் கூறுகிறது.



<u>சிவன்மலைத் திருப்பணிக் கல்வெட்டுக்கள்</u>

1969 ஆம் ஆண்டு சிவன்மலைக் கோயிலைத் தமிழக அரசு இந்துசமய அறநிலையத்துறை ஏற்கும்வரை இக்கோயில் பழையகோட்டை அரண்மனை வசமே இருந்தது. சிவன்மலையில் அடிவார மலைப்படியின் மேல்புறம் 'பழைய கோட்டைமடம்' உள்ளது. 1857 ஆம் வருடம் டிசம்பர் மாதம் 13 ஆம் நாள் கொற்றவேல் சர்க்கரையாரால் அது கட்டப்பட்டது. 1951 இல் ந.நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் பெருமுயற்சியால் மலைப்படிகள் சீரமைக்கப்பட்டன.

சிவன்மலையில் பழையகோட்டை மண்டபக் கட்டளை மிகச் சிறப்பாக நடைபெறும். சிவன்மலைக் குறவஞ்சி

" உண்மையுள்ள ரணவிஜய தரைநலதம்பிச் சர்க்கரை
உத்தமக் காமிண்ட மன்றாடியார் மண்டகப்படி"

என்று கூறுகிறது.

சிவன்மலைக் குறவஞ்சியில் 'காரை நகரிச் தென்காஞ்சி நதிக்கரை பயிரகுலச் சேனாபதி, கொற்றவேல், கந்தப்பன் ஆகியோர் நிலமும் செங்குளமும்' குறிக்கப்படுகிறது.

சிவன்மலைப் புராணம் சீர்காழி அருணாசலக் கவிராயர் மூத்தமகனார் அம்பலவாணக் கவிராயர் பாடியுள்ளார். 14 சருக்கங்களும் 497 பாடல்களும் உடையது. (சிவன்மலைப் படிகள் 496) அது ஓலைச் சுவடியாக இருந்தது.

15.12.1917 அன்று நளவருடம் மார்கழி முதல் நாள் பழையகோட்டைப் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்களும், குட்டப்பாளையம் அர்ச்சுனக் கவுண்டர் அவர்களும்

.. ..

திருச்செங்கோடு அ.முத்தசாமிக்கோனார் அவர்களிடம் " அடுத்த வருஷம் தைப் பூசத்தன்று சிவன்மலையாண்டவர் புராணம் மூலமும் வசனமும் சேர்ந்த அச்சுப் புத்தகத்தைப் பல பெரியோர்களுடனிருந்து சிவன்மலையில் பார்க்க வேண்டும்" என்றார்கள்.

அடுத்த நாள் காங்கயம் பட்டக்காரர் மும்முடிக் கணபதிப் பல்லவராயர், காங்கயம் அட்டாவதானம் சி.வி.சேஷாசலநாயுடு, குட்டப்பாளையம் அர்ச்சுனக்கவுண்டர், சிவன்மலை சோதிடர் இராமசாமிக் குருக்கள் ஆகியோரிடமிருந்து பட்டக்காரர் அவர்கள் ஓலைச்சுவடிகளை வாங்கிக் கொடுத்து நூல் அச்சிடுவதற்கான தொகை முழுவதையும் கொடுத்தார்கள். பட்டக்காரர் அவர்கள் விரும்பிய வண்ணமே 19.1.1918 அன்று சிவன்மலையில் சிவன்மலைப் புராணம் வெளியிடப்பட்டது.

2.9.1898 அன்று (விளம்பி வருடம் ஆவணி 19) நடைபெற்ற குடமுழுக்கு விழா 8 கால பூசையுடன் 100 சிவாச்சாரியார்களைக் கொண்டு நடைபெற்றது. அப்போது நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்களுக்கு வயது 12. அதனால் அவர்கள் தாயார் வள்ளியாத்தாள் அவர்கள் சிலம்பகவுண்டன்வலசு சுந்தரக் கவுண்டர், குட்டப்பாளையம் சேனாபதிக் கவுண்டர் ஆகியோர் துணையுடன் மிகவும் சிறப்பாக நடத்தினார்கள்.

சிவன்மலையில் பழையகோட்டை தொடர்பான 5 கல்வெட்டுக்கள் உள்ளன.

18.4.1792 அன்று இருநூறு ரூபாய்க்குச் சிவன்மலை அடிவார வடபகுதிக் காட்டை பட்டாலி அனுமந்தக் கவுண்டரிடமிருந்து வாங்கிய தீரன் சின்னமலை 10.4.1793 அன்று சிவன்மலைக்கும், பட்டாலிக்கும் கொடுத்த கொடைகளை இரண்டு கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

.. ..



அ) <u>கவுண்டம்பாளையம் கல்வெட்டு</u>

1) சொஸ்திஸ்ரீ விசயாற்புதய
2) கலியுக சகாற்தம் 4894 சாலி
3) வாகன சகாற்தம் 1715 மேல் செ
4) ல்லாநின்ற பிறமாதீட்ச வருஷம் சித்திரை மாதத்
5) தில் தீர்த்தகிரிச் சர்க்கரை உத்தயக் காமிண்ட
6) மன்றாடியார் அவர்கள் அதிகாரத்தில் சிவன்ம
7) லை ஆண்டவருக்கு உச்சிக்காலக் கட்டளைக்கு
8) காடனூர் கிராமத்தில் மானியம் விட்ட விப
9) ரம் கவுண்டம்பாளையத்துக்குத் தெக்கு
10) பொத்திபாளையத்து பால........
11) க்கு மேக்கு ராசாவலசுக்கு வடக்கு வே
12) லாங்காட்டுக்கு கிளக்கு மிந்த சதுர்மத்தி
13) யில் காடு....,.....
14) 14 ஆக 15 மிந்த பதினஞ்சு வள்
15) ளக்காடும் சந்திராதித்தவரை ......
16) டுத்த போகத்திலே இருப்பதாகவு
17) ம் இதற்கு விகாதம் பண்ணிய
18) வன் கெங்கைக் கரையிலே காராம்ப
19) சுவைக் கொன்ற தோஷத்திலேயும்....

.. ..

ஆ) பட்டாலிக் கல்வெட்டு

1) சொஸ்திஸ்ரீமன் விசயாப்பு
2) தைய கலியுக சகாற்தம் ௪8
3) 9௪ சாலிவாகன சகாற்தம் 1
4) 715 க்கு மேல் செல்லாநின்ற பிர
5) மாதீச்ச வருஷம் சித்திரை மாதம் 1 தேதியி
6) ல் தீர்த்தகிரி சர்க்கரை உத்தமக் காமி
7) ண்ட மன்றாடியார் ப......

இ) பழையகோட்டை மடம் கல்வெட்டு (13.12.1857)

1) கலியுகம் 4959 பிங்கள வருஷம் கார்த்திகை மாதம் 30
2) தேதி பழையகோட்டை நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் கா
3) மிண்ட மன்றாடியார் பௌத்ரன் நல்லதம்பிச் சர்க்கரை
4) உத்தமக் காமிண்ட மன்றாடியார் புத்திர
5) ன் கொற்றவேல் சர்க்கரை உத்தமக் காமி
6) ண்ட மன்றாடியார் உபயம்

ஈ) வாழத்தோட்டத்து வலசுக்காரர் திருப்பணி (முன்மண்டபம் திருப்பணி)

1) கலியுக சகாற்தம் 5000 விளம்பி வருஷம்
2) ஆவணி மாதம் 30 தேதி பழையகோட்டை தீர்த்
3) தகிரிச் சர்க்கரை சந்ததி வாழத்தோட்டத்து
4) வலசு ரங்கசாமிக்கவுண்டர் ரத்தினத்தாக்
5) கவுண்டர் ஜீரண உத்தாரணம்



2) பாலவிநாயகர் கோயில் கட்டியது

ஸ்ரீசிவாசலபதி துணை

பழையகோட்டை அரண்மனை திருமதி பார்வதி
அர்ஜுனன் அவர்களாலும் அவர்கள் தாயார்
வெள்ளக்கிணர் திருமதி மீனாட்சி அம்மையார்
அவர்களாலும் திருப்பணி செய்யப்பட்டது
29.6.1966 அஷ்டபந்தன கும்பாபிஷேகம்
செய்யப்பட்டது.

10.9.2000 அன்று சிவன்மலைக் குடமுழுக்கு விழாவை அறங்காவலர் குழுத் தலைவராக இருந்த என்.எஸ்.ராஜ்குமார் மன்றாடியார் அவர்கள் மிகச்சிறப்பாக நடத்தி " சிவன்மலை வரலாறு " நூலும் வெளியிட்டார்கள். 1898 இல் பழைய கோட்டை வள்ளியாத்தாள் அவர்கள் முயற்சியால் முருகனுக்குத் தங்கக்கவசம் செய்யப்பட்டது. 2000இல் என்.எஸ்.ராஜ்குமார் மன்றாடியார் அவர்கள் முயற்சியால் சிவன்மலைக்குத் தங்கத்தேர் செய்யப்பட்டது.

# வேளாண்மை வித்தகர்கள்

கொங்கு நாட்டில் வேளாண்மை மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இலக்கணஆசிரியர்கள் "அத்து" என்னும் சாரியை சேர்ந்து வரும் சொல்லுக்கு எடுத்துக்காட்டுக் காட்டுவதற்குக் "கொங்கத்து உழவு" என்ற தொடரைப் பயன்படுத்தினர். கொங்கு நாட்டில் உழவுத் தொழில் சிறந்து விளங்கியதற்குக் கால்நடைச் செல்வமும், நீர்வளமும் காரணங்களாகும். "கொங்கு விளைந்தால் எங்கும் விளையும்" "கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்" என்பன பழமொழிகள்.

வேளாளர்களின் தொழில் உழவு. அத்தொழிலில் மிகச் சிறந்து விளங்கிப் பயிர் விளைவிக்கும் குடியினர் 'பயிரன்' எனப்பட்டனர். பயிரகுலத் தலைவர்களான பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் உழவுத் தொழிலிலும் அதன் நுட்பத்திலும் மிகச் சிறந்து விளங்கினர். பழைய கோட்டை மரபுப் பாடல்களில் "ஏரையே தெய்வம் என எண்ணும் வேளாளர்" என்ற தொடரால் வேளாளர்கள் உழவுத் தொழிலை எவ்வாறு மதித்தனர் என்பது தெரிகிறது "கொங்கதின் மண்ணே சுகம் தரும்" என்று ஒரு பட்டக்காரர் கூறுகிறார்.

உழவர்களின் பலநாட்டவர் கொண்ட பெரிய அமைப்புக்கு "சித்திரமேழிப் பெரிய நாடு" "சித்திரமேழிச் சபை" என்று பெயர் வழங்கியது. வேளாளர்கட்குக் கொடியே "மேழிக்கொடிதான்" பழைய கோட்டையில் மேழிக்கொடி உயர்ந்து பறந்தது. பட்டாபிஷேக விழாவின் போது மேழிக் கொடியும் அன்னக்கொடியும் ஏற்றப்படுவது வழக்கம். 19-ஆம் பட்டக்காரர் முடிசூட்டுப் பாடலில்

"இங்காரு மேபார்த்து மகிழும் மேழிக் கொடியும்
இனிய அன்னக் கொடியுமே
ஏற்றியே வைத்து"

என்ற தொடர் காணப்படுகிறது. பழைய கோட்டைத் தலைவர்கட்கு, "தசாங்கம்" (பத்து சிறப்புகள்) கூறும்போது கொடிக்கு "மேழிக் கொடி" "மேழிப் பதாகை" என்று கூறுவது வழக்கம். உழவு, வேளாண்மை பற்றிய பல செய்திகள் பழைய கோட்டை மரபுப் பாடல்களில் உள்ளன.



## பண்ணையச் சிறப்பு :

விவசாயத்திற்குப் பண்ணையம் என்ற அருமையான சொல்லையும் பயன்படுத்தினர். ஊர்காவல் பணிகளில் இரவெல்லாம் பாடுபட்ட நஞ்சையன் சர்க்கரையார் பகல் வேளையெல்லாம் அரண்மனையில் தூங்குவாராம். அவர் மனைவியார் வஞ்சியாத்தாள் விவசாய வேலைகளைக் கவனிப்பாராம். இதனை மடவளாகம் சிவராம தேசிகர்

"பட்டப் பகல்எல்லாம் தூங்குவாராம் - அவர்
பத்தினி பண்ணையம் பார்ப்பாராம்"

என்று பாடியுள்ளார்.

1807, ஜூலை பன்னிரெண்டாம் தேதி மெக்கன்சியின் உதவியாளருக்கு எழுதிக் கொடுத்த ஆவணத்தில் "புஞ்சைக்காடு பெரிய வள்ளம் 80 தோட்டம் 20 தோட்டம் பெரியவள்ளம் 20 பட்டக்கார மணியம் என்று பழைய கோட்டையில் அனுபவித்தார்கள்" என்று எழுதிக் கொடுத்துள்ளனர். நத்தக்காரையூரில் கொங்கு வேளாளர் மணியகுல முதன்மை, காசவேட்டுவர் முதன்மை, கொங்குச் செட்டியார் முதன்மை நீக்கி எல்லா உரிமைகளும் பட்டக்காரர் அவர்களுக்கே அளிக்கப்பட்டது. பழைய கோட்டைக் கிராமம் (காரையூர்) இல்லாமல் முத்தூர்க்கிராமம், வள்ளியறச்சல் கிராமம், மருதுறைக் கிராமம் அவர்கட்கு உரிமையாக அளிக்கப்பட்டதாக அரசு ஆவணம் கூறுகிறது. அங்கெல்லாம் பட்டக்காரர் அரண்மனைக்குரிய நிலங்கள் இருந்திருக்க வேண்டும். ஓ.எஸ். சடையபிள்ளை அவர்கள் "தோட்டவேலைக்கு 60 பேர், காட்டு வேலைகள் 30 பேர், கிணறு வெட்ட, துலை ஏரிகட்ட, வீடுகள், சாலை, தொழுவம் அமைக்க 10 பேரும் நிரந்தரமாக இருந்தனர். அவர்கள் அல்லாமல் நாற்று நட, களைமுளை வெட்ட, பருத்தி எடுக்க, காய்கறிகள் பறிக்க, புகையிலை வேலை செய்ய, வேலாங்காய் பொறுக்க, கொழுக்கட்டை விதை சேகரிக்க, மிளகாய் பறிக்க, பயறுகள் நெறிக்கக் கூலிக்குப் பல ஆட்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இவர்கள் அனைவருக்கும் வேண்டிய உணவு தயாரித்து" உக்கிராணம் சீனிவாசக் கவுண்டர்" அனுப்ப வேண்டும் என்று கூறுகிறார். ஒரு நாளைக்கு சுமார் 225 பேருக்கு வேண்டிய உணவு தயாரிக்கப்பட்டதாக ஒரு குறிப்புக் கூறுகிறது.

15-ஆம் பட்டம் பாலசர்க்கரையார் நேரடியாகவே உழவு செய்வாராம் ; அவர் மட்டும் அல்ல ; அவர் மனைவியும் கூடத்தான். இதை அரண்மனை சம்பிரதி நல்லயபிள்ளை மகன் அரசப்பிள்ளை

"சீரான பண்ணையம் நேராகவே தாமும் மனைவியும்
கூடி உழுவார்"

என்று கூறியுள்ளார். இவையல்லாமல் புதூர், கொடுமணல், கத்தாங்கண்ணி போன்ற பல இடங்களிலும் ஏராளமாகப் பட்டக்காரர்கட்கு உரிய நிலங்கள் இருந்தன.

"கத்தாங்கண்ணி சில சமயம் தண்ணீர்
கட்டி வராமல் குளம் காய்ந்து
போன காலத்திலே கவலைகள் பூட்டி நெல்
போகம் நூறுபொதி வந்து சேரும்"

என்பது ஒரு பாடல் பகுதி. குளத்தில் தண்ணீர் இருந்தால் இன்னும் அதிகமாக நெல் கிடைக்கும் போலும்

ஒரு பட்டக்காரர் தம்மகனுக்கு
"புலரும் முன்னே எழுந்து அம்மனை வணங்கி
புறப்படு தோட்டமே போ
ஊர் சென்று ஆட்கள் வருமுன்னதாகப் பட்டி
உட்சென்று குட்டிகள் எல்லாம்
உறுதாய் முலைப்பாலை உண்டு வயிறு மண்டியது
உணர்ந்து பின் அதுபோல
உள்ள மாடு, எருது, பயிர்பச்சை வளர்வதைப் பார்"
என்று கூறுகிறார்.

பழைய கோட்டை நிலங்களில் நெல், ராகி, கம்பு, சோளம், கரும்பு, வாழை, பருத்தி, மிளகாய், காய்கறிகள், மஞ்சள், புகையிலை, பயிறு வகைகள் முதலிய பல பொருட்கள் விளைவிக்கப்பட்டன.

### நிலத்தைப் பார்:

ஆட்களை மட்டுமே நம்பி ஒரு உழவன் தோட்டம் செல்லாமல் வீட்டிலேயே இருந்தானானால் நிலங்களிலிருந்து பாதி விளைச்சல்தான் வீடு வந்து சேரும். உழவன் காடு, தோட்டம் நாள்தோறும் சென்று ஆட்களை மேற்பார்வை பார்க்க வேண்டும். ஆட்களுடன் ஆளாக வேலை செய்ய வேண்டும், எல்லா வேலைகளும் நில உடமையாளர்கட்கும் தெரிந்திருக்க வேண்டும்.

நல்லமங்கையம்மன் சதகப்பாடல்

"வீட்டதில் பகல் எலாம் வீணாய்க் கழிப்பவர்கள்
வெள்ளாமை பகுதி குறையும்"
என்ற கூறுகிறது. பாடியவர் கொற்றவேல் சர்க்கரையார் (19).



"செல்லான் கிழவன் இருப்பின் நிலம் புலந்து
இல்லாளின் ஊடி விடும்"
என்ற குறள் (1039) கருத்தை இவ்வரிகள் விளக்குகின்றன.

### உழுதலின் உயர்வு:

வேளாண்மைக்கு உழவு மிகவும் இன்றியமையாதது. பயிர் விளைவிக்கா விட்டாலும் புன்செய் நிலத்தை வறிதே உழவு செய்வர். அதைக் கொங்கு மக்கள் "குறை உழவு" "புழுதி உழவு" என்பர். வள்ளுவர் கூறுகின்ற ஒரே தொழில் உழவுதான். அதிகாரத் தலைப்பே உழவு. உழுது உழுது தொடி அளவுள்ள புழுதியை கஃசு அளவாக மாற்றினால் கைப்பிடி உரம் கூடத் தேவையில்லாமல் நிலம் விளையும் என்று வள்ளுவர் கூறுகிறார். (தொடி-பலம்; கஃசு - கால் பலம்)

"தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.
என்பது வள்ளுவர் வாக்கு (1037)

இதே கருத்தை

"உழவுதிரி மூடலில் முப்புழுதி கண்ட பயிர்
உரம் இலாவிடினும் விளையும்"

என்பது பழைய கோட்டை மரபுப் பாடல் கூறுகிறது.

### பூச்சிகள் ஒழிந்தன:

கரூர் அருகில் உள்ள வெள்ளியணை பயிர குலத்தார் காணியூர்களில் ஒன்று. அவ்வூரில் வேளாண்மை சிறந்திருந்தது. கி.பி. 6-ஆம் நூற்றாண்டிலேயே ஒருவன் நிண்ட தூரம் கால்வாய் வெட்டி வெள்ளியணையில் குளம் ஒன்றை வெட்டி நீர் தேக்கி விவசாயத்திற்கு அளித்தான். இதை

"சோழிக அரையன் அகணிதன் குளம்"
என்ற வட்டெழுத்துக் கல்வெட்டுக் கூறுகிறது.

ரெட்டியார்களும் வேளாளர் போல உழவுத் தொழில் செய்பவர்களே, ரெட்டியார் சமுதாயத்திற்காக ஈரோட்டிலிருந்து பத்திரிக்கை நடத்திய கு. சேதுராமன் (ரெட்டியார்)தன் பத்திரிக்கைக்கு "ஏர்முனை" என்று பெயரிட்டார். வெள்ளியணையில் பசுபதி ரெட்டியார் என்பவர் இருந்தார். பெரிய விவசாயி. பெரிய பரப்பளவில் கம்பு பயிரிட்டிருந்தார். கம்புப் பயிர் கதிர் விடும் பருவத்தில் காடு முழுவதும் பூச்சி புகுந்து தாக்கத் தொடங்கியது.

பசுபதி ரெட்டியார் பெரிய சர்க்கரையாரின் நண்பர். பட்டக்காரரிடம் விபரம் கூறினார். பட்டக்காரர் மடவளாகம் சிவராம தேசிகருடன் வெள்ளியணைக்கு உடனே சென்றார்.

பட்டக்காரர், பன்றிமலம், நாய் மலம், கழுதை மலம், குதிரை லத்தி இவைகளை ஒரு மிடாவில் போட்டு நெருப்பிட்டு யாரும் அறியாமல் கொண்டு வந்த தழைச் சாற்றை அதில் ஊற்றிக் கிளறினார். அதை நெருப்பின் மீது கொட்டினார். கம்பு பயிரிட்டிருந்த காட்டின் நடுவில் 2 அடி உயரத்தில் வைத்து விட்டார். விடியும் வரை நெருப்பு அணையாமலிருக்க ஒரு ஆள் ஊதிக் கொண்டிருக்க ஏற்பாடு செய்தார். இரவெல்லாம் புகை பரவ ஏற்பாடு செய்தார்.

அடுத்த நாள் எல்லோரும் கூடி கம்பங்காட்டுக்குச் சென்றனர். என்ன ஆச்சரியம். காடு முழுவதும் ஒரு பூச்சி கூட இல்லை. மகிழ்ந்த பசுபதி ரெட்டியார் ஒரு சோடி காளைகளைப் பழைய கோட்டைக்கு அன்பளிப்பாக அனுப்பினார்.

பட்டக்காரருடன் வெள்ளியணை சென்ற மடவளாகம் சிவராம தேசிகர் இந்நிகழ்ச்சியைப் பாடலாகப் பாடியள்ளார்.

வள்ளி மணவாளன் முருகன் பக்தியே சதா
வளர்நஞ் சையன் சர்க்கரை
வண்மைமிகு புத்திரர் பெரிய சர்க்கரைமன்னர்
வலிவு பெறு மதியடையவர்

வெள்ளியணை மேவு பசுபதி ரெட்டியாரின்
விரிந்தகம்பங் காட்டதை
வீணாகவே கருதில் அன்னம் எல்லாம் சப்பி
வேதனை செய் பூச்சிகள்அதை



கள்ளம் இல் லாதபடி வெகுதூரம் ஏக ஒரு
கனத்த புகை ஒன்று போட
காணும்அவ்வூருக்கு மே அவர் புறப்படக்
கண்டெடன் னையும் கூடவே

மெள்ள வரலாம் என அழைத்தபடி சென்றனன்
மேதினியில் அவ்வைத்தியம்
மேன்மைகொள் சரக்குகள் ஒன்றுமில்லை உள்ளவைகள்
மெத்த பன்றியினது மலம்

தள்ளமன முள்ள நாய் மலமுடன் கழுதையின்
தருமலம் குதிரை லத்தி
தக்கபெரு மண்மிடா வில் நெருப்பிட்டுத்
தனித் தெவரும் அறியாமலே

கிள்ளிவந் தொருமடி தழைச் சாறு ஊற்றியே
கிளறிஅம் மலம் நான்கையும்
கீழ் உள்ள தணலின்மேல் கொட்டவே புகைகள்
கிளம்ப அதை நடுக்காட்டிலே

உள்ளிய இரண்டு முழம் மேட்டு மேல் வைத்து
ஓராள்ஊதி இரவுகழியவும்
உவப்பொடு விடிந்த பின்பு எல்லோரும் அங்கே
ஒருங்கு கூடிச் சென்றனம்

துள்ளிய பூச்சிகளில் ஒன்றும் இல்லாதுவெகு
தூரத்தில் ஏகி விடவே
துதி செய்து ரெட்டியார் இணைகொண்ட இருகாளை
துகளற அனுப்பினாரே

என்பது அப்பாடலாகும்.

<u>ஆட்டெருவின் பெருமை:</u>

ஆட்டு எரு சிறந்தது. சக்தி மிக்கது. விரைவில் பயன்தரக்கூடியது. ஆட்டு எரு புன்செய்ப் பயிருக்கு மிகவும் நல்லது. "ஆட்டெரு அவ்வருடம் மாட்டெரு மறு வருடம்" என்ற பழமொழியும் உண்டு.

"ஆட்டெருக் காணாத புஞ்சையில் விளைதவசம்
ஆகுமிகு ராசி குறையும்.

என்பது கொற்றவேல் சர்க்கரையார் பாடல் பகுதியாகும். ஆட்டெருவின் பெரும்பயனை ஒரு பட்டக்காரர் தன் மகனுக்குச் செயல் முறை மூலம் விளக்கிக் காட்டிய நிகழ்ச்சி ஒன்று நடந்துள்ளது.

கரியான் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் மகன் அப்புக்குட்டி செல்லமாக வளர்ந்தவர். சிறுவயது முதல் 21 வயது வ்ரைக்கும் பூந்துறை, சித்தோடு முதலிய பல இடங்களுக்குச் சென்று சேவல் சண்டை போன்ற பல பொழுதுபோக்கு விளையாட்டுக்களில் காலம் கழித்து வந்தார். காடு, தோட்டங்களுக்குச் சென்று விவசாய வேலைகளைக் கவனிப்பதே இல்லை.

புத்திமதி சொல்லித் தந்தை அறிவுறுத்தியதன் பயனாக மேலப்பாளையம் சித்தப்பா முத்துரத்தினசாமிக் கவுண்டர் கொடுத்த குதிரையில் ஏறிக்கொண்டு காட்டுக்குச் சென்றார். அங்கு தாளுஞ்சிக் குரங்காட்டில் வழக்கமாக மாடுகள் மேயும் பகுதியில் ஆடுகள் மேய்க்கும் கருஞ்சென்னி ஆடுகளை விட்டு மேய்த்துக் கொண்டிருந்தான். இதைப் பார்த்த அப்புக்குட்டி கருஞ்சென்னியைப் பலமாக அடித்துவிட்டார். இதை அறிந்த தந்தை கருஞ்சென்னி செய்தது தவறு அல்ல என்று கூறினார். தந்தை ஆட்டின் பெருமை கூற மகனோ மாட்டின் பெருமை கூறினார். மகனுக்கு ஆட்டெருவின் பயனை விளக்க பட்டக்காரர் ஒருசெயல்முறை விளக்கத்தைக் கையாண்டார்.

கலுங்கு என்ற ஒரு பகுதியைத் தேர்ந்தெடுத்து இரண்டு சம பாகமாகப் பிரித்து உழுது பதப்படுத்தி ராகி பயிர் செய்தார். ஒரு பாகத்தில் ஆட்டு எருவும், மறு பாதியில் மாட்டெருவும் போடப்பட்டது. ஒரே மாதிரி தண்ணீர் பாய்ச்சப்பட்டது. கதிர் முற்றி விளைந்தவுடன் அறுத்துக் குவித்து உரிய காலத்தில் தாம்பு ஓட்டி ராகியை அளந்து பார்த்தனர். மாட்டெரு போட்ட நிலத்தில் இரண்டு பொதி ராகி ஆனது. ஆனால் ஆட்டெருப் போட்ட நிலத்திலோ மூன்று பொதி விளைந்தது. அப்புக் குட்டி உண்மை உணர்ந்தார்.



இந்நிகழ்ச்சியைக் குறிக்கும் பாடல்கள்:

சீர் மேவ காரையில் கரிய சர்க் கரைபுதல்வன்
செல்வத் துடன் வளர்ந்த
சிங்கார மான அப்புக்குட்டி என்று சொல்
சிறந்த அழகன் சர்க்கரை
சிறு வயது முதல் இருபத்தொருவயது வரையிலிவர்
சேவல்கள் கட்டுதற்குச்
சித்தோடு பூந்துறை சென்று விளையாடியே
செயித்துவரு வேளை அல்லால்

பார்மேவு விவசாய வேளாண்மை யிடுவதைப்
பார்த்தறிய வேணும் என்ற
பண்புள்ள எண்ணமது கொஞ்சமும் இலாததைப்
பார்த்திடு பிதாவும் ஓர் நாள்
பையனுக்குப் புத்தி சொல்லி இனி மேல் நிதம்
பண்ணயம் போய்ப்பார் எனப்
பகர்ந்ததைக் கேட்டு மகன் பண்ணிய விதம் தனைப்
பாடுகிறேன் சிற்றப்பன் நான்

தார்மேவு மேலை நகர் முத்துரத் தினசாமி
தந்த சிறு குதிரையின் மேல்
தனிமையாய்ச் சென்றநம் அப்புநற் குட்டியும்
தாளுஞ்சிக் குரங்காடு போய்
தம்முடைய ஆடுகள் எலாம் பசும்புல் மேய்த்த
தண்டுவக் கருஞ்சென்னியைத்
தடிகொண்டு நாலைந்து அடிகள் தரவே அவன்
தவிப்பதைத் தந்தைகண்டு

ஆர்செய்தது ஈதென்று வினவவும் அதற்கு நம்
அரண்மனைச் சாமி என்றான்
அப்புவை இப்பவே கூட்டிவா என்ன ஒரு
ஆள்விட்டு வரவழைத்து
அந்த அடி தந்ததற்கு என்னதப் பிதம் என
அம்மாடு மேய்காட்டினில்
ஆடுகளை மேய்த்ததால் என்று பதில் சொல்லவும்
அது குற்றம் ஆகுமோ கேள் →

நேர்கண்டு நான் கொண்ட அனுபவம் சொல்கிறேன்
நெஞ்சினுள் வைத்து நடவாய்
நிற்கும் நாலாடுகள் விற்கும் விலை ஒரு மாடு
நிச்சயம் விற்குமோ சொல்
நேர்த்தியுள ஆடே படைப்பென்றும் ஆரியம்
நேர்ந்தவெள் ளாமை என்றும்
நிலையுள்ள ஆட்டெருவு அவ்வருடம் மாட்டெருவு
நீண்டமறு வருடமென்றும்

பேர்கொண்ட பழமொழிப் படியுள்ள ஆடுகள்
பெருவயிறு நிறைய மேய்ந்தால்
பெட்புடன் குட்டிகள் மாறாது போட அது
பெருகுவதால் சாணியும்
பிரண்டுநித் தப்பட்டி மாற்றுதற் கேதுவாம்
பிசகுஈதில் இல்லை என்னப்
பின்னைநூறாடு போடும் சாணி ஏழ்மாடு
போடாதோ சொல்லும் என்ன

கார் கொண்ட கையுடைய தந்தையும் மைந்தனின்
கருத்தினை விளக்க எண்ணிக்
காட்டுறேன் ஆட்டெருவு பொட்டவெள் ளாமையின்
கணக்கை நீயே காண் எனக்
கலுங்கென்ற  ஒரு சிறியசதுர நற் குட்டையைக்
காண இரு பாதி ஆக்கிக்
கடுகவே ஒரு பாதி ஆட்டுநற் பட்டியும்
கண்டமறு பாதிதன்னில்

சார்கின்ற மாட்டினிட பட்டியும் போட்டதில்
சரியான எருவானமேல்
சலிக்காது சேடை நீர் பாய்ச்சியே மண்ணதும்
சலசலவென ஆகுமட்டும்
சங்காது உழவிட்டு புழுதிசரியானபின்
சமமான பாத்தி கட்டிச்
சரியான வேருள்ள ராசி நாற்றுக் கொண்டு
சடுதியில் நடவுபோட்டு →



தேர்கின்ற சிறுகாய்வு வந்தபின் சளுவு நீர்
தேங்காது நன்கு பாய்ச்சித்
தேறி அது தழைவுகண்டானபின் களையதும்
திறமாக வே எடுத்துத்
தெற்றெனக் காய்ந்த பின் மேல் நீர் அடிக்கடி
தியங்காது விட்டு வந்து
தீங்கு நோய் வாராமல் மாடாடு பூதாமல்
தினையளவும் வாடிடாமல்

தூர் கட்டி யே கரு கருப்புடன் வளர்ச்சியாய்த்
தூய நற் கருக்காயதாய்த்
தோடான கருதுகள் ஈடான பந்து போல்
தோமறச் சிவந்தபின்னர்
துங்கமுள இருபாதி கருதையும்வெவ்வேறு
தொகுப்போடு பிரித்து வெட்டித்
தூரமில்லாதபக் கத்துக் களத்திலே
துகளறக் குவித்து மூடிச்

சோர்வு கண்டது மிகவும் அவியாம லே அதைச்
சோதித்த பக்குவத்தில்
சூடுற்ற குத்தாரி ரெண்டும் பிரித்துச்
சுணங்காது காய வைத்துச்

சொல்லிய இரண்டையும் தனித்தனிய தாகவே
சுற்றுதாம் பதில் அடித்துச்
சூரையுள காற்றின்றி நல்ல காற்றுக் கொண்டு
சொகுசுடன் நின்று தூற்றி

மார் கொண்டு மாதாரி பொட்டதும் விலக்கியே
மதிப்புள்ள ராசி கூட்டி
மத்திக் களத்திற்கு வித்துரவ தும் போட்டு
வள்ளமது கொண்டு வந்து
மகனும் தகப்பனும் பண்ணாடி யான
மாரப்பனைக் கொண்டளக்க →

மாட்டெருவு ரண்டுபொதி மற்றெருவு மூன்று பொதி

மனதாரவே பார்த்தபின் …………

இப்பாடல்களை அப்புக்குட்டியின் மேலப்பாளையம் சிறிய தந்தையார் தீர்த்தகிரிச் சின்னமலைக் கவுண்டர் பாடியுள்ளார்.

புல் நன்கு வளர:

வேளாண்மைக்கு மிகவும் பயன்படும் கால்நடைகட்குப் புல் அவசியம். பழைய காங்கய நாட்டுக் "கொழுக்கட்டைப் புல்" மிகப் புகழ் வாய்ந்தது. பழைய கோட்டையின் கால்நடைச் சிறப்புக்கு கொழுக்கட்டைப் புல் வளர்ச்சியும் ஒரு முக்கியக் காரணம். கொழுக்கட்டைப் புல் விதையின் மூலமாக வளர்வது. அப்புல் விதையைச் சேகரிக்கச் கூலியாட்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். புல்லுடன் மற்ற செடிகொடிகள் இருந்தால் கால்நடைகள் புல் மேய இடையூறாக இருக்கும்.

அதுவும் புல் நன்றாக வளர வேண்டுமானால் சங்க முள், சுள்ளி, கால்நடைகள் தின்னாத செடிகள் ஆகியவை புற்களின் இடையே வளரக் கூடாது. இதை,

"சங்கமுள் சுள்ளி தின்னாச் செடிகள் பண்ணையம்

சாருகுறை புற்கள் குறையும்".

என்று பழைய கோட்டை மரபுப் பாடல் ஒன்று கூறுகிறது.

புல் காடுகளில் புற்களுக்கு இடையே முளைக்கும் செடி கொடிகளைப் பிடுங்க ஆட்கள் நியமிக்கப்பட்டனர். புல் காடுகளை 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை ஏரோட்ட வேண்டுமாம்.

தரிசு நிலத்தில் வேளாண்மை :

சொக்கன் சர்க்கரையாரின் தம்பி குமார சர்க்கரை தங்கி வாழ்ந்த பகுதியே இன்று பழையகோட்டை அருகே குமாரபாளையம் என்ற பெயரில் தனி ஊராக விளங்குகிறது. அவர் பஞ்சபட்சி, சரநூல் கற்று வேண்டுவோர்க்கு இலவசமாச் சோதிடம் சொல்லிவந்தார். பலரை ஆதரித்தார். அவரால் நன்மை பெற்றவர்கள் பலர். அவருக்குச் சொந்தமாக முள்செடிகள் நிறைந்த புதர் மண்டிய ஒரு காடு இருந்தது. அக்காடு வஞ்சியங்குளம் என்ற பகுதியில் இருந்தது.



ஒரு முறை குமார சர்க்கரையார் குடும்பத்துடன் மூன்று மாதம் இராமேசுவரம், காஞ்சிபுரம், காளத்தி போன்ற பல தலங்களுக்கு யாத்திரை சென்றுவிட்டார். ஊர் மக்கள் குமார சர்க்கரையாரின் காட்டில் முட்களைக் கொத்தி, செடி, கொடி, மரங்களை அகற்றி, கட்டை பறித்து, நிலத்தைத் திருத்தி உழவு செய்து மழை பெய்த ஈரத்தில் விதையும் விதைத்துவிட்டனர். யாத்திரை சென்று ஊர் திரும்பிய குமார சர்க்கரையார் எல்லோருக்கும் விருந்து வைத்துப் பாராட்டினாராம்.

அரண்மனைச் சம்பிரதி இராமபிள்ளை இந்த அரிய நிகழ்வை ஒரு பாடலாகப் பாடியுள்ளார்.

"கொஞ்சுமொழிச் சொக்கன் சர்க் கரையார் தம்பி

குமாரசர்க் கரைதன்பேர் சூட்டும் ஊரில்

பஞ்சபட்சி சரநூல் ஆராய்ச்சி செய்து

பகுத்தறிந்தே எதிர்காலப் பலனை எல்லாம்

தஞ்சமென்று வந்தவர்க்குத் தயவாய்ச் சொல்லும்

தகைமையுளார் குடும்பசகி தத்தோடு ஏகி

கஞ்சிகா ளத்திமுதல் சேது யாத்திரை

கண்டுவர மூன்றுமதி ஆவ தற்குள்

வஞ்சியங் குளத்திருந்தே உழுவதற்கு

வசமில்லா முள்காட்டைக் குடிகள் கூடி

நெஞ்சதனில் கபடமின்றிச் செடிமுள் கொத்தி

நேராக்கி உழவு செய்து மழைநாட் காலை

கொஞ்சமும்தா மதியாமல் விதைஏர் எல்லாம்

குறைவின்றிக் கொண்டு வந்து விதைத்த பின்பு

புஞ்சையதில் பசும்பயிரை வந்து பார்த்து

பூரித்து விருந்திட்ட புண்ய வானே!

என்பன இராமபிள்ளை பாடலாகும்.

## கால் நடைகளின் காவலர்

கொங்கு நாட்டில் கால்நடைச் செல்வம் மிகுதி. சங்க காலத்திலேயே கொங்கு நாடு இந்தச் சிறப்பைப் பெற்றிருந்தது,சங்க இலக்கியங்களில்

" ஆகெழு கொங்கு"
" பல்லான் பரப்பில் குழுமூர்"
கொங்கர் படுமணி ஆயம்"

என்ற தொடர்கள் காணப்படுகின்றன. " மாடு " என்ற சொல்லுக்கே செல்வம் என்று பொருள். மாடுகள் வைத்திருப்பதையே செல்வம் என்று கருதினர் கொங்கு நாட்டவர்கள். அதனால் கொங்கு மண்டல சதகம் பாடிய கார்மேகக் கவிஞர் ''மாடும் பெருகி வளர்வதன்றோ கொங்கு மண்டலமே" என்று பாடினார்.

" சோழ நாடு சோறுடைத்து. பாண்டிய நாடு முத்துடைத்து, சேர நாடு வேழம் உடைத்து, தொண்டை நாடு சான்றோர் உடைத்து, அதுபோல் கொங்கு நாடு ஆவுடைத்து " என்பர்

போர் ஏற்படும் முன்னர் பகைவர் நாட்டுப் பசுக்களுக்குத் துன்பம் வராமலிருக்க அவர்கள் கால்நடைகளைக் கவருவதே போரின் தொடக்கமாகும். இதனை வெட்சிப்போர் என்பார்கள். பகைவர்கள் கவர்ந்த ஆநிரைகளை மீட்பது கரந்தைப் போர். கொங்கு நாட்டு நடுகற்கள் பல இந்த வெட்சி கரந்தை முதலிய கால்நடை தொடர்பான போர்களில் சிறந்தவர்கட்கே எடுக்கப்பட்டன.

" இவ்வூர் ஆநிரை அழிஞ்ச ஞான்று பட்டான் கல்"
" தொறுக் கொண்டு பட்டான் கல் "
" தொறு மீட்டுப்பட்டான் கல்.

என பல நடுகற்களில் எழுத்துக்கள் காணப்படுகின்றன. நடுகற்களில் பசுக்களின் உருவங்கள் காட்டப்பட்டுள்ளன. தொறு என்று கால்டைகளைக் குறிக்கும் சொல்லே தொழு-தொழுவம் என்றாகிவிட்டது. கொங்கு நாட்டில் முருங்கத் தொழு, வாகைத்தொழு , செம்புத்தொழு , நல்லாந்தொழு, காரத்தொழு, பாலத்தொழு என்ற ஊர்ப் பெயர்கள் பல இருப்பது கால்நடைச் செல்வத்தையே காட்டுகிறது.



ஆ, ஆன் என்பது பசுவைக் குறிக்கும் சொல்லாகும். பசுக்கள் மிகுதியாக உள்ள ஊர் என்ற பொருளிலேயே ஆனூர் என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம். கால் நடைகளை வளர்ப்பது சேவையாகவே பழையகோட்டை மரபினர் கருதினர். கால்நடைகளின் வயிறு நிறைந்ததா என்பதைப் பார்த்து வயிறு நிரம்பியிராவிடின் அதை நிறைப்பவர் செல்வமே வளரும் என்று கருதியவர்கள் பழைய கோட்டை மரபினர். "கோ மாதா" எனப் பசுவை வணங்கும் வழக்கம் உண்டு. அதற்கும் ஒரு படி மேலே சென்று "பசுக்களே, கால்நடைகளே நடமாடும் தெய்வங்கள். அவைகளைப் போற்றிப் பேணுங்கள். தொழுவமே கோயில்: கால்நடைகளே தெய்வங்கள்" என்று எண்ணியவர்கள் பழைய கோட்டை மரபினர்.

"கோவிலுக்குப் போகவே வேண்டாம் - பசுவில் கோறிய தேவர்கள் எல்லாம் ஏறிவாழ்வதால் " என்ற தொடர்கள் இதனை விளக்கும்.

இன்னொரு பாடல் மேற்சொன்ன கருத்தை விளக்கமாகக் கூறுகிறது. பசுவைப் பாருங்கள். உற்று நோக்குங்கள். சிந்தியுங்கள். பசுவின் நான்கு கால்களும் ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்கள் ஆகும். பசுவின் கண்களைப் பாருங்கள். அவையிரண்டும் சூரியனும் சந்திரனும் ஆகும். பசுவின் உடல் முழுதும் முப்பத்து முக்கோடி தேவர் கூட்டம். பசுவின் வால்தான் ஐந்தெழுத்து - நமசிவாய. கொம்புகளைப் பாருங்கள் அது சூலம். தேவப்பிரசாதம் சாணம். அதன் (சிறு) நீர் கங்கை. காதுகள் இரண்டும் திருமாலும் பிரமனும். திமிலைப் பாருங்கள் அதுதான் சிவலிங்கம் " என்கிறது ஒரு பாடல்.

" நாலுகால் நாலுவேதம் நயனமோ இரவிதிங்கள்
மேசிலலாம் தேவராகும் வீசுவால் நமசிவாயம்
ஆலமாம் கொம்பு சூலம் ஐங்கரின் மலம் நீர் கங்கை
சீலமால் அயனும் காது திமிள் சிவலிங்கமாமே"

என்பது அச்சிறப்புப் பாடலாகும்.

பசு, குதிரை, எருமை. வெள்ளாடு, செம்மறியாடு இவைகள் அனைத்தும் பழையகோட்டை மரபில் போற்றப்பட்டிருக்கின்றன. நிலங்களையும், பொன்னையும் பொருளையும் கொடுப்பது போலத் தாங்கள் செல்வமாகக் கருதிய பால் பசுக்களையும் குதிரைகளையும் மற்றவர்கட்கு அன்பளிப்பாகக் கொடுத்து மகிழ்ந்தனர்.

"பட்டாணி முகமதிய ராயவேலூர் காதர்
பாட்சா என்போன்
நெட்டாகப் பழக்க ஒரு குதிரை ஒன்று இனாம்
கொடுக்க நிலைபெற்றானே"

"சர்க்கரையார்
மாணுடைய தெய்வமணிக் குதிரை ஒன்றை
மதிப்புடன் இனாம் கொடுத்தார் மகிழ்ச்சியாலே"

"முன்னம் கறவைப் பசு, குதிரை
முழுச்சாமான் செய்தே பெற்றேன்
இன்னம் கறந்து குடிக்கின்றேன்
இனிய கொற்றவேல் சர்க்கரையே"

"அரவக் குறிச்சியில் வாழ் ஆறுமுகனாம் எனக்குக்
கறவைப் பசுக்கொடுத்தார் காண்"

என்ற தொடர்கள் அதனை விளக்கும்

சிறந்த மதிப்புடைய பொருள்களைச் சிறந்த முறையில் கொடையாக வழங்கியவர்கள் பழையகோட்டை மரபினர். கொற்றவேல் சர்க்கரையிடம் அரவக்குறிச்சி ஆறுமுக சேர்வை தென்னங்கரைப்பாளையம் சென்று கொற்றவேல் சர்க்கரையாரின் சித்தப்பா சேனாபதிக் கவுண்டரிடம் ஒரு பால் எருமையையும் பரிசாகப் பெற்றுச் சென்றதாகப் பாடியுள்ளார்.

பாண்டவர்களில் நகுலன் "குதிரை சாஸ்திரம்" வல்லவன். செப்பேடும் இலக்கியங்களும் பழையகோட்டை மரபினைப் "பரிக்கு நகுலன்" " பரிதனில் நகுலன்" என்று சிறப்புடன் கூறுகிறது.

குதிரைகளை வளர்ப்பது மட்டும் அல்ல: இம்மரபினர் குதிரை பற்றிய கலையிலும், குதிரையேற்றத்திலும் சிறந்து விளங்கினர். விசுவநாதச் சர்க்கரையை,

"அசுவத்தின் சுழியைப் பார்த்து அதன் குணத்தை
அவ்விடத்தே அறிந்துசொல்வார்
பசுவைக் கண்ணால் பார்த்து பால் உளது இல்
லாததென்றும் அப்போதே சொல்வார்

என்று பாடுகிறார் சிதம்பர கவுண்டம்பாளையம் நடேச பாஸ்கர தீட்சிதர்,



22 ஆம் பட்டம் நல்லசேனாபதிச் சர்க்கரையார் வசம் பத்து நல்ல சுழிகளையுடைய ஒரு " பஞ்சகல்யாணி" குதிரை இருந்தது. அதைப் போற்றிப் புரந்து வளர்த்துக் காப்பாற்றி வந்தார். அந்தக் குதிரையின் சிறப்பும் பெருமையும் எங்கும் பரவியது. கொங்கு நாட்டுப் பகுதிக்குப் படையுடன் பலமுறை வந்த திப்புசுல்தான் பட்டக்காரரின் பஞ்சகல்யாணிக் குதிரை பற்றி கேள்விப்பட்டு அதை எப்படியாவது வாங்க நினைத்தார்.

ஐதர் அலி காலத்திலேயே பழைய கோட்டைக்கு
"போர் வீர ராம் ஐதர் அலி சர்க்காரின்
புலி போன்ற தாசில்தார்கள்"

வருவர். அரண்மனை நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவர். கொற்றவேல் சர்க்கரை பட்டாபிஷேக விழாவின் நிகழ்ச்சியில்
"சமுதாடு வல்லயம் சொட்டை முனையைக் கமால்
சாயபு பிடித்து நிற்க"

என்று குறிப்பிடப்படுகிறது. கொற்றவேல் சர்க்கரையவர்களின் நிர்வாகத் திறமையை ஐதரின் தாசில்தார் அமீர்கான் சாயபு புகழ்ந்து பாராட்டியுள்ளார். இதை

"காசுமேல் ஆசையாம் ஐதர் தாசில் அமீர்கான்
கான் சாயபு மெச்சும் எந்தன்"

என்று கொற்றவேல் சர்க்கரையாரே தான் பாடிய நல்லமங்கையம்மன் சதகப்பாட்டில் குறிக்கின்றார். காதர் பாட்சா என்பவர் பட்டக்காரரிடம் பரிசு பெற்றுள்ளார்.

ஒருமுறை வரிப்பாக்கிக்காக நல்ல சேனாபதிச் சர்க்கரை மன்றாடியார் என்பவரை திப்புசுல்தான் அதிகாரிகள் தாராபுரத்தில் சிறையில் வைத்தனர். 1778 ஆம் ஆண்டு திப்பு சுல்தான் அவரை விடுதலை செய்தார். பழையகோட்டைக்கு வந்த பட்டக்காரருக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தவர் திப்புசுல்தானின் காரியத்துக்குக் கர்த்தர்( ஏஜண்ட்)ஆன கபூர் சாயபு. இதை பட்டக்காரரே,

" பிற்காலம் சாலிவாகன சகாப்தம் 1700 சுபகிருது வருஷம் என்னையும் என்னைச் சார்ந்த சனங்களையும் விடுதலை பண்ணி, காரையூருக்கு வந்து சேர்ந்து இருக்கும் நாளையிலே திப்பு சுல்தான் பகதூர் அவர்கள் காரியத்துக்குச் கர்த்தராகிய கபூர்

சாயபு அவர்கள் நாளையில் நாளது வருஷம் சுபதினத்தில் நாடனைவரும் கூடிவந்து எனக்குப் பட்டாபிஷேகம் பண்ணி நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடி என்ற பேரை விளங்கப் பண்ணினார்" என்று எழுதியுள்ளார்.

பழைய கோட்டையையும், பட்டக்காரர்களையும் நன்கு அறிந்திருந்த திப்புசுல்தான் ஒரு நாள் பழையகோட்டை அரண்மனைக்கு வந்தார். பட்டக்காரர் திப்புசுல்தான் அவர்களுக்கு பழையகோட்டை வரவேற்று உபசரித்தார். உண்டு மகிழ்ந்த திப்பு அரண்மனையில் "சைவ விருந்து" அளிக்கப்பட்டது. சுல்தான் தான் வந்த நோக்கத்தைக் கூறி பஞ்சகல்யாணி குதிரையைக் கேட்டார். முதலில் பட்டக்காரர் மறுத்திருக்க வேண்டும். தொடர்ந்து வற்புறுத்தி "தருகிறீர்களா இல்லையா " என மிரட்டும் தோரணையில் கேட்டு இறுதியில் 200 பொன் கொடுத்து பட்டக்காரரின் பஞ்சகல்யாணி குதிரையைப் பெற்றுச் சென்றார். இதை அரண்மனைப் புலவர் அருணாசல கவிராயர் ஒரு பாடலாகப் பாடியுள்ளார்.

கொற்றவேல் சர்க்கரையார் " கரிய குண்டுக் குதிரையில்" ஏறி 3½ மணி நேரத்தில் (9 நாழிகை ) பழனி சென்றுள்ளார். அவரே ஒரு குதிரையில் காலையில் ஏறி பொழுது அஸ்தமனம் ஆவதற்குள் கொங்குச் சிவாலயம் ஏழையும் வணங்கி வந்துள்ளார். அந்தக் குதிரைக்குப் பாதகாணிக்கையைப் பலர் செலுத்தினர்.

குதிரை வைத்தியரும், சேணம் கடிவாளம், கால் மிதி இவைகளையெல்லாம் செய்ய அரண்மனையிலேயே ஆட்களும் இருந்துள்ளனர். அவர்கள் கொடுமணல் சிவியார்பாளையம் குமரப்ப வாத்தியார் மகன் பழனிமலை வாத்தியார், அரவக்குறிச்சி ஆறுமுக சேர்வை ஆவர். அவர்கள் இருவரும் பாடல் இயற்றும் புலவர்களாகவும் இருந்துள்ளனர். சொக்கன் சர்க்கரை தன் நண்பர் முத்தூர் செல்லக்குப்பண கவுண்டருடன் மதுரைச் சொக்கரை வணங்கக் குதிரையிலேயே சென்றுள்ளார். மதுரைப் பொற்றாமரைக் குளத்தில் குளித்தார். கடிவாளம் இல்லாதபோதும் பட்டக்காரரைப் பின்தொடர்ந்தது அந்தக் குதிரை. அரசர் வீரப்ப நாயக்கர் இரண்டு குதிரைகளுக்கும் நெல்லையும் கடலையையும் தீனியாக வைத்து மாலை மரியாதை செய்து "வெள்ளிப்பணி உளசலங்கை" மாலைகளையும் அணிவித்தார்.

பெரிய சர்க்கரையார் தம்பி செந்திவடிவேல் கவுண்டர் அவர்களுக்குக் கொடுமணல் பண்ணையம் பாகம் வந்தது. அவர் நிலத்தையெல்லாம் சிவன் கோயிலுக்கு அளித்துவிட்டு புலிப்பாணி நூல் படி ஔடதங்கள் புடத்தில் இட்டு சுண்ணம் செந்தூரம் இவைகளை எடுத்துக்கொண்டு குதிரையில் ஏறிச்சென்று ஊர்



ஊராகச் சென்று மனிதர்கட்கும், பசு குதிரைகட்கும் தர்மவைத்தியம் செய்தார். இதனைக் கருங்குமரப்புலவர் தம் பாடலில் கூறியுள்ளார்.

கால் நடை மருத்துவத்துக்காக முன்னோர் இயற்றிய "ஔடதம் முப்பது" என்ற வைத்திய நூல் இருந்தமை பற்றிக் கொற்றவேல் சர்க்கரை கூறுகிறார்.

பயிரன் சர்க்கரை மகனான பெரிய சர்க்கரை தான் பயணம் செய்ய ஒரு நல்ல குதிரையைத் தேர்ந்தெடுத்து தாளியில் தயிர்சாதம் வைத்து உண்ணச் செய்து போற்றிவளர்த்தார். அவர் குதிரை மீது ஏறிக்கொண்டு கையில் கவண் எடுத்துக்கொண்டு மகன் குழந்தை விசுநாதனையும் உட்கார வைத்துக்கொண்டு குதிரை மீது நின்றுகொண்டே கவண் வீசிக் கதிர்களை உண்ணும் குருவிகளை விரட்டிக்கொண்டு உத்தியில் ( இரண்டு தோட்டப் பகுதிக்கு நடுவே உள்ள பகுதி) சவாரி செய்வாராம். கணவனும் மகனும் பயணம் செய்த விதத்தைப் புலமை மாதரான அவர் தேவியார் ஆரியப்பட்டி வள்ளியாத்தாள் ஒரு கவிதையாகப் பாடியுள்ளார்.

"பயிரன் சர்க் கரையவர்கள் புதல்வ ரான
பண்புபெறு பெரிய சர்க்கரையார் என்போர்
தயிரன்னத் தோடவரே பிசைந்து நித்தம்
தாளியில் தின்றிட வைக்கும் குதிரை மீதில்
கயிறுடைய கவண்வீசி நின்று கொண்டே
கருதுதின்னும் குருவிளை விரட்டிக் கொண்டு
மயிரளவும் தவறாது உத்தி மேலே
மகனோடு சவாரி செய்து மகிழ்வ தென்னே"

பழைய கோட்டை அரண்மனையில் பட்டக்காரர்கள் மட்டும் அல்ல : அவர்களது மனைவிமார்களும் குதிரை சவாரி செய்வது கொங்கு நாட்டில் நடந்த அதிசய நிகழ்ச்சியாகும்:

"நஞ்சையன் பத்தினி வஞ்சி யாத்தாள் - அவர்
நல்ல குதிரைச் சவாரி செய்வார்"

என்று மடவளாகம் சிவராம தேசிகர் பாடியுள்ளார் குதிரைக் குட்டிக்குப் பால் சரியாகத் தராத தாய்க் குதிரைகட்கு ராகியை ஆட்டி அதன் பாலைக் கொடுக்க வேண்டும். "குதிரைக் குட்டி கட்குப் பாலில்லாக் காலத்தில் குருது ராகிகளில்

பாலாட்டி இதமாக தாய்க்கு கொடுக்க வேண்டும்" என்பதை ஒரு பாடல் உணர்த்துகிறது. குதிரை லாயம் பற்றியும் அவைகளின் பிரிவுகள் பற்றியும் அவை மேயும் இடம் பற்றியும் சடையபிள்ளை பாடியுள்ளார்.

"அரண்மனை ஓரம் குதிரை லாயம் - அது
அடிக்கடி பார்க்க வெகு வசதி
பட்டத்துக் குதிரை. வண்டிப்பரி - ஏறும்
பரிகளும், மாக்குண்டும் அங்கிருக்கும்
குட்டிக் குதிரை சவல் குதிரைகளும் - தன்
கூடிய நண்பர் குதிரைகளும்
கொழுத்த புல்லுள்ள குரங்காட்டில் - அவை
கொம்மாளம் போட்டுக் கொண்டு மேயும்

என்பன அவர் பாடல் பகுதிகளாகும். ஆட்டுப்பட்டி போல "குதிரைப்பட்டி" என்ற சொல்லும் வழக்கில் இருந்துள்ளது.

குண்டு என்றால் ஆண் குதிரை, குண்டுப்பட்டி என்பது குதிரை லாயம். குதிரை லாயத்திற்குள் குதிரை ஓட்டக்கூடாது என்பதை "குண்டுப்பட்டிக்குள் குதிரை ஓட்டாதே " என்பர். அதுதான் " குண்டு சட்டி" ஆகிவிட்டது.

இரண்டாவது கொற்றவேல் சர்க்கரையார் காலத்தில் ஒரு குதிரைப் பந்தயம் நடந்தது. விஜயதசமி அம்பு சேவை நாளில் ஜெயங்கொண்ட நாதர் கோயில் தேர்வரும் நான்கு வீதிகளையும் மூன்று சுற்று வரவேண்டும். முதலில் வந்தவர் கட்குப் பாராட்டும் சிறப்பும், அதில் கொற்றவேல் சர்க்கரையார், குதிரை சேணம் செய்யும் அரவக்குறிச்சி ஆறுமுக சேர்வை, ஊடையம் அண்ணன், குட்டப்பாளையம், வாழையூர் அண்ணன், பூந்துறை மைத்துனர், புதூர் மைத்துனர் ஆகிய ஏழுபேர் கலந்து கொண்டனர். வெற்றி பெற்ற கொற்றவேல் சர்க்கரையார் எல்லோரையும் பாராட்ட ஏற்பாடு செய்திருந்தார்.

கரியான் சர்க்கரை மகன் அப்புக்குட்டி. மேலப்பாளையம் சித்தப்பா முத்துரத்தினசாமி கொடுத்த குதிரை மீது ஏறிக்கொண்டு போருக்குப் பூந்துறை , சித்தோடு ஆகிய இடங்களுக்குச் செல்வார். அவர் சென்றது சேவல்களின் போருக்கு.



கரியான் சர்க்கரை 100 செம்மறியாடுகள் விற்ற பணத்தில் சிவமலை தேர் ஓடும் திருவீதியை அமைத்தார். அப்பணிக்காக நாள் தோறும் இரண்டு முறை சிவமலை செல்வார். அதற்காகப் பழையகோட்டையில் ஒரு குதிரையும் சிவமலையில் ஒரு குதிரையும் தயாராக இருந்தது. சிவமலை சென்றவர் அங்குள்ள குதிரையில் பழைய கோட்டை வருவார். பழையகோட்டையிலிருந்து போகும் குதிரையை அங்கேயே விட்டுவிட்டு அடுத்த குதிரையில் ஏறிப் பழையகோட்டை வருவார் கொற்றவேல் சர்க்கரையார்.

"வருசுழிகள் பத்தும் உள செய்ப்பரியை வைத்துளோர்
வம்சம் அழியாது வளரும்."

என்று கூறியுள்ளார். கால்நடைகளைப் பழைய கோட்டை மரபினர் நாற்கால் நண்பர்கள் என்று மதித்தனர்.

"காங்கேயம் பசுக்கள்" "காங்கேயம் காளைகள்" என்ற உலகோர் வியக்கும் இனத்தைத் தோற்றுவித்தவர்கள் பழைய கோட்டைப்பட்டக்காரர்கள். இவர்கள் அனைவரும் "மன்றாடியார்" என அழைக்கப்பட்டதற்குக் கூறப்படும் சில காரணங்களில் கால்நடைகளின் தலைவர் என்பதும் ஒரு காரணமாகும். காங்கயம் இனம் அழகிலும் வலிமையிலும் வேலை செய்வதிலும் மிகச் சிறந்து விளங்குகிறது. காங்கயம் பகுதிகளில் மிகச் சிறப்பாக தனித்தன்மையுடன் வளரும் கொழுக்கட்டைப் புல்லும் அதற்கொரு காரணமாகக் கூறப்படுகிறது. இந்தியாவில் பல்வேறு பகுதிகளிலும் தமிழ்நாட்டிலும் காங்கேயம் இனம் பல பரிசுகளைப் பெற்றிருக்கிறது. உலகின் பல்வேறு பகுதிகளிலும் இந்தியாவின் பிற இடங்களிலும் கால்நடைக் கல்வி பயில்வோரும் ஆய்வு செய்வோரும் பழைய கோட்டைக்குப் பல முறை வந்துள்ளனர்.

"1916 ஆம் ஆண்டு சென்னை மாகாண கவர்னர் பென்ட்லண்டு அவர்கள் பழையகோட்டை வந்து பட்டக்காரரின் கால்நடைப் பண்ணையைப் பார்த்துப் பாராட்டியுள்ளார்.

"பட்டக்காரர் அவர்கள் அன்போடு வரவேற்றதற்காகவும் அவருடைய அழகான கால்நடைகளைப் பார்த்த சந்தோஷத்திற்காகவும் அவரை வந்தனம் செய்யப்பிரியப்படுகிறேன். மாகாணத்துக்கு வேண்டிய பண்ணைக் கால்நடைகள் விஷயத்தில் அவர் அருமையான வேலை செய்து வருகிறார். இது விஷயத்திற்காக என் மனப்பூர்வமான பிரியத்தை அவர் வகிக்கிறார். அவர் உதாரணத்தை மற்றவர்கள் பின்பற்றுவார்கள் என்று நம்புகிறேன்."

பென்ட்லண்டு
24.10.1916 (சென்னை மாகாண கவர்னர்)

( I wish to thank the Pattagar for his hospitable welcome and for the pleasure of seeing his fine cattle. He is doing splendid work for the farm stock of the presidency and in this he has my cordial wishes. His example may I trust be followed by others)

பழையகோட்டை அரண்மனைச் சம்பிரதிகள் வழிவந்த நல் இராச கோபாலபிள்ளை விவசாயம் செய்ய தனக்கு காளைகள் வேண்டும் என்று 22 ஆம் பட்டக்காரர் அவர்களுக்கு ஒரு சீட்டுக்கவி எழுதியுள்ளார். அதில் ஒரு நல்ல காளை எப்படி இருக்க வேண்டும் என்று கூறுகிறார். அவர் அரண்மனைத் தலைமைக் கணக்கர் வழி வந்தவர் என்பதால் அதை பழையகோட்டை அரண்மனைக் கருத்தாகவே கொள்ளலாம்.

"வரிசை புகழ் நெஞ்சுரம் கால் உறுதி கொண்டதாய்
வளர்கடவு தாழ்வில்லதாய்
வருதாடை தொங்கல் இல்லதாய் ரோமங்கள்
வழவழஎன மிருதுவானதாய்
வாலது சிறுத்ததாய் திமிலது பெருத்ததாய்
வலிய பல் கடைசேர்ந்ததாய்
மருவி வளைந்த கொம்புகள் சாணது வளர்ந்ததாய்
முதுகெலும்பு கனமானதாய்
வாடிவாங் காததாய் போக்கு நீட் டுடையதாய்
வருகுளம்பு குட்டுடையதாய்
வளர்த்திசமம் உள்ளதாய் தீவனம் தண்ணீரில்
வாய்நங்கு பார்க்காததாய்
சுருளும் வெடிவால் மந்திமட்டை பரவாயில்லை
சூழ்ந்தபெரு மயிர்வண்டையாம்
தூரத்தி லேபயணம் ஆனால் இளைப்பு வரும்
தொங்குதொடி சோம்பேறியாம்
பெருவால் முடங்கனொடு விலங்குமுட் டாணியும்
பிசகான குடைபாடையும்
பேரைக் கெடுத்திடும் ஆகாது ஆதலால்
பிரபுக்கள் மெச்சுகின்ற
குருவாம் துரைச் சுழியு மேஏற்ற முள்ளதாய்



குற்றம் ஒன்று இல்லாததாய்
குமுதமலர் ஒத்தகண் பொறிச் சிவலை
சந்தனப் புல்லைநிறம் மயிலை நிறமாய்
அருமைமிகு காளைரண் டோச்சியே தரவேணும்
அரசனே காரை ஆனூர்
அம்மைசெண்டிகைஅருள் நலலசே னாபதி
அதிபசர்க் கரை மன்னனே "
என்பது அப்பாடல்.

நஞ்சையன் சர்க்கரையார் தம்பி விசுவநாதக் கவுண்டர் தனக்குரிய நிலங்களை பெற்று முள்ளுவாடியில் விவசாயம் செய்து கொண்டிருந்தார். அவரிடம் தண்ணீர் இறைப்பதற்காக பழையகோட்டைக்காளைகள் நான்கு இருந்தன. அவை

"சாண் உயரக் கொம்புடைய கவலை ஒட்டும்
சாதி மயிலைக் காளைகள் நான்கு"
என்கிறார் மடவளாகம் சிதம்பர தேசிகர்.

தெற்கிலிருந்து வந்த திருடர் கூட்டம் அக்காளைகளைத் திருடிச் சென்றது. சங்கிலித்தேவன் பெரிய குணத்தேவன், பொன்னன் ஆகியோர் திருடிச் சென்றனர். காளை திருட்டுப் போனது உயிர் பிரிந்தது போல் இருந்ததாம். " ஊனுயிரைப் பிரித்ததுபோல்" என்கிறார் கவிஞர். காளைகளிடம் அவ்வளவு அன்பு. மூன்றே நாட்களில் அவை மீட்கப்பட்டன.

21ஆம் பட்டக்காரர் நல்லதம்பிச்சர்க்கரையார் தம்பி கல்லங்காட்டு சின்னசாமிக்கவுண்டர் ஒரு பரதேசியிடம் உபதேசம் பெற்று இலவசமாக குதிரை, மாடு, ஆடு நோய்கள் தீர்த்து வந்தார் இராசகோபால பிள்ளை

"நூறுவயது குறைவின்றி இப்பூவினில்
வாழ்ந்துவரு ததியில் ஓர் நாள்
வந்த ஒரு பரதேசி மந்திரமது கற்று அசுவ
மாடாடு நோய் தீர்ப்பரே.

எனப்பாடியுள்ளார்

கொழுக்கட்டை மேய்ந்துவரும் மாடுகளுக்குப் பருத்தி விதை புண்ணாக்கு வேலாங்காய் தவிடு கொள்ளு உழுந்து வெந்தயம் கலந்த விருந்து கட்டுத்தறியில் கிடைக்கும்.

கொழுக்கட்டை விதை சேகரிக்கவும் கொழுக்கட்டைக் காடுகளில் செடி கொடிகள் கொத்தவும் ஆட்கள் இருந்தனர்.

ஆடு வளர்ப்பு வேளாளர்கட்கு ஒரு முக்கியமான தொழில். ஆட்டெரு அவ்வருடம் மாட்டெரு மறுவருடம் என்பது பழமொழி

கொற்றவேல் சர்க்கரையார்

"ஆட்டெருக் காணாத புஞ்சையில் விளை தவசம்
ஆகுமிகு ராசி முறையும்"

என்று கூறியுள்ளார்.

நேர்த்தியுள்ள ஆடே படைப்பு ; ஆரியமே
நேர்ந்த வெள்ளாமை என்பதும் அவர் கூறியதே.

நான்கு செம்மறியாடுகள் விற்கும் விலை ஒரு மாட்டின் விலையை விட அந்தக் காலத்தில் அதிகமாக இருந்தது. பசு எருமை இவைகள் பால் தருவதால் செல்வம் சேரும். ஆனால் ஆடுகள் இனவிருத்தியால் மிருந்த செல்வத்தைக் கொடுக்கும் அந்தக் காலத்தில் கோயில்கட்குக் கொடையாகக் கொடுக்கப்படும் ஆடு மாடு எருமைகள் சாவாமூவா ஆடு, சாவாமூவாப்பசு, சாவாமூவா எருமை எனப்பட்டது. எண்ணிக்கை குறையாமல் இருக்க வேண்டும் என்பதே இதன் கருத்தாகும்.

ஆடுகளைப் பட்டியில் அடைத்து அதை மாற்றி மாற்றி புன்செய் நிலம் முழுவதற்கும் உரமாகச் செய்வது கொங்கு நாட்டு வழக்கம். இதை

"பேர்ர் கொண்ட பழமொழிப் படியுள்ள ஆடுகள்
பெருவயிறு நிறைய மேய்ந்தால்
பெட்புடன் குட்டிகள் மாறாது போட அது
பெருகுவதால் சாணியும்
பிரண்டு நித்தப்பட்டி மாற்றுவதற்கு ஏதுவாகும்"



என்று அழகன் சர்க்கரையார் கூறுகிறார். அவர் ஆட்டெருவின் சிறப்பை மகன் அப்புக்குட்டிக்குச் சோதனை மூலம் செய்து காட்டியவர். கரியான் சர்க்கரை நூறு செம்மறியாடுகள் விற்ற பணத்தில் போட்ட தேர்ப்பாதையில் தான் சிவன்மலைத் தேர் ஓடுகிறது.

காட்டில் உள்ள பட்டிகளில் உள்ள கால் உயர்ந்த கூறை உள்ள கட்டிலில் ஆட்கள் படுத்திருப்பர். காவலுக்கு நாய் இருக்கும். அந்த நாய் ஆடுகளைப் பிடிக்க நரி வருவதை தன் மோப்பத்தால் அறிந்து குலைக்க வேண்டும். அப்படி நாய் வளர்ப்பவர் பட்டியில் தான் ஆடுகள் வளருமாம்.

"மிக்கதொரு பட்டியில் புக்கநரி வருவதை
மிருது மூக்கால் தெரிந்து
மீறிக் குலைத்திடும் குக்கலை வளர்ப்பவர்
மேடமது பெருகி வளரும்"

என்று கூறுகிறார் கொற்றவேல் சர்க்கரையார்.

பழைய கோட்டையில் செம்மறி ஆடு, வெள்ளாடு, சீமை ஆடுகள், கிடாய்கள், தனித்தனியே மேயுமாம்.

சடையபிள்ளை அவர்கள்

"செம்மறி ஆட்டினில் வெள்ளைகள் ஓர்புறம்
சேரும் சிவலைகள் வேறுபுறம்
சீமை ஆடுகள் வெள்ளாடுகளும் சேர்ந்து
செப்பும் கிடாய்கள் பிரிந்து மேயும்"

என்று பாடுகிறார். பழைய கோட்டையில் பட்டி,தோட்டம் காவலுக்குத் தக்க, ஆட்களுடன் இருபது நாய்கள் இருந்தன.

"நாய்கள் இருபது இருக்கும் அதை எந்த
நாளுமே பட்டியைக் காப்பதனால்
மூன்று வேளையும் குறையாம லேபோட்டு
முன்னாலே பாலதும் ஊற்ற வேண்டும்.

முதலில் பாலும் பின்னர் உணவும் நாய்களுக்கு கொடுக்க வேண்டுமாம்.

அந்தக் காலத்தில் கால்நடைகளை மேய்க்கச் செல்லுவோர் உடன் நாயையும் கூட்டிச் செல்வர். கள்வர்கள் கால்நடைகளைக் கவர்ந்தனர். துரத்திச் சென்ற நாய் கள்வரைக் கடித்துக் குதறி எஜமான் வரும் வரை காத்திருந்து பின் இறந்தது. அந்த நாய்க்கும் நன்றியொடு நடுகல் நட்டது தமிழ்ச் சமுதாயம். செங்கம் நடுகல் ஒன்றில்,

"கோவிவன் என்னும் நாய் இரு கள்ளரைக் கடித்துக் காத்திருந்த வாறு" என்று நாய் உருவத்துடன் நடுகல்லில் கல்வெட்டு எழுத்துக்களையும் பொறித்துள்ளனர். எங்கள் ஊரான வெள்ளமுத்துக் கவுண்டன் வலசில் சுமார் 60 ஆண்டுகட்கு முன் மாலை மயங்கி இரவின் கருமை சூழ்கின்ற அந்த நேரத்தை எங்கள் ஊர்மக்கள் நாய்ச்சோத்து நேரம் என்று அழைப்பதைக் கேட்டிருக்கிறேன். நன்றியுடைய நாய்களுக்குத் தவறாமல் உணவளிக்க வேண்டும் என்பதே அதன் கருத்தாகும்.

மாடுகள் நல்லமேனி உடையதாய் ஒரு குறைவுமின்றி நன்கு வளர கொற்றவேல் சர்க்கரையார் (19) ஒரு யோசனை சொல்லுகிறார். நரிப்பயிர்ச்செடியைப் பிடுங்கி நன்கு காயவைத்துத் தூளாக்கி அதனைத் தண்ணீரில் கலந்து குடிக்கச் செய்தால் பருத்திக்கொட்டை போட வேண்டியது இல்லை. பருத்தி விதை வாங்கும் செலவு குறையும் என்று அவர் கூறுகிறார்.

"நரிப்பயிர் நெருக்கியோர் தனிப்புலம் விதைத்த செடி
நன்கு காய்வறள் உத்தியில்
நறுக்கியது உலர்த்தியே குவித்ததை அடித்தபயிர்
நயமாக வாட்டி அத்தூள்
நனைத்த தண் விடுத்து அதை அருத்திவர மாடுகள்
நசுக்கிய பருத்தியின் விதைக்குள பணச்செலவு எந்
நாளுமாகாது குறையும்."

என்பது அவருடைய நல்ல மங்கையம்மன் சதகப்பாடல் பகுதியாகும்

மாடுகளுக்கு வரும் கருப்பு சிவப்பு அலுங்கு நிழலி இவை அழிந்து மாடுகள் வளர ஒரு வழி சொல்லுகிறார்.

முடக்கத்தான் தழையோடு கரிக்குருவி இரத்தம் கலந்து வறுத்து அதை இடித்துப் பொடியாக்கி கழுதைப்புலி இரைப்பை, கள் கலந்த கலவை ஒரு கையளவு இரண்டு நாள் வார்க்க வேண்டும் என்கிறார்.



"கரிக்குருவி ரத்தமொடு அரத்தையை வறுத்து அதை
இடித்த பொடியொடு கழுதைக்
கடத்தியை உறித்ததின் இரைப்பையை அறைத்த நீர்
கள்ளோடு கலந்தோர்படி
கசப்புள மசப்புடல் நசுக்கிய சிரங்கைச்சாறு
கலக்கி ஈர்தினம் வார்த்திடில்
கருப்பொடு சிவப்புள அலுங்கொடு நிழலியும்
கரைந்து பசு நன்கு வளரும்"

என்கிறார் கொற்றவேல் சர்க்கரையார். இவைகள் அனுபவ மருத்துவம் ஆகும்.

பழைய கோட்டைப் பண்ணையில் எருமைகளும் இருந்தன. பழைய கோட்டை கொற்றவேல் சர்க்கரையாரின் சிறிய தந்தையார் தென்னங்கரைப்பாளையம் சேனாபதிக்கவுண்டர். அவர் அரவக்குறிச்சி ஆறுமுகம் சேர்வைக்கு பால் எருமையை அன்பளிப்பாகக் கொடுத்துள்ளார். அவரே கொற்றவேல் சர்க்கரையாரிடம்

"கன்னங் கறுத்த நூல் கயிற்றுக்
கடிவாளத்துக்கு இவ் எருமை
தென்னங் கரைநும் சிறிய தந்தை
சேனாபதி தன்கொடையே"

என்று கூறியுள்ளார்.

பழைய கோட்டை அரண்மனை அருகே கலுங்கு என்ற ஓர் இடம் இருந்தது. அங்கிருந்த நிலங்களைச் சின்னப்பண்ணை என்பார்கள் பட்டக்காரர்கள் அரண்மனை அருகில் இருந்ததால் அடிக்கடி பார்த்து வருவர்

"கலுங்கென்று சொல்லுமோர் சின்னப்பண்ணை - அதில்
கரிய எருமைகள் கட்டுத்தரை
அரண்மனைப்பக்கம் ஆனதினால் - அதற்கு
அடிக்கடி போய்ப்பார்த்து வந்திடுவார்"

என்று சடையபிள்ளை கூறுகிறார்.

பார வண்டிகள் இருபதுக்குக் குறையாமல் அரண்மனையில் இருக்கும். அதற்கு வலிமையான பருத்த எருதுகள் பல இருக்கும். அவை நல்ல புல் உள்ள குரங்காட்டில் மேயும்.

"பாரவண்டிகள் இருபதுண்டு - அதன்
பருத்த எருதுகள் மேய்வதற்கு
நல்ல புல்லுள்ள குரங்காட்டில்"

அவை மேயும். என்று பாடலில் பதிவாகியுள்ளது. பாரவண்டிகள் இழுக்க

"பாரம் மிகவும் ஏற்றிக் கோறும் வண்டி இழுக்க
மீறும் எலும்புக் கனமுள்ளதும் - நடை
சேரும் கால் உறுதியாய் உள்ளதும்"

ஆகிய எருதுகள் வேண்டுமாம்.

கால் நடைகளுக்காக மட்டும் மாடு மேய்ப்போர், ஆடு மேய்ப்போர், எருமை மேய்ப்போர், கட்டுத்தறி பண்ணாடிகள், பால் கறப்போர், தொழுவக்காரர், லாயக்காரர், காடு சுத்துவோர், கொழுக்கட்டை விதை சேகரிப்போர், மேய்ச்சல் காட்டில் செடி களை பறிப்போர், கால்நடை விலை கூறும் பண்ணாடிகள் என தனியாகப் பலர் வேலை புரிந்தனர்.
எல்லோருக்கும் பகல் உணவு அளிக்கும் பொறுப்பு உக்கிராணக்கவுண்டர் அவர்கட்கு உண்டு (சமையல் மேற்பார்வையாளர்).

"கொங்கதின் மண்ணே சுகம் தரும் - வேறு
கோருவோர் அறிவு குறையும்"

என்று நாட்டுப்பற்றுடன்

"ஏரையே தெய்வம் என எண்ணும் வேளாளர்"

ஆக வாழ்ந்து

கால்நடைகளே உண்மையான செல்வம். குறிப்பாக
பசுக்கள் தெய்வம் உறையும் இடம்.

என மதித்து கால்நடைச் சேவையை தேச சேவையாகப் பழைய கோட்டை மரபினர் வாழ்ந்தனர் அரண்மனை இளவல்கள் . இளைய மக்கள் பல ஊர்களில் வாழ்பவர்களும் இதே நெறியைக் கடைப்பிடித்து ஒழுகி வந்தார்கள் அக்காலம் கொங்குச் சமுதாயத்தின் பொற்காலம். இதோ அரண்மனைச் சம்பிரதிகளில் வரலாற்றை எழுத உதவும் ஆவணங்களைக் காத்தளித்த ஓ.எஸ் சடையபிள்ளை வாழ்த்துகிறார்.

"வாயில்லாப் பிராணிகட்கு இப்படிச் செய்வார் இவர்
வம்மிசத் தோர்களே அல்லாது
பூவுல கத்தினில் எவர்களு மேஇல்லை
பெட்புடனே இவர் வாழ்குவரே"



<u>மனிதர்களுக்கு</u>

கால்நடைகளுக்கு மட்டுமல்ல மனிதர்கட்கு வேண்டிய பல மருத்துவக் குறிப்புக்களையும் கூறியுள்ளனர்..

"பருதி உதயத்துளே முழுகலை முடித்தெழும்
பருகுவோர் ஆயுள் வளரும்"

"சிரமீது எண்ணையது சுக்கு அட்டு முழுகிடின்
சீதமொடு பித்தம் அழியும்"

"வேளை தவறாது உணவு நித்திரை செய்பவர்கள்
வேதனைசெய் நோய்கள் குறையும்"

"பாலிடு பசும்பயிர் பாயசம் நிதம் உணில்
பலமிகும் தாது வளரும்"

"சந்தனக் கலவையை நித்தமும் பூசுவோர்
சமத்தில் நோய்கள் குறையும்"

"தினம் இருவேளை நல்ல உணவொடு மோர்உணில்
திகழாது பித்தம் அழியும்"

"தீராத நோயும் முத்தாமணித் தழையினால்
திரும்பவும் வராமல் அழியும்"

"ஆலினது பாலோடு அதன் துளிர் அருந்துவோர்க்கு
அரிப்பு மேகங்கள் குறையும்"

என்பன கொற்றவேல் சர்க்கரையாரின் அனுபவ மொழிகள்.

<u>நாற்கால் நண்பர்கள்</u>

அரண்மனைக் கணக்கர் ஓ.எஸ் சடையபிள்ளை அவர்கள் கால்நடைகளைப் பட்டக்காரர்களின் நாற்கால் நண்பர்கள் என்று கூறுகிறார். தம் நாற்கால் நண்பர்களிடம் பட்டக்காரர்கள் பற்றிய ஆர்வத்தை அவர் கூறுகிறார்.

"காட்டிலே மேய்கின்ற காளைகளை எல்லாம்
காணுதற்கு ஓட்டி வரச்சொல்லியே

கன்றுகள் நிற்கும் புதூர்த் தொழுவத்திற்கு
காலையில் நேரமே சென்றிடுவார்

சின்னத் தரமுள்ள காளைகளை ஒன்று
சேரும் படித்தனி யாப்பிரித்து
மன்னும் உடம்பு சுழி நிறம் ஒத்ததை
மற்றும் பிரித்துப் பொறுக்கி அதில்
தேர்ந்த உருப்படி எத்தணை என்றெண்ணித்
தேரும் புல்லுள்ள குரங்காட்டுக்கு
அப்பவே ஓட்டிப்போய் விடச்சொல்லி ஓர்
ஆளுக்கு உத்தரவு போட்டிடுவார்

நடுத்தரக் கன்று நல்லவைகள் எல்லாம்
நாடியே பார்த்து வேறாய்ப்பிரித்து
நீட்டுப்போக்கு உள்ளது பூச்சிக்கு ஆகும் என்று
நின்று பொறுக்கிப் பிரித்தெடுப்பார்

மற்றும் ஒரு தரம் தான்பொருக்கி அந்த
மாடு காளைமாட்டுக்கு ஆகும்என்று
திட்டமாகவே உடை அடித்து வைத்துக்
தேறுவதைப் பின்பு பார்ப்போம் என்பார்

பெரிய தரத்துள்ள காளைகள்முன்னமே
பிரித்து மேய்ந்து வளர்ந்திருக்கும்
அப்படி வந்ததைத் தேருக்கு ஆகும் என்று
அதிலும் பொறுக்கிப் பிரித்தெடுப்பார்

பொறுக்கி எடுத்தவை போகவே மீந்ததில்
பொக்கரை முட்டி எலாம்இருக்கும்
இதிலும் கொஞ்சத்தைப் பொறுக்கி எடுத்து இவை
எப்படியோ தேரில் பார்ப்போம் என்பர்

தனித்தனியாகப் பிரித்தவை மேய
தகுந்த குறைகளின் பேரைச்சொல்லி
காடு சுத்தும் பட்டா கிட்டா நாய்க்களே
கவனமாய்ப் பாருங்கள் என்றுரைப்பார்



உரைத்த பின்னே ஒரு பண்ணாடி நின்றங்கே
ஒன்றொன் றாக எண்ணி ஒப்புவிப்பான்
ஒவ்வொரு காட்டிற்கு இரண்டிரண்டு ஆளாக
ஓட்டிக் கொண்டு சென்று சேர்த்திடுவார்

இப்படி மேய்கின்ற காளைகளின் தேர்ச்சி
எப்படி உள்ளது எனப்பார்க்க
மற்றும் ஒரு முறை ஓட்டி வரச்சொல்லி
மாதம்  இருமுறை பார்த்திடுவார்
பில்லுக் குறைந்த குரங்காட்டில் உள்ளதை
பில் உள்ள காட்டுக்கு மாற்றிவிட்டு
மற்றதில் கொஞ்சம் பிரித்தெடுத்து அதை
மாற்றி இந்தக்காட்டுக்கு ஓட்டும் என்பார்

ஈனாக் கிடாரி மேய்கின்ற காட்டுக்கும்
ஈனும் கிடாரிகள் மேய்வதற்கும்
எருதுகள் மாடுகள் மேய்கின்ற காட்டுக்கும்
இளங்கன்றுகள் மேயும் காட்டுக்குமே

வண்டி யிலும் போவார் குதிரையும் ஏறுவார்
வாகனம் இன்றியுமே நடப்பார்
அவசர வேலை இருந்தால் இவைகளை
அங்கங்கே மோட்டாரில் போய்ப் பார்ப்பார்”

## பவானி புலவர் அ.மு. குழந்தை எழுதுகிறார் (01.11.1947)

ஆடு, மாடுகள் வேளாண்குடி மக்களின் செல்வத்துட் செல்வம். உலகில் பல வகையான மாடுகள் உண்டு. அவற்றுள் ' காங்கயம் இனம்' முதன்மையானது. காண்போர் கண்ணையும் கருத்தையும் ஒருங்கு கவரும் எழிலும், குறிப்பும், இயலும் வாய்ந்த இக்காங்கயம் மாடுகள் தாமாகவே உண்டாகவில்லை. "ஆவேந்தர்" என்று உலகப் புகழ்பெற்ற பழைய கோட்டைப் பட்டக்காரர் உயர்திரு. நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் தமது அரும்பெரும் ஆராய்ச்சித் திறனால் நுண்மாண் நுழைபுலத்தினால் கலப்பு முறையால் உண்டாக்கப்பட்டவையேயாகும்.

ஆண்டுதோறும் திருப்பூர்க் கால்நடைச் சந்தையின்போது நடைபெறும் அகில இந்தியக் கால்நடைக் கண்காட்சி இவ்வாண்டும் நடைபெற்றது. ஒவ்வொரு ஆண்டும் முதல் பரிசுகள் தவறாமல் பழைய கோட்டை மாடுகளுக்கே கிடைக்கும். இவ்வாண்டு (07.06.1947) நேர்த்தியான அழகிய பரிசுபெறும் இனங்களைப் பட்டக்காரர் கொண்டு வந்திருந்தாலும் மற்றவர்கட்குக் கால்நடை வளர்ச்சியில் ஊக்கம் ஏற்படும் பொருட்டு பழைய கோட்டைப் பட்டக்காரர் திரு. நல்ல சேனாபதிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் பெருந்தன்மையோடு போட்டியில் கலந்து கொள்ளவில்லை. இத்தன்னலமற்ற பொது நலங்கனிந்த பட்டக்காரரின் பெருந்தன்மையைப் பலரும் பாராட்டினர்.



## மகளிர்மாண்பு

பழைய கோட்டையின் பெருமைக்கும், புகழுக்கும், வரலாற்றுப் பெருமைக்கும் பட்டக்காரர்களைப் போலவே அரண்மனை மகளிர் பலரும் காரணமாக இருந்துள்ளனர். ஆண்களின் வெற்றி ஒவ்வொன்றிற்கும் ஒரு பெண் பின்னணியில் இருப்பார்கள் என்ற உலகு வழக்குப் போல பழைய கோட்டை மகளிரும் தம் பங்கை ஆற்றியுள்ளனர். சோழ மன்னர் மெய்க்கீர்த்திகளில் அவர்கள் தேவியரும் உடன் வீற்றிருந்து அரசு புரிவதாகக் கூறப்பட்டிருக்கும். அது போலப் பட்டாபிஷேகம் ஆகும் போதே பட்டக்காரர்களுடன் அவர்கள் தேவியர் நற்பணிகளும் தொடங்குகின்றன.

'பங்கேரு கத்திலுதி லட்சுமி நிகர்த்தநல்
பத்தினி சமேதராகப்
பாங்குள்ள ஆறுகால் பீடத்தில் உட்கார்ந்து
பட்டத்து வாளாயுதம்
பதிசதிகள் இருவர்க்கும் மத்தியில் நிறுத்தி"

பட்டாபிஷேகம் நடைபெறுவதாக ஒரு முடிசூட்டுப் பாடல் கூறுகிறது.

வீட்டு நிர்வாகத்தோடு பண்ணையம் பார்ப்பதிலும், நீதி செலுத்துவதிலும், புலவர்களைப் போற்றுவதிலும், இரவலர்க்கு உதவுவதிலும், ஆலயப் பணிகள் செய்வதிலும், அறச் செயல்களிலும் பழைய கோட்டை மகளிர்கள் மிகச் சிறந்து விளங்கியுள்ளனர். "ஆத்தா" என்று அனைவராலும் அழைக்கப்படும் அவர்களை "அரண்மனை அம்மன்மார்" என்றும் புலவர்கள் குறிப்பது வழக்கம். கணவன்மார்களான பட்டக்காரர்கட்கு அரிய ஆலோசனை கூறும் மதிமந்திரிகளாகவும் இருந்துள்ளனர். அவர்களில் பலர் ஜான்சிராணி போல, வீரமங்கை வேலு நாச்சியார் போலக் குதிரைச் சவாரி செய்வதிலும் மிக வல்லவர்களாக இருந்தனர் என்பது கொங்குச் சமுதாய வரலாற்றில் ஒரு வியப்பான செய்தியாகும்.

புலவர்கள் பட்டக்காரர்களைப் புகழ்ந்து பாடுவதோடு அவர்கள் தேவிமாரையும் புகழ்ந்து பாடியுள்ளனர். அரண்மனை மகளிருள் பலர் நல்ல தமிழ்க் கல்வி கற்றுப் பாடல்கள் இயற்றும் புலவர்களாகவும் இருந்துள்ளனர் என்பது தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம்பெற வேண்டிய ஒரு முக்கியச் செய்தியாகும்.

## பெரியாத்தாவின் பெரும்செயல்

வள்ளுவர் பெருமான் "வேளாண்மை" என்றால் உபகாரம், பிறர்க்கு உதவுவது என்று கூறுகிறார். வேளாளர்கள் வேளாண்மை செய்பவர்கள் என்றால் பிறருக்குத் தன்னலம் கருதாமல் தாராளமாக உதவி செய்பவர்கள் என்பது பொருள். அத்தகைய வேளாண்மையாகிய உபகாரத்தை பெரிய சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் தேவியார் பெரியாத்தா அவர்கள் செய்து வந்தார்கள்.

பழந்தமிழர்கள் "காணார் கேளார் கால்முடம்பட்டார் பேணுநர் அற்றார் பிணிவாய்ப்பட்டார்" ஆகியோருக்குச் செய்த பேருதவிகளை மணிமேகலை கூறுகிறது. மணிமேகலை அட்சய பாத்திரம் கொண்டு "பாரகம் எல்லாம் பசிப்பிணி அறுக" என்று அறம் செய்தார். பழைய கோட்டை மணிமேகலையாகப் பெரியாத்தா அவர்கள் திகழ்ந்தார்கள். அவர்கள் நாள்தோறும் காலையும் மாலையும்,

"மனிதரில் கூன்குருடு நொண்டி சப்பாணியும்
மாடுஆடு நாய் பூனை அம்
மாதிரி இருப்பதும் சேர்ந்து அறுபதுக்கு நிதம்
மகிழ்ச்சியாய் இருவேளையும்
புனிதமுள ராகி சோளம் கம்பு ஏதாகிலும்
போட்டு இருமிடாக் கஞ்சியும்
பொரித்த கொள்ளுக் கூட்டும்"

தாராளமாக வழங்கினார் என்று கருங்குமரப் புலவர் பாடியுள்ளார்.

பெரியாத்தா அவர்களின் இப்பெரும் கொடையை ஆதரித்த பெரிய சர்க்கரையார் இறுதிக்காலத்தில் செய்த செயல் நம்மை வியப்பில் ஆழ்த்தும். பெரிய சர்க்கரை நோய்வாய்ப்பட்டு மரணப்படுக்கையில் இருந்தார். அவர் மூத்த மகன் பட்டத்துக்கு உரியவர் பிள்ளை சர்க்கரை "அப்பா நீங்கள் நற்கதி அடைய உங்கள் இறுதிக்காலத்தில் ஒரு கறவை மாட்டைக் கன்றுடன் பிராமணர்க்குச் கொடுங்கள்" என்றார். பெரிய சர்க்கரை புன்முறுவல் பூத்து ஒரு பால்பசுவைக் கொண்டு வரச் சொன்னார். பால் பசுவும் வந்தது. அந்தணரும் வந்தார். பெரிய சர்க்கரையார் பால்பசுவை யாருக்குத் தானம் செய்தார் தெரியுமா? தனக்கு வாழ்நாள் எல்லாம் சமையல் செய்து தன்னை உபசரித்துப் போற்றிய சமையல்காரன் அருணான் என்பவருக்கே பால்பசுவை ஈந்தார்!



"அந்திய காலத்தில் ஒரு கன்றுள்ள பால்பசுவை
அந்தணர்க்கு ஈயும் என்று
இனிமையுள தன்சுதன் பிள்ளைநற் சர்க்கரை
இயம்பு மொழியைத் தடுத்து
இந்தா எனத்தனது சமையல் அருணானுக்கு
ஈந்தனர்; இது என்ன மனதோ"

என்று இந்நிகழ்ச்சியைக் கருங்குமரப் புலவர் பாடியுள்ளார். புலவரே இதுகண்டு வியப்படைந்துள்ளார்.

## கொம்பொடிந்த வள்ளியாத்தாள் :

மேலேகண்ட பெரிய சர்க்கரையாரின் பேரன் பெயரும் பெரிய சர்க்கரைதான். அந்தக் காலத்தில் பெரும்பாலும் தாத்தா பெயரைப் பேரனுக்கு வைப்பார்கள். தாத்தாவின் பெயரையுடையவன்தான் பேரன் ஆனார்.

வள்ளியாத்தாள் ஆரியப்பட்டியைச் சேர்ந்தவர். ஆரியப்பட்டி ஓதாளர் குலத்திற்கும் பழையகோட்டை அரண்மனைக்கும் பன்னெடுங்காலமாகத் தொடர்பு உண்டு. வள்ளியாத்தாவின் தாயார் சிறுவயதில் இறந்துவிடவே தந்தை பராமரிப்பில் வள்ளியாத்தாள் வளர்ந்தார். அடுப்பு வேலை முதல் வீட்டு வேலைகள் அனைத்தையும் தானே செய்து கொண்டு "மகளே உனக்குப் படிப்பு வேலைதான்" என்று படிக்க வைத்தார். சைவத்திலும், தமிழிலும் தேர்ச்சியுடைய அங்கமுத்து வாத்தியார் என்பவரை வள்ளியாத்தாவின் ஆசிரியராக நியமித்தார். "அங்கமுத்து வாத்தியாரே! மகளை உங்களிடம் ஒப்படைத்து விட்டேன். அவளைச் சிறந்த பெண்மணியாக ஆக்குவது உங்கள் பொறுப்பு" என்றார்.

அரிவரி முதல் பாடம் தொடங்கியது. தமிழ் இலக்கியம், இலக்கணம் கற்றுக் கவிபாடும் ஆற்றலும் பெற்றார். அறிவிற் சிறந்தவராக விளங்கினார். தக்க பருவம் வந்தது. தந்தையாரின் முயற்சி பலித்தது. ஆரியப்பட்டி வள்ளியாத்தாள் காரையூர் பெரிய சர்க்கரையாருக்கு வாழ்க்கைத் துணைவியானார். பெரிய சர்க்கரை குதிரைச் சவாரியிலே வல்லவர். தன் மகனை மடியில் வைத்துக் கொண்டு குதிரை மீதேறிக் கையில் கவணை வைத்துக் கொண்டு உத்தியில் குதிரையை ஓட்டியபடியே தோட்டத்தில் கருதுகள் தின்னும் குருவிகளை விரட்டிய காட்சியை வள்ளியாத்தாள் அவர்களே பாடலாகப் பாடியுள்ளார்.

136

வள்ளியாத்தாள் மிகச் சிறந்த முருக பக்தையாக விளங்கிச் சிவமலையாண்டவரை அடிக்கடி வணங்கி வந்தார். "கந்தர் அநுபூதி" யைத் தினமும் ஓதும் பழக்கமுடையவர். ஒருமுறை சிவமலைக்கு வந்தார். சிவமலையாண்டவரை வழிபட்டார். "சிவமலையாண்டவரே! எனக்கு ஒரு குறையும் இல்லை. சிறு வீட்டில் பிறந்து வளர்ந்த நான் பட்டக்காரரின் தேவி ஆனேன். எனக்கு ஒரு குறை ஒன்று மட்டும் உண்டு. என் மூத்த மகன் அசுபதியில் பிறந்த விசுவநாதன் பட்டத்துக்கு உரியவன். அவனது காலில் வெண்புள்ளியுள்ளது. அதனால் எந்தத் தொந்தரவும் இல்லை. அதனை "வெண் குட்டம்" என்று கூறுகிறார்கள். அப்பழிச் சொல்லுக்கு என் மகன் ஆளாகலாமா? உன்னுடைய பக்தையின் மகனுக்கு ஒரு குறை இருக்கலாமா? அடுத்த 15-ஆம் நாள் அசுபதியன்று என் மகன் விசுவநாதனுக்குப் பிறந்த நாள். அன்று என் மகனுடன் சிவமலைக்கு வருவேன். அன்றைய தினத்துக்குள் அவன் கால் வெண்புள்ளியை நீதான் மாற்றிக் குணமடையச் செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

வள்ளியாத்தாளின் வேண்டுதல் நிறைவேறியது. பத்தே நாட்களில் விசுவநாதன் காலில் உள்ள வெண்புள்ளி தானாகவே மறைந்தது. வள்ளியாத்தாள் தன் மகனுடன் அசுபதியன்று சிவமலை சென்று மனமுருகிப்பாடினார்.

" ஐயா சிவமலைவாழ் ஆண்டவனே பன்னிரண்டு
கையா என் சேய்விசுவின் காலதனில் - மெய்யாக
வந்தவெண் குட்டமதை மாற்றிக் கருணையது
தந்தவனே நின்தாள் சரண்"

என்பது அவர் பாடிய பாட்டு!

வள்ளியாத்தாளுக்கு மற்றொரு குறை இருந்தது அது தன் பெயரைப் பற்றியது. முருகனின் திருத்தேவியாராகிய வள்ளியின் பெயரைப் பெற்றோர் வைத்து விட்டார்களே என்று வருந்தினர் மிகச் சாதுர்யமாகத் தன்பெயரை ஏடுகளில் "கொம்பொடிந்த வெள்ளியாத்தாள்" என்று குறித்தார். வெள்ளியாத்தாளின் முதல் எழுத்தில் உள்ள கொம்பை ஒடியுங்கள். அங்கு "வள்ளியாத்தாள்" என்ற பெயரே எஞ்சி நிற்கும்!

## வஞ்சியாத்தாள் வாழ்வு நெறி

புலவர்கள் போற்றிப்பாடும் மாதர்குல மணிவிளக்காகத் திகழ்ந்தவர் நஞ்சையன் சர்க்கரையாரின் வாழ்க்கைத் துணைவியார் வஞ்சியாத்தாள். தெற்குச் சீமைக்காரத் திருடர்கள் போன்றோர் மக்களைத் துன்புறுத்தியதால் இரவில்

137

குதிரையேறி நாடு காக்கும் பணியை நஞ்சையன் சர்க்கரை செய்தார். அதனால் பகலெல்லாம் அரண்மனையில் அவர் தூங்குவாராம். "பண்ணையம்" பார்ப்பது மனைவி வஞ்சியாத்தாள் வேலையாயிற்று.

"பட்டப் பகல்எல்லாம் தூங்குவாராம் - அவர்
பத்தினி பண்ணையம் பார்ப்பாராம்"

என்கின்றார் மடவளாகம் சிவராம தேசிகர் என்னும் புலவர்.

வண்டிகள் பல இருந்தாலும் நல்ல குதிரையைத் தேர்ந்தெடுத்து அதில் பயணம் செய்து பண்ணையம் பார்ப்பது வஞ்சியாத்தாள் வழக்கமாம். நாள்தோறும் காலையில் 1 மிடாக் கஞ்சி காய்ச்சி ஏழைகளுக்குக் கொடுப்பதை வஞ்சியாத்தாள் வழக்கமாகக் கொண்டு விளங்கினார். அரண்மனைக்கு உட்பட்ட கிராமங்களில் தண்ணீர்ப் பந்தல்கள் வைத்து அங்கு உப்பு ஊறுகாய் நீராகாரம் இவைகள் வழங்க வஞ்சியாத்தாள் ஏற்பாடு செய்தார். அதனால் எங்கு பஞ்சம் வந்தாலும் பழையகோட்டை அரண்மனை ஆட்சிக்குள்ள பகுதியில் குடிகள் பஞ்சமின்றி வாழும் என்று கூறுகிறது "உத்தமக் காமிண்டன் கும்மிப்பாட்டு".

"நஞ்சையன் பத்தினி வஞ்சியாத்தா அவர்
நல்ல குதிரைச் சவாரி செய்வார்
கஞ்சி ஒரு மிடா நித்தமும் காய்ச்சியே
காலையில் ஏழைகட்கு ஊற்றுவாராம்"

"உத்தமக் காமிண்டன் தண்ணீர்ப் பந்தல் அதில்
ஊறுகாய் மோருஞ்சோ றூற்றுவதால்
எத்தனை பஞ்சம் வந்தாலும் இவ்வம்மிசம்
ஏறும் என்று கும்மி பாடுங்கடி"

என்பது கும்மிப்பாடல்களில் இரண்டு பாடல்களாகும்.

## பத்தினி முத்தாத்தாள் :

பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் கந்தன் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார். மற்ற பட்டக்காரர்கள் போலவே கால்நடைகளின் காவலராக விளங்கினார். ஆடு மாடு குதிரைகட்கு மருத்துவம் பார்க்க மருத்துவர்கள் சிலரை அரண்மனையில் தங்க வைத்தார். கால்நடைகட்கு நோய்நொடி இல்லாத காலத்திலும் அரண்மனை உபசரிப்பில் ஈர்க்கப்பட்டுப் பலர் பல நாட்கள் அங்கு

தங்கியிருந்தனர். அவர்களில் ஒருவர் "குதிரை வைத்தியம் பழனியப்ப வாத்தியார்", பலர் பல நாட்கள் வீணாகத் தங்கியுள்ளார்களே என்று எண்ணாமல் முதல் நாள் போலவே நாள்தோறும் மூன்று வேளையும் அவர்களை உபசரிக்க ஏற்பாடு செய்தார் முத்தாத்தாள். இதை ஒரு கவிஞர் பாடலாகவே எழுதிவிட்டார்.

"எத்தனை நாள் இருந்தாலும் எள்ளளவும் மனம் குன்றாது
 இனிமையாகச்
சுத்தமுள கம்பமுதும் பசுந்தயிரும் காய்கறிகள்
 ருசியாய்த் தந்து
உத்தமக்கா மிண்டரெனும் கந்தன்சர்க் கரையார்க்கு
 உவந்துவந்த
பத்தினிமுத் தாத்தாளின் பக்தியைநான் என்னென்று
 பகருவேனே"

என்பது அவர் பாடலாகும்.

முத்தாத்தாளின் கணவர் கந்தன் சர்க்கரையார்க்கு ஒரு விருப்பம் ஏற்பட்டது. அது இரண்டு கையிலும் வாள்பிடித்துச் சண்டை செய்யும் பயிற்சியைப் பெற வேண்டும் என்பது. அப்பயிற்சி கொடுப்பதற்கு யாரேனும் இருக்கிறார்களா என்று தேடச் செய்தார். ராயவேலூரில் காதர் பாட்சா என்பவர் இருப்பதாகக் கேள்விப்பட்டார். அவரை வரவழைத்துப் பயிற்சி பெற்றார். 48 நாட்கள் பயிற்சி நடந்தது. கந்தன் சர்க்கரையார் இரண்டு கைகளிலும் வாள் எடுத்துப் போரிடும் வல்லமையைப் பெற்றார். பயிற்சி கொடுத்த ராய வேலூர் காதர் பாட்சாவுக்குப் பெரும்பொருள் கொடுத்ததுடன் ஒரு குதிரையும் பரிசாகத் தந்து மகிழ்ந்தார்.

"அட்டான நாடுபுகழ் கந்தன்சர்க் கரைஎன்னும்
 அதிபருக்கு
எட்டாறு நாளினிலே இரண்டுகை களிலும் கத்தி
 எடுத்து வீச
பட்டாணி முகமதிய ராயவேலூர் காதர்பாட்சா
 என்போன்
நெட்டாகப் பழக்கஒரு குதிரைஒன்று இனாம்கொடுக்க
 நிலைபெற்றானே"

என்பது அதைக் குறிக்கும் பாடலாகும்.



## சிவகாமியின் சிவபக்தி

அழகன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் துணைவியார் சிவகாமி என்பவர் கோவிந்தசாமிக் கவுண்டர் என்பாரின் திருமகளார். சிவபக்தியிற் சிறந்தவர். இவர் காலையில் கணபதியை வணங்காமல் எதுவும் அருந்தாத வழக்கம் உடையவர்.

ஒரு சிவராத்திரியன்று விரதமிருந்து காரையூர் செயங்கொண்டீசர் கோயிலுக்குச் சென்று வழிபாட்டை நடத்தினார். "சோடசோபசாரம்" என்னும் பதினாறு வகை வழிபாடியற்றி அபிஷேகம் செய்து நைவேத்யம் ஆனபின் அம்மன் சன்னதியில் நல்லமங்கை அம்மைக்குத் தீபாராதனை காட்டப்பட்டது. தரிசனம் செய்யும் வேளையில் அம்மனின் இடது கை ஒடிந்திருப்பதைப் பார்த்துத் துணுக்குற்றார். பயந்து நடுங்கி மூர்ச்சையானார். பின் தெளிந்து எழுந்து ஒரு வாறு தேறி "அம்மையே உன்னை அணுகுவார் இல்லையா? புதிய சிலை பிரதிட்டை செய்ய அரண்மனை முன் வராதது ஏன்?" என்று கேட்டு நடு இரவில் எவர் துணையும் இன்றி அரண்மனைக்கு வந்து தூங்கிய அழகன்சர்க்கரையாரை எழுப்பினார். கணவனிடம் விபரம் கூறி எல்லாப் பணிகளையும் நிறுத்தி முதல் வேலையாக செயங்கொண்டீசர் கோயிலில் நல்ல மங்கையம்மனுக்குப் புதுச்சிலை செய்து பிரதிட்டை செய்யுங்கள் என்று வற்புறுத்திச் சிலை செய்து பிரதிட்டை செய்தார் சிவகாமி அம்மையார்!

## யாரும் அளிக்கா அருங்கொடை

திருமலை நாயக்கர் தளபதி தளவாய் இராமப்பையன் சில காலம் கொங்கு நாட்டில் அதிகாரம் செய்தான். பாளையக்காரர்களிடம் கட்டாயப்படுத்தி வரிவசூல் செய்தான். பருவமழை தப்பிய காலங்களிலும் வரியை அவன் குறைக்கவில்லை. உரிய வரியை உரிய காலத்தில் செலுத்தாத பாளையக்காரர் பலரைச் சங்ககிரிச் சிறையில் அடைத்தான் இராமப்பையன். அவ்வாறு சிறையிருந்தவர்களுள் பழையகோட்டை சம்பந்தச் சர்க்கரை என்பவரும் ஒருவர். சம்பந்தச் சர்க்கரையின் குடும்பமும் சங்ககிரிச் சிறையில் வாடியது.

வெற்றிவேல் புலவர் என்பவர் தன் வறுமையைப் போக்கிக் கொள்ளப் பட்டக்காரரைப் பாடிப் பரிசில் பெற்று நல்வாழ்வடையப் பழையகோட்டை வந்தார். சம்பந்தச் சர்க்கரையார் சங்ககிரிச் சிறையில் இருப்பதை அறிந்தார். எப்படியும் பட்டக்காரரைச் சந்தித்து விடுவது என்று எண்ணிச் சங்ககிரி சென்ற அவர் முயன்று சம்பந்தச் சர்க்கரையைப் பார்த்து விட்டார். தான் வந்த நோக்கத்தைப் பாடலாகப்பாடிப் பரிசில் வேண்டினார்.

சம்பந்தச் சர்க்கரையாரிடம் பொருள் ஏதும் இல்லை. மனைவியாரிடம் வேறு நகைகளும் இல்லை. எல்லாம் வரிப்பாக்கிக்காகப் போய் விட்டது. மனைவி கழுத்தில் தாலி (மாங்கல்யம்) மட்டுமே இருந்தது. புலவர் முகம் நோக்கிய சம்பந்தச்சர்க்கரையார் தன் மனைவியின் திருக்கழுத்தை நோக்கினார். கணவர் குறிப்பை அறிந்த துணைவியார் தன் கழுத்தில் இருந்த தாலியைக் கழற்றிப் புலவரிடம் அளித்தார். தயங்கிய புலவரை தாலியைப் பெற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்தினார். புலவர் வேறு வழியின்றித் தாலியைப் பெற்றுக் கொண்டார். இதனை

"கொங்கினில் ராமப் பய்யன் அதிகாரக் குரூரத்தினால்
கங்குல் ராப்பகல் சர்வசங் காரம்செய் காலத்திலே
சிங்கநல் சம்பந்தச் சர்க்கரை தேவி தன்திருக்கழுத்தில்
மங்கலி யந்தனைத் தந்தாள் தமிழ்க்கவி வாணருக்கே"

என்ற பாடல் விளக்குகிறது. இந்நிகழ்ச்சியைக் கொங்குமண்டல சதகமும் புகழ்கிறது. இது எவரும் எங்கும் அளிக்காத அரிய கொடை அல்லவா!

புலவரைச் சுமந்த புகழ்

பல புலவர்கள் பல சமயங்களில் பழைய கோட்டைப் பட்டக்காரர்களின் பொறுமையைச் சோதித்தனர். பரிசில் பெற வந்த புலவர் ஒருவர் பட்டக்காரருடன் அமர்ந்து உணவருந்தினார். பட்டக்காரரின் தாயார் புலவரின் பெருமை கருதி அவரைச் சிறப்பிக்க அவரே உணவு பரிமாறினார். அப்போது புலவர் திடீரென்று பரிமாற வந்த பட்டக்காரரின் தாய் முதுகில் தாவி ஏறினார். தாயார் அந்நிலை கண்டு மகன் முகம் நோக்கினார். பட்டக்காரர் புலவர் செயல் கண்டு துணுக்குற்றாலும் கோபப்படவில்லை. "அம்மா! என்னை அல்லும் பகலும் பத்து மாதம் சுமந்தீர்களே. தமிழ்பாடும் தனிப்பெரும் புலவரைப் பத்து நொடி சுமக்கக் கூடாதா?" என்றார். புலவர் தன் செயலுக்காக வருந்தினார். இதனைக் கொங்குமண்டல சதகம்

"திருத்து புகழ்பெறும் ஆனூரில் சர்க்கரை செந்தமிழோன்
விருத்த முடன்அன்னை மேலேறத் தாய்வெகு ளாமல்எனைப்
பொருத்த முடன்பத்து மாதம் சுமந்து பொறையுயிர்த்தாய்
வருத்தம் இதில்என்ன என்றான் அவன்கொங்கு மண்டலமே"

என்று புகழ்கிறது.



வான்புகழ் வள்ளியாத்தாள்

25ஆம் பட்டக்காரர் நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் மனைவியார் வள்ளியாத்தாள் காங்கயம் பல்லவராயர் மகள். கனமான வண்டி இருசை தலைமுடியால் கட்டி பட்டக்காரர் எளிமையாக் தூக்குவார். பல்லிலே ஒரு மணு எடையுள்ள கல்லைத் தூக்குவார். மிகவும் பலசாலியான இவர் 14.12.1895ல் காலமானார். இவர் மனைவி வள்ளியாத்தாள் சிலம்பகவுண்டன் வலசு சுந்தரக் கவுண்டர், குட்டப்பாளையம் சேனாபதிக் கவுண்டர் ஆகியோர் துணையுடன் சிவன்மலைக் கும்பாபிஷேக விழாவைச் சிறப்பாக நடத்தினார்.

பட்டக்காரர் இறக்கும்போது அவர் மைந்தர் நல்லதம்பிச் சர்க்கரைக்கு (26ஆம் பட்டக்காரர்) வயது ஒன்பது. அவருக்கு ஆங்கிலக்கல்வியை வெங்கரை வாசுதேவராவ் அவர்களைக் கொண்டு கற்க ஏற்பாடு செய்தார். கணவர் மறைவிற்குப் பின் குட்டப்பாளையம் சேனாபதிக் கவுண்டர், சம்பிரதி இராமையா பிள்ளை ஆகியோர் துணையுடன் அரண்மனை நிர்வாகத்தைக் கவனித்தார்.

1895இல் பட்டக்காரர் இறந்தபோது மகன் நல்லதம்பிச் சர்க்கரை 9 வயது மைனர் ஆனதால் அன்றைய எஸ்டேட் சட்டப்படி அவர் மேஜர் (18 வயது) ஆகும் வரை பழைய கோட்டை நிர்வாகத்தை கோவை மாவட்டக் கலெக்டர் ஏற்றுக் கொள்வார் என்றும், அரசாங்க மேனேஜர் ஒருவர் பழைய கோட்டையில் தங்கி அரண்மனை நிர்வாகத்தைக் கவனிப்பார் என்றும் முடிவு செய்து கலெக்டர் ஆணை அனுப்பினார். நல்லதம்பி அரசாங்கப் பொறுப்பில் சென்னையில் படிக்கவேண்டும் எனவும் கலெக்டர் எழுதியிருந்தார்.

வள்ளியாத்தாள் அவர்கள் தகுந்த ஒரு வக்கீலை வைத்து அவரை கோவை கலெக்டரிடம் அனுப்பி உத்தரவை மாற்றும்படி வாதாடினார். கோவை மாவட்டக் கலெக்டர் பிரச்சினையைத் தீர்க்க நேரில் தானே பழைய கோட்டை வந்தார்.

நல்லதம்பிச் சர்க்கரைக்கு 18 வயதாக இருந்தால் நாங்கள் தலையிட மாட்டோம். அவர் மைனர் என்பதால் சட்டத்தின்படி செய்கிறோம் என்றார். தாயார் "ஒரே மகன் சென்னை சென்று விட்டால் நான் மிகப் பாதிக்கப்படுவேன். எனக்கு விவசாய வேலைகள் அனைத்தும் தெரியும். அரசின் உதவி எதுவும் எங்களுக்குத் தேவையில்லை. வேண்டவும் வேண்டாம்" என்று கூறினார். இதை எழுத்து மூலம் எழுதிக் கையொப்பமிட்டுக் கலெக்டர் கொடுக்கச் சொல்ல அப்படியே செய்தார். கலெக்டரும் ஒப்புக் கொண்டார். ஆனால் "நல்லதம்பிச் சர்க்கரை ஆங்கிலத் தேர்ச்சி பெற வைத்தியலிங்கம் பிள்ளையை ஆசிரியராக நியமிக்கிறேன். அவருக்கு

மாதம் நூறு ரூபாய் சம்பளம் கொடுங்கள்"என்றார். காங்கயத்தில் ஒரு தனி வீடு எல்லா வசதியுடனும் அமைத்து நல்லதம்பிச் சர்க்கரை கல்வி கற்றார்.

19 வயதானதும் விசுவாவசு வருடம் ஆனி மாதம் சிலம்பகவுண்டன் வலசு மாமன் வெங்கட்டரமணசாமிக் கவுண்டர் மகள் அம்மணியம்மையைத் திருமணம் செய்து கொண்டு அடுத்த நாள் பட்டாபிஷேகம் செய்து கொண்டு நல்லதம்பிச் சர்க்கரை 26ஆவது பட்டக்காரர் ஆனார்.

அரசுடைமை ஆகாமல் பழையகோட்டை அரண்மனையைப் பாதுகாத்த வள்ளியாத்தாள் வான்புகழ் கொண்டவர் என்பதில் ஐயமில்லை.

இவர் கொடைத் தன்மையைக் கேள்வியுற்ற மடவளாகம் இலட்சுமணபாரதி, சிவபெருமானின் திருக்கலியாண உற்சவத்திற்கு வள்ளியாத்தாவிடம் உதவிகள் வேண்டிப் பெற்றார்.

வள்ளியாத்தா அவர்கட்கு மடவளாகம் லட்சுமண பாரதி எழுதிய சீட்டுக்கவி.

திருமருவு பழனிமலை முருகேசர் அரவிந்த
செங்கமல பாத்தியானம்
திரிகின்ற தண்டுமிண் டுகள்கொண்ட கவிமலை
செகுத்திடச் செய்வச்சிரஞ்
செய்யூர் காலமழை என்னவே மதுரித
செழுந்தமிழ் கொழிக்குமேகம்
தென்பரவு மங்கைபுர லட்சுமண பாரதி
தெளிந்தெழுதி விட்ட நிருபம்

திருவுலவு காரையூர் நல்லசே னாதிபதிச்
சர்க்கரைமன் றாடிராஜன்
தனதுமனை யாளினிய கற்பினில் அருந்ததி
சமானநற் குணபூஷணி
சந்ததி நிரம்பிவளர் சிவமலைப் பல்லவன்
தந்தசீ மந்தபுத்ரி
தருமமிகு பயிறகுல வள்ளிநா யகிஎனும்
தாய்மனம் மகிழ்ந்து காண்க



அருள்பரவு சிவனுமைக் குத்திருக் கலியாணம்
ஆனசுப தினம் நாளையே
ஆகையால் மங்கலிய விரதபூ சனை செய்ய
ஆருமா தரவறிகிலேன்
ஐந்துவள் ளப்பச்சை அரிசிபா சிப்பயறு
அதற்குள்ள மேல்முஸ் திதி
ஆவிநெய் வெல்லம் உளுந்து பால் தயிர்
வெண்ணெய் தயிர் எண்ணுகறி காய்

மருவுலவு சந்தனம் குங்குமம் புனுகுஜவ்
வாதுபரி மளமும் உனது
மருமகட் கோர்புடவை பாக்குவெற் றிலைநல்ல
வாழையிலை யிவையாவுமே
வாணருக் காரனுப் பினதெனக் கேட்பவர்கள்
மனதுமேன் மேலுமெச்ச
மன்னர்புகழ் சர்க்கரைத் துரையரசி தந்ததென
வரஅனுப் பிடவேண்டுமே!

என்பதாகும்.

## புகழ்பாடிய புலவர்கள்

வேந்தர்களும், வேளிர்களும் கொடுத்த கொடையால்தான் தமிழ் வளர்ந்து வாழ்ந்தது. தமிழ்ச் செல்வங்களாகிய பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும் பெரும்பாலும் கொடை கொடுத்த கொடைகளேயாகும்.

அதுபோல் பழைய கோட்டை மரபினர் கொடுத்த கொடையால் சுமார் 45 புலவர் பாடிய இருநூற்றைம்பதுக்கு மேற்பட்ட அழகிய தமிழ்ப் பாடல்கள் கிடைத்துள்ளன. இந்திய வரலாற்றில் வேறு எந்த அரச மரபினர்கட்கும் சிற்றரசர் கட்கும் இவ்வளவு பெரும் தொகுதியாக வரலாற்றைக் கூறும் பாடல்கள் கிடைக்கவில்லை. ஏராளமான வரலாற்றுக் குறிப்புக்கள் அவற்றில் உள்ளன. பெரும்பாலான பாடல்கள் நேரடியாகக் கண்ட புலவர்கள் பாடியவை. ஆதலால் அவைகள் வரலாற்று ஆவணங்கள் போன்றவை.

ஆஸ்தான வித்துவான்கள் போல் பழையகோட்டை அரண்மனையில் நிரந்தரமான புலவர்கள் இருந்தனர். அவர்கள் சமூக வித்துவான்கள் எனப்பட்டனர். அவர்கள் மட்டுமின்றி பழையகோட்டை அரண்மனைக் கணக்கர்களாக பன்னெடுங்காலம் பரம்பரை பரம்பரையாக வீற்றிருந்த "சம்பிரதிகள்" பெரும்பாலோர் நல்ல புலவர்களாக விளங்கினர்.

பட்டக்காரர்களின் நண்பர்கள், உபதேசம் செய்த குருக்கள், கோயில் அர்ச்சகர்கள், கோயில் ஊழியக்காரர்கள், நட்டுவன், கோயில் திருப்பணி செய்யும் சிற்பி போன்றோர் அழகிய கருத்துச் செறிவுள்ள பாடல்கள் பல பாடியுள்ளனர். கொங்கு நாட்டுப் புலவர்கள் பலர் அரண்மனை வந்து பாடிப் பரிசில் பெற்றுள்ளனர். தமிழகத்தின் வேறு பகுதிகளிலிருந்தும் புலவர்கள் பழுமரம் நாடும் பறவைபோல் பழையகோட்டை வந்துள்ளனர்.

புலவர்களேயன்றிப் பழைய கோட்டை மரபில் சோமன் சர்க்கரையார், அழகன் சர்க்கரையார், பெரிய சர்க்கரையார், கொற்றவேல் சர்க்கரையார் ஆகியோரும், பெரிய சர்க்கரை மனைவியார் வள்ளியாத்தாளும் பாடல்கள் பாடும் ஆற்றல் உடையவர்களாக இருந்துள்ளனர்.



பட்டக்காரர்களேயல்லாமல் அவரது இளவல்களும் புலவர்பாடும் புகழுடையோராக விளங்கினர். குமாரபாளையம் கண்ணுச்சாமி என்ற குமாரத்தினக் கவுண்டர், கனகசபாபதிக் கவுண்டர், விசுவகவுண்டர், பாலவடிவேல் கவுண்டர், கல்லங்காட்டுச் சின்னசாமிக் கவுண்டர், குட்டப்பாளையம் அர்ஜுன கவுண்டர் ஆகியோர் அவருள் சிலர்.

கொற்றவேல் சர்க்கரையார் பாடிய நல்லமங்கையம்மன் சதகத்தில் கிடைத்திருக்கும் முதல் பாடலின் முதல் வரியே

"ஆசுகவி வகைகளது பாடிவரு வோர் மேல்
அன்பிலார் கீர்த்தி குறையும்"

என்பதாகும். பழையகோட்டை மரபினர் புலவர்களையும், கல்வியையும் கண்போல் காத்து வளர்த்துள்ளனர்.

"ஏட்டுடன் எழுத்தாணி கைவசம் இலாதபேர்க்கு
எழுதுகிற திறமை குறையும்"

என்பது நல்ல மங்கையம்மன் சதக வரிகள்.

பழைய கோட்டை மரபினர் "புலிப்பாணி முனிவர்" அருளிய நூல்களைப் படித்ததாகவும், "பஞ்சபட்சி சரநூல்" ஆராய்ச்சி செய்ததாகவும் புலவர்கள் கூறியுள்ளனர்.

பழையகோட்டை மரபினர் கல்வியில் எவ்வளவு ஆர்வம் காட்டினர் என்பதற்கு ஒரு நிகழ்ச்சியே தக்க சான்றாகும். பயிரன் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் 16ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் வாழ்ந்தவர். அவருடைய உடன்பிறந்த தம்பி கண்ணுச்சாமி என்கின்ற குமாரரத்தினக் கவுண்டர். அவர் பழைய கோட்டையில் "செந்தமிழ்க் கல்வி" கற்பிக்க வேண்டும் என்று விரும்பினார். கொங்கு நாடு மட்டும் அல்ல, தமிழ்நாடு முழுவதும் சரியான ஆசிரியரைத் தேடினார். சோழநாட்டுத் திருவாடுதுறை மடத்துக்குச் சென்றார். முத்துப் பிள்ளை என்பவருக்கு ஐம்பது பொன் கொடுத்து குடும்பத்துடன் அழைத்து வந்தார். அந்த மடத்தின் கார்பார் வேண்டிக் கொள்ள ஆனூரின் வடபுறம் திருவாடுதுறை மடத்துக்கு 7 வள்ள பூமி (28 ஏக்கர்) கொடையாக அளித்தார். நத்தக்காரையூர் வந்து எட்டு நாளில் 200

22. எல்லப்பன் சமூக வித்துவான்
23. பூந்துறை பாலதண்டாயுதபாணிக் கவிராயர்
24. கணக்கு சடைப்பெருமாள்
25. உலகுடைபாளையம் நல். ராசகோபால் பிள்ளை
26. சமூக வித்துவான் அருணாசலக்கவிராயர், வெள்ளகோயில்
27. அருணாசல வாத்தியார்
28. உலகுடைபாளையம் ஆறுமுகக்கவிராயர்
29. மாம்பழக் கவிராயர்
30. சம்பிரதி சடையபிள்ளை
31. பாண்டமங்கலம் அம்பலவாணக்கவி
32. குட்டப்பாளையம் பழனிவேல் வாத்தியார்
33. குட்டப்பாளையம் சுப்பராய வாத்தியார்
34. வீரபத்திரக் கவிராயர்
35. வீராச்சிமங்கலம் கந்தசாமிக் கவிராயர்
36. தென்னங்கரைப்பாளையம் கே.எஸ். பழனிவேல் உபாத்தியாயர்
37. காடையூர்க் கவுண்டம்பாளையம் ப.காங்கயப் புலவர்
38. சிலம்பகவுண்டன் வலசு கே.எஸ். வேலுமணி உபாத்தியாயர்
39. கணியூர் ஜனாப் கா. அப்துல் சுகூர்
40. திருச்செங்கோடு சதாசிவக் குருக்கள்
41. மடவளாகம் லட்சுமண பாரதி
42. சிவமலைப் புலவர்
43. புலவர் அ.மு. குழந்தை
44. இரட்டைப் புலவர்கள்
45. காங்கயம் அட்டாவதானி செசா சுலக்கவிராயர்
46. அவ்வையார்
47. பூந்துறை கொள்ளபட்டன்

இன்னும் பலர் பாடியிருக்கக் கூடும். அப்பாடல்கள் கிடைக்கவில்லை.

கொங்குமண்டல சதகப் பாடல்களில் புலவர் பெருமக்களிடம் பழையகோட்டை மரபினர் எவ்வளவு அன்புடன் நடந்து கொண்டனர் என்பது வெளிப்படுகிறது. புலவர்கள் செய்த சோதனைகளுக்கெல்லாம் பொறுமை காத்திருந்தனர் என்பது புலப்படுகிறது.



எல்லப்பன் சமூக வித்துவான்

தொண்டைமண்டலத்துச் செங்குன்றூர் எல்லப்பன் என்ற வள்ளலிடம் கொங்கு நாட்டுப் புலவர் ஒருவர் பாடிப் பரிசில் பெறச் சென்றார். வள்ளல் பரிசளிக்கும்போது கொங்குப் புலவர் தன் இடதுகையை நீட்டினார். வள்ளல் காரணம் கேட்க காரையூர் சர்க்கரை வள்ளலிடம் நீட்டிய வலது கையை வேறொருவரிடம் நீட்ட மாட்டோம் என்றார். எல்லப்பன் மகிழ்ந்து எங்கள் புலவர்கள் காரையூர்ச் சர்க்கரையின் வள்ளல் தன்மை தெரிந்து வரும்வரை நீங்கள் இங்கே இருங்கள் என்றார்.

எல்லப்பன் அனுப்பிய புலவர்கள் ஆனூர் வந்து அழகிய பூந்தோட்டத்தில் உள்ள செடிகொடிகளையெல்லாம் வெட்டியெறிந்தனர். ஆட்கள் மூலம் அவர்களை வரவழைத்த சர்க்கரை அவர்கள் புலவர்கள் என்பதை அறிந்து "புலவர்களே! செடிகொடிகள் தேவையில்லையென்றால் சொன்னால் என் ஆட்களைவிட்டு வெட்டியிருப்பேனே. ஏடு பிடிக்கும் கை கோடாரி, அரிவாள் பிடித்து வருந்தலாமா? என்று கூறி கைகளுக்குத் தைலம் தடவி வெந்நீராட்டுவித்தார்.

சர்க்கரையார் புலவர்களுடன் உண்ணும்போது ஒரு புலவர், பரிமாறிய அன்னை முதுகில் ஏறினார். திடுக்கிட்ட அன்னை சர்க்கரையைப் பார்த்தார். சர்க்கரை "அம்மா என்னை முன்னூறு நாள் சுமந்தீர்களே. இப்புலவரை சிறிது நேரம் சுமக்கலாகாதா" என்றார். புலவர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு செங்குன்றூரார் சென்று எல்லப்பனிடம் விபரம் கூறி மகிழ்ந்து ஒரு பாடலைக் கூறினார். எல்லப்பன் கொங்கு நாட்டுப் புலவரை பரிசளித்து அனுப்பி வைத்தார்.

எல்லப்பன் புலவர் பாடிய பாடல்

"செங்குன்றை எல்லாநின் செங்கைக் கொடையதனுக்கு
எங்கெங்கும் தேடி இணை காணோம் - கொங்கதனில்
சர்க்கரையைப் பாடலாம் தண்டமிழ்க்கு ஒன்று ஈயாத
எக்கரையாம் பாடோம் இனி"

என்பதாகும். இதனை நல்லதம்பிச் சர்க்கரை காதல்

"அன்னை வெரிந் மேற்கொளச்சே யானனத்தை நோக்குதலும்
என்னை ஈரைந்து திங்கள் அன்பாய்ச் சுமந்தீரே
இவரை ஒரு நிமிட மேசுமப்பீர்"

என்று கூறுகிறது. கொங்கு மண்டல சதகம்,

"திருத்து புகழ்பெறும் ஆனூரில் சர்க்கரை செந்தமிழோன்
விருத்த முடன் அன்னை மேலேறத் தாய்வெகு ளாமல்எனை
பொருத்தமுடன் பத்து மாதம் சுமந்து பொறையுயிர்த்தாய்
வருத்தம் இதில் என்ன என்றான் அவன் கொங்கு மண்டலமே "

எனக் கூறுகிறது.

<u>காய்ச்சிய நெய்யில் கையிடுதல்</u>

திருச்செங்கோட்டில் கொங்கவண்ணார் குலம் சார்ந்த வீரபத்திரன் என்பார் பெரும்புலவராகத் திகழ்ந்தார். ஒருநாள் நல்லதம்பிச் சர்க்கரையாரைக் கண்டு பாட ஆனூர் வந்தார். பேசிக் கொண்டிருந்த சர்க்கரையார் அரண்மனை உள் சென்றார். வெளியில் வந்த அரண்மனை ஆள் ஒருவன் புலவரிடம் "ஐயா உணவுண்ணச் சற்று நேரம் ஆகும்" என்றான். தனக்கு முன் சர்க்கரையார் சாப்பிடுகிறார் என்று கருதி மரியாதை இல்லையென்று புலவர் ஊருக்குப் புறப்பட்டுவிட்டார். அவரை உண்ண அழைக்க வந்த சர்க்கரையார் விபரம் அறிந்து புலவரைப் பின் தொடர்ந்து சென்று "யான் உங்களை இகழவில்லை"என்று காய்ச்சிய நெய்யில் கையைவிட்டுச் சத்தியம் செய்தார். பின் சென்று உணவுண்டபின் "என்னை இகழவில்லை எனில் என் எச்சில் வாயைக் கழுவுவீரா" என்று புலவர் கேட்க சர்க்கரையார் அப்படியே செய்தார். மகிழ்ந்த புலவர் நல்லதம்பிச் சர்க்கரையார் மீது காதல் பிரபந்தம் பாடினார்.

"காரைஆ னூர்மேவுகாரான நல்லதம்பி
சீரைவிரித் துக்காதல் செப்பினான் - பேருலகெண்
கோதைநகர் வண்ணார் குலவீர பத்திரர்எனும்
மூதறிஞன் அன்பு முதிர்ந்து"

என்பது தனிப்பாடல்.

மேற்கண்ட நிகழ்ச்சியை
"மகிழ்ந்துகா ரைப்பதியில் வாழ்சர்க் கரைதான்
புகழ்ந்து திரிபுல வோரை - இகழ்ந்து நான்
வையவில்லை என்றுசொல்லி மண்டலம்எலாம் துதிக்க
நெய்யிலே கையைவிட்டான் நேர்ந்து"

என ஒரு தனிப்பாடல் விளக்குகிறது.



வீரபத்திரக் கவிராயரே தம் காதல் இலக்கியத்தில்
"தூசர்குல வாணனுக்கோர் சோர்வுரைக்க வில்லைஎன
நேசமுட னேகாய்ந்த நெய்யதனில் கையை விட்டோன்"

என்று கூறுகிறார்.

சேது சமஸ்தான அமுதகவிராயர் வள்ளல்கள் அரிய செய்கைகளைத் தொகுத்துக் கூறும்போது
"சர்க்கரையும் எச்சில்வாய் கழுவினான்"
என்று கூறுகிறார்.

"முகம் சோர்ந்து அகன்றிடும் ஏகாலிப் பாவலன் முன்னர்நின்றே
இகழ்ந்தேன் இலைஐயா என்று சுடுநெய் யினிற்கைவிட்டு
உகந்தே உணும்எச்சில் வாயைக் கழுவி உவப்பியற்றி
மகிழ்ந்தே புகழ்பெறு சர்க்கரை யும்கொங்கு மண்டலமே"
என்பது கொங்குமண்டல சதகப்பாடல்.

<u>சவுக்கடி பெற்றது</u>

தென்னாட்டுப் புலவர் ஒருவர் சர்க்கரையைப் பார்க்க வந்து அளவளாவிக் கொண்டிந்தபோது செம்பொன் வைத்த தட்டத்தைப் புலவரிடம் நீட்டினார். புலவர் பக்கத்திலிருந்து குதிரைச் சவுக்கை எடுத்து சர்க்கரையை அடித்து "நான் பொன் பெற மட்டுமா வந்தேன். என் கவிதையைக் கேட்கவில்லையே" என்றார். அவசரப் பயணம் காரணமாக இவ்வாறு செய்ததாகவும், இங்கு தங்கியிருங்கள், நான் போய்வந்து கவிதைகளைக் கேட்பேன் என்றார். புலவரும் சம்மதித்துத் தங்கினார்.

இதனை ஒரு தனிப்பாடல்
"கண்டால் புலவரை மேனாம்பு பேசும் கசடரிட
மிண்டாநல் உத்தமக் காமிண்ட னேவித்து வான்களுக்குத்
தொண்டா புலவர் சவுக்கடி ஏற்ற சுமுகாகொடைத்
தண்டா மரைக்கையைத் தண்டா நலதம்பிச் சர்க்கரையே"
என்று கூறுகிறது.

நல்லதம்பிச் சர்க்கரை காதல் இந்நிகழ்ச்சியை
"கற்றாய்ந்த நாவலர்தன் கையில் சவுக்கடியும்
பெற்றான் சயத்தம்பம் பேருலகில் நாட்டுவித்தோன்"
என்று கூறுகிறது.

"மீறும் உலகிலெட் டுத்திக்கும் சொட்டையில் வெல்லவல்லோன்
கூறுந்தென் காரையில் சர்க்கரை வேந்தன் கொழுந்தமிழால்
பேறும் புகழும் பெறவேண்டி நாவலன் பெற்றகையால்
மாறும் சவுக்கடி பெற்றது வும்கொங்கு மண்டலமே"

என்பது கொங்குமண்டல சதகப் பாடல்.

<u>கடைத்தெருவில் விற்பேன்</u>

சர்க்கரை மரபில் ஒருவர் தலயாத்திரை சென்றிருந்தார். அங்கு அவரைச் சந்தித்த புலவர் ஒருவர் தான் பட்ட கடன்களுக்கு உதவ வேண்டினார். பதினைந்தாம் நாள் ஆனூர் வாருங்கள் உதவுவேன் என்றார். பதினைந்தாம் நாள் புலவர் சென்று பார்த்தபோது சர்க்கரையார் ஊர் வந்து சேரவில்லை. அவர் கரூரில் இருப்பதைக் கேள்விப்பட்ட புலவர் கரூர் சென்று "இதுதான் உமது நேர்மையோ, என் கடனாளிகளுக்குக் குறிப்பிட்ட நாள் பணம் தருவதாகக் கூறியிருந்தேன். வார்த்தை தவறிவிட்டது" என்று கூறினார். ஊர் வாருங்கள் தருகிறேன் என்ற சர்க்கரையாரை மடியைப் பிடித்து இழுத்து "உம்மைக் கடைத் தெருவில் விலை கூறி விற்பேன்" என்றார். புலவர் நிலை அறிந்து சர்க்கரையார் உதவி செய்தார்.

"மற்றோர் புலவன் மடிமேல்கை போட்டிழுத்து
விற்றால் அல்லாது என் வறுமைநோய் தீராதே
எங்கும் விலைகூற வேயிசைந்த புண்ணியவான்
எங்கும் கனகாபி ஷேகமாய்ப் பொழிந்தோன்"

என்பது காதல் இலக்கிய வரிகள்.

"கொடையில் பெரியோய் உடனே எனக்குக் கொடாமையினால்
கடையில் பெறநினை விற்றென் கலியைக் கழிப்பன்என
மடியைப் பிடித்திழுத் தேவிலை கூறிய வாணன்மிடி
வடியப் பொருள்தந்த காமிண்ட னும்கொங்கு மண்டலமே"

என்பது கொங்கு மண்டல சதகப் பாடலாகும்.



<u>பழைய கோட்டை ஆய்வாளர்கள்</u>

பழைய கோட்டைக்கு ஆய்வாளர்கள் பலர் வந்துள்ளனர். இங்கு வந்து பல செய்திகள் சேகரித்துள்ளனர்.

<u>நித்திலநாயன அய்யன்</u>

21ஆம் பட்டக்காரர் நல்ல சேனாபதி சர்க்கரை மன்றாடியார் காலத்தில் சர்வேயர் ஜெனரல் காலனல் மெக்கென்சியின் உதவியாளர் நித்தில நாயன அய்யன் 1807ஆம் ஆண்டு ஜூலை மாதம் பன்னிரண்டாம் தேதி பழைய கோட்டைக்கு வந்து பழைய கோட்டை பற்றிய பூர்வீகச் செய்திகளைக் கேட்டு எழுதியுள்ளார். அப்போது இங்கிருந்த வரலாறு கூறும் செப்பேட்டைப்படி எடுத்துக் கொண்டு சென்றுள்ளார். அதன் நகல், மூலப்படி ஆகியவை தமிழகஅரசின் கீழ்த்திசை சுவடி நூலகம் (சென்னை) வசம் உள்ளது. அதன் தலைப்பு "தாராபுரம் தாலூக்காவுக்குச் சேர்ந்த மவுசே பளையகோட்டையில் இருக்கும் நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் வசம் இருக்கப்பட்ட தாமிர சாசனத்துக்கு நகல்" என்பதாகும். இரண்டு பிரதிகள் உள்ளன. அவற்றின் எண்கள் D 2949 - 7; D 3370 ஆகும். அதை தி.நா. சுப்பிரமணியம் அவர்கள் படி எடுத்துத் தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் மூன்றாம் தொகுதி முதல் பாகத்தில் வெளியிட்டுள்ளனர்.

<u>உ.வே.சாமிநாதய்யர்</u>

தமிழ்த்தாத்தா என்று அழைக்கப்படும் உ.வே. சாமிநாதய்யர் பழையகோட்டை வந்து ஏடுகள் தேடியுள்ளார். நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் காதல் முதலிய ஓலைச் சுவடிகளை எடுத்துச் சென்றுள்ளார். பட்டக்காரர் காஞ்சிபுரம் கோயில் திருப்பணி செய்தமை பற்றிய ஓலைப் பட்டயங்களையும் கொண்டு சென்றுள்ளார். பசுமாடுகளின் பல்வேறு பெயர்களையும், கால்நடை பற்றிய குறிப்புக்களையும் தொகுத்துள்ளார். அவை திருவான்மியூரில் (சென்னை) உள்ள உ.வே.சாமிநாதய்யர் நூலகத்தில் உள்ளன.

கி.வா. ஜெகந்நாதய்யர்

உ.வே. சாமிநாதய்யரின் மாணாக்கர். அவருடன் பழைய கோட்டைக்கு வந்தார். பாண்டியனுக்காக ஒரு சர்க்கரை சோழனை வென்று "நல்ல சேனாபதி" என்று பாராட்டுப்பட்டம் பெற்ற நிகழ்ச்சியைக் கதையாக எழுதியுள்ளார்.

<u>தி.அ. முத்துசாமிக் கோனார்</u>

திருச்செங்கோட்டைச் சேர்ந்தவர். 26ஆம் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை அவர்களால் பல உதவிகள் பெற்றவர் 192 முதல் 1934 வரை பலமுறை பழைய கோட்டை வந்து அரண்மனை உதவியால் காங்கய நாட்டு ஓலைச்சுவடிகளை "வண்டி வண்டியாகக்" கொண்டு சென்றவர். இவருக்கு உதவி வேண்டிப் பட்டக்காரர் பல அறிக்கைகளை வெளியிட்டுள்ளார். நல்லதம்பிச் சர்க்கரை காதல், கொங்குமண்டல சதகம், திருச்செங்கோட்டுப் புராணம், சிவன்மலைக் குறவஞ்சி, போன்ற பல நூல்களைப் பட்டக்காரர் உதவியுடன் வெளியிட்டுள்ளார்.

புலவர் அ.மு. குழந்தை

அறச்சலூர் ஓலவலசைச் சேர்ந்தவர். சின்னமலை பற்றி 1954ல் முதலில் நூல் எழுதியவர். இளமையில் நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் தாலாட்டு என்ற நூலை எழுதினார். 26ஆம் பட்டக்காரர் பற்றிய கட்டுரை "வே: ளாளன்" இதழில் எழுதியுள்ளார்.

<u>புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர்:</u>

கொங்கு நாட்டுச் சாமிநாதய்யர் என்ற புகழ் பெற்றவர். பழைய கோட்டை பற்றிய பல ஓலைச்சுவடிகளைத் தொகுத்துள்ளார். பழைய கோட்டை சமூகப் பாடல், கலிவெண்பா, முடிசூட்டுப் பாடல், நவகம், ஊஞ்சல் பாடல்கள் தொகுத்துள்ளார். சுமார் 40 பாடல்களை கு. அருணாசலக்கவுண்டர் அவர்களிடம் 1964-ஆம் ஆண்டு அளித்துள்ளார்.

<u>புலவர் கு. அருணாசலக்கவுண்டர்:</u>

கள்ளிப்பட்டி க.கு. கோதண்டராமக் கவுண்டர் அவர்களுடன் பழைய கோட்டை வந்து "பழைய கோட்டைப் பட்டக்காரர் நாட்டுப் பாடலும் பூர்வ பட்டயமும்" என்ற தலைப்பில் நூல் வெளியிட ஏற்பாடு செய்தார். அவர் பெற்றவை பரம்பரை பரம்பரையாக அரண்மனைக் கருணீகர் சடையபிள்ளையும் அவர் முன்னோர்களும் தொகுத்த பாடல் களஞ்சியங்கள். அவற்றை 1965 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 1-ஆம் தேதி நூலாக வெளியிட்டார். புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் தொகுத்த சுமார் 40 முக்கியப் பாடல்களும் அந்நூலில் உள்ளன.



<u>புலவர் செ. இராசு:</u>

சுமார் 40 ஆண்டுகட்கு முன்பு அமைச்சர் ந. நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கட்கு ஈரோடு மக்கள்சார்பில் கலைமகள் கல்வி நிலையத்தில் ஒரு பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. கலைமகள் நிறுவுநர் எஸ். மீனாட்சிசுந்தர முதலியார் அவர்கள் வேண்டுகோள்படி வரவேற்புப் பாடல் எழுதி வாசித்தவர் புலவர் செ.இராசு. 5 பாடல்களிலும் 5 வரலாற்றுச் செய்திகள் இருந்தன. அப்போதே பட்டக்காரர் அவர்கள் வரவேற்புப் பாடலை மிகவும் பாராட்டினர். அவர்கள் அழைப்பின் பேரில் நத்தக்காரையூர், ஆனூர்க் கோயில் கல்வெட்டுக்களைப் படி எடுத்தார்.

கேரள "மன்னாடியார்கள்" பற்றிய ஆய்வைப் பட்டக்காரர் தொடங்கி வைத்துப் பாராட்டினார். அதன் தொடர்ச்சியாக வெளிவந்த "செந்தமிழ் வேளிர் எம்.ஜி.ஆர். ஒரு வரலாற்று ஆய்வு" என்ற நூலுக்கு அணிந்துரை எழுதினார்.

தமிழக அரசு சென்னையில் சிலை அமைத்த குழுவில் வரலாற்றுக் குழுத்தலைவராகப் பட்டக்காரர் விளங்கினார். அவர்கள் ஆணையின் வண்ணம் ஈரோடு டாக்டர். கொங்கு என்.கொளந்தசாமியுடன் இணைந்து கள ஆய்வு பல செய்து புதிய தகவல்களுடன் "வெள்ளையரை எதிர்த்து வீரப்போர் புரிந்த தீரன் சின்னமலை" பட்டக்காரர் அவர்கள் முன்னுரையுடன் வெளிவந்தது. பழையகோட்டைப் பட்டக்காரர் மரபில் வந்த தீரன் சின்னமலை அவர்களின் பிறந்த, மறைந்த தேதியைக் கண்டுபிடித்ததுடன், சின்னமலை பற்றிய ஓலைப் பட்டங்களையும், கல்வெட்டுக்களையும் கண்டுபிடித்தார். சிவன்மலை முன்னாள் அறங்காவலர் குழுத்தலைவர் 28-ஆம் பட்டக்காரர் N. ராஜ்குமார் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கத் தான் எழுதிய சிவன்மலை வரலாற்றில் பழையகோட்டைத் தொடர்பைப் பற்றி மிக விளக்கமாக எழுதியுள்ளார்.

<u>சதகப் பதிப்பு :</u>

தி.அ. முத்துசாமிக் கோனார் அவர்கள் கொங்கு மண்டல சதகம் பதிப்பிக்க நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் சுவடி தேடவும், ஆய்வு செய்யவும், அச்சிடவும் பேருதவி புரிந்தார். இதைக் கோனார் அவர்கள் தன் முன்னுரையில் குறிப்பிடுகிறார்.

"கொங்கு மண்டல சதகம்"

கொங்கு நாட்டு வரலாற்றுக்கு அடிப்படையான பற்பல ஆதாரங்களைக் கொடுக்கும் நூல் விஜயமங்கலம் கார்மேகக் கவிஞரின் கொங்கு மண்டல சதகம். அந்நூலை உரைக்குறிப்புடன் 1923-ல் பதிப்பித்தவர் திருச்செங்கோடு அ.முத்துசாமிக்கோனார் அவர்கள். அவர் முன்னுரையில் இவ்வாறு எழுதுகிறார்.

"1912-ம் வருஷத்தில் 40 செய்யுட்கள் அடங்கிய கொங்கு மண்டல சதக ஏட்டுச் சுவடியொன்று கிடைத்தது. அதில் பழமையான விழுமிய செய்திகள் இருக்க நோக்கிக் கழிபேருவகை கொண்டு தேடியும் சதகம் முற்றும் கிடைக்கவில்லை. கொங்கு மண்டலத்தில் அருந்தமிழ்க்கு அன்னைபோலும் வள்ளன்மைக் கொடிவழியுற்ற பழைய கோட்டைப் பட்டக்காரர் ராய்பகதூர் ஸ்ரீமான் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியாரைக் கண்டு என் கருத்தை விளக்கினேன். முறுவலரும்பி அவ்விருப்பம் எனக்கும் உண்டு. அமைந்து செய்யும் பொறுப்பேற்றுக் கொள்வாரைக் காண்கிலேன் என்ற ஒத்த அன்பினராயினர். சில நாட்டுப் புலவர்களையும் பல ஏட்டுப் பிரதிகளையும் தருவித்துக் கொடுத்து உதவினர்.

இதனை ஆராய்ச்சி செய்து அச்சிடுதலில் சிறிதும் எனக்கு பொருட்கவலை உண்டாகாதபடி பழைய கோட்டைப் பட்டக்காரர் ஸ்ரீமான் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் கைமாறு கருதாது பேரன்புடன் பொருளுதவி செய்தனர். இவர்களது பெருந்தன்மையும், வித்தியாபிமானமும், மதித்தற்பாலன. இந்நூல் திருத்தமாக விரைவில் வெளிவர வேண்டுமென்று பல வழியிலுந் துணை புரிந்தவர்களில் தலைமை பெற்றவர்கள் குட்டப்பாளையம் ஸ்ரீமான் அர்ஜுன கவுண்டரவர்கள்.

உருத்ரோத்காரி வருஷம் — தி.அ.முத்துசாமிக்கோனார்
சித்திரை மாதம் 1923 — திருச்செங்கோடு.

ஒரு புது இலக்கியம்

பல நூற்றாண்டாக 45 புலவர்கட்கு மேல் (கிடைத்தவை. பல புலவர்கள் பாடியவை கிடைக்காமல் இருக்கலாம்). பாடிய பாடல்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. 1930இல் ஒரு முழு இலக்கிய நூல் புதியதாகப் படைக்கப்பட்டது.



கணியூர் உடுமலை அருகில் உள்ள ஒரு ஊர். அங்கு இசுலாமியர்கள் அதிகம். அவர்களில் பலர் தமிழ்க்கல்வி கற்றுக் கவி இயற்றும் ஆர்வம் உடையவர்களாகவும், சமரச சன்மார்க்க இயக்கத்தில் பங்கு கொண்டவர்களாகவும் இருந்தனர்.

அவர்களில் ஒருவர் பண்டிதர் ஜனாப் கே.அப்துல் சுகூர் சாயபு அவர்கள். அவர் சமரச எண்ணம் கொண்டவர். சூலக்கல் மாரியம்மன் மீது பல சிறு பிரபந்தங்கள் பாடியவர். 26ஆம் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் "சமரச சன்மார்க்க சமயத்தைச் சேர்ந்தவர்" என்று கே.அப்துல் சுகூரின் ஆசிரியர் ஆர்.எம். சுப்பராமையர் தன் பாடலில் பாடியுள்ளார்.

"தொழுதூண் கொள்ளும் தொல்குடி யெள்ளி
உழுதூண் கொள்ளும் உயர்குடி யாளன்
தையல் ஆனோடு தண்டலை யுடையான்
நொய்யல் தனையிவன் நோன்றா றுடையான்
ஏராள மதாய் ஏர்ஆள் உடையான்
காரா ளர்தம் கண்மணி போல்வான்
நமர்சிவர் அவர் நாரணர் என்னார்
சமரச சன்மார்க் கச்சம யத்தான்"

என்று அவர் பட்டக்காரரைக் கூறுகிறார்.

1930ஆம் ஆண்டு ஜனாப் அப்துல் சுகூர் சாயபு அவர்கள் "நல்லதம்பிச் சர்க்கரையார் நான்மணிமாலை" என ஒரு இலக்கியம் எழுதி வெளியிட்டார். அந்தாதித் தொடையில் வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரியவிருத்தம், நேரிசை ஆசிரியப்பா என்ற பாடல்கள் மாறிமாறிப் பயின்று வரப்பாடுவது. 40 நீண்ட பாடல்களையுடையது. பட்டக்காரர் அவர்கள் ஈரோடு தாலூக்கா போர்டு தலைவராக இருந்தபோது 11.8.1930 அன்று அந்நூல் வெளியிடப்பட்டது.

"வாய்மை தவறா மனத்தால் எவர்க்கும் வழங்குபவன்
தூய்மை யுறுமணிப் பாமாலை தோளிற் சுமப்பவன்காண்
சேய்மையுள் ளாரும் புகழ்நல்ல தம்பிநம் சீரியநல்
தாய்மை யுடைய இவன்கீர்த்தி சேடனும் சாற்றுவனோ!

என்பது அந்நூலின் ஒரு பாடல்.

அந்நூலுக்கு ந.மு. வேங்கடசாமி நாட்டார், கி.ஆ.பெ. விசுவநாதன், கணபதி இரா.கிருஷ்ணசாமிக் கவுண்டர், விளாங்குறிச்சி வி.நா. மருதாசலக் கவுண்டர், காங்கயம் தெய்வசிகாமணி முதலியார், தாராபுரம் நா. ஆறுமுகம் பிள்ளை, மேடைவலசு சிதம்பரசாமிக் கவுண்டர், திருப்பத்தூர் சண்முக முதலியார், திருச்சி தி.பொ. பழனியப்ப பிள்ளை, உத்தமபாளையம் நாராயணசாமி, திருநெல்வேலி கருணாலயப் பாண்டியப் புலவர், தாராபுரம் வி.கணபதியாபிள்ளை போன்ற பலர் பாராட்டுக் கவிதை வழங்கியுள்ளனர். அவர்களில் பலர் பட்டக்காரர் அவர்களின் பண்பு நலன்களைப் பாராட்டியுள்ளனர். அவைகளில் சில :

"சீராரும் கொங்குவேள் குலதிலகன் திகழ்பழைய
கோட்டை ஆள்வோன்
காராரும் கொடைத்திறனால் கருதுபட்டக் காரப்பேர்
கவினப் பெற்றோன்
ஏராரும் இனியகுண அரனடித்தொண் டாதியநன்கு
இயைந்த வாற்றால்
பேராரும் நல்லதம்பிச் சர்க்கரைமன் றாடியெனப்
பெருமை சான்றோன்"

- ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

"கொங்குமண் டலம்தன்னில் பழையகோட் டைப்பட்டம்
கொண்டு வாழ்வோர்
முந்துநன் னாவலர்கள் சொன்மாலை பல அணிந்து
முன்னோர் சீத
இந்துசே கரச்சிவனார் திருவடியின் மெய்ப்பத்தி
இகவா மேலோர்
நந்துசீர் பசுக்காவல் புரிபுகழில் பல்லோரும்
நாடி ஏத்த
வந்துமா நிலந்திகழ்வோர் நல்லதம்பிச் சர்க்கரையாம்
வள்ளல் தாமே"

- திருச்சி, கி.ஆ.பெ. விசுவநாதன்

"நாவலர்கள் போற்றுதுரை நற்றவர்கள் மெச்சுதுரை
காவலர்கள் என்றும் கருதுதுரை - மேவலரும்
நண்ணிப்போற் றெங்கள்துரை நற்பழைய கோட்டைதுரை
அண்ணல்ஆன் காக்குதுரை யாம்"

- தாராபுரம் வி. கணபதியா பிள்ளை



"தருவிருக்கும் காரைநகர் தழைத்தோங்க அரசியற்றும்
தன்மை யாளன்
மதியுடைய அண்ணலின்சீர் மறவாத மதியுடையான்
வடதிக் கோனும்
பதியுடையா னும்கண்டு மதிமாழ்கு நிதியுடையான்
மாறாது ஈயும்
கதியடையான் துரைகள்கரம் குவித்திறைஞ்சும் கதியுடையான்
கன்னி நொய்யல்
நதியுடையான் நல்லதம்பிச் சர்க்கரைமன் றாடிஎனும்
நலமிக் கோனே"

- கணியூர் கா. நயினார் முகமது சாஹிப்

"காஞ்சிமா நதியெனக் கழறும் நொய்யல்
ஆஞ்செழு நதியின் அருகினில் பழைய
கோட்டையம் பதியான் கோவினை வளர்த்தலில்
தேட்டமிக் குடையான் தீவினை கடிவான்
ஏர்த்தொழில் அதுவே எத்தொழி லதினும்
ஏர்த்தொழி லாக்கொண்டு இசைமிகப் பெற்றோன்
தாளாற் றித்தரூஉம் பொருள்தக் கார்க்கே
வேளாண் மைசெயும் விழுக்குடிப் பிறந்த
வேளா ளர்க்கெலாம் வேந்தனாம் தகையன்
சார்நல் லதம்பிச் சர்க்கரை என்னும்
பேர்தனைப் பெற்றோன்"

- "வேளாள வாலிபன்" ஆசிரியர்
கணபதி இரா. கிருஷ்ணசாமிக் கவுண்டர்

<u>பூந்துறை கொள்ளபட்டன்</u>

நீண்டபெரும் பஞ்ச காலத்தில் பூந்துறை கொள்ள பட்டப் புலவரை எட்டாண்டுகள் வரை அரண்மனையில் உபசரித்து அவருக்குத் திருமணமும் செய்து வைத்து வாழ்க்கைக்கு உதவினர் சர்க்கரை மரபினர். இதை

"ஏர்விளம்பிப் பஞ்சமுதல் எட்டுவரு ஷங்காரை
ஊர்விளங்கும் சர்க்கரைதான் உண்மையுடன் வளர்த்து
எனக்கும் வதுவையது இன்பாகச் செய்தருளி
கணக்கும் புகழ்படைத்தான் காங்கயநன் னாட்டதிபன்"

என்று "திருமுக விலாசம்" என்று பாடலில் குறிப்பிடுகிறார்.

## காதல் இலக்கியம்:

நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் (1772 - 1781) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு திருச்செங்கோடு வீரபத்திரக் கவிராயர் அவர்களால் பாடப்பட்டது. 467 கண்ணிகளை உடையது. (934 வரிகள்) பாட்டுடைத் தலைவரின் குலப் பெருமை, குடிப்பெருமை தெய்வபக்தி, கொடை போன்ற பல செய்திகள் அடங்கிய ஒரு சிற்றிலக்கியம். குட்டப்பாளையம் சுப்பராய வாத்தியார் கொடுத்த ஓர் ஓலைச் சுவடியைக் கொண்டு தி.அ. முத்துசாமிக் கோனார் அவர்கள் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்கள் (1896 - 1949) பொருள் உதவியால் ஈரோடு நித்திய கல்யாண சுந்தரம் அச்சகத்தில் 1913 -ஆம் ஆண்டு அச்சிட்டார்.

நூல் முன்னுரையில் கோனார் அவர்கள் எழுதியது.

"கொங்கு சரித்திரம் ஒன்று எழுத வேண்டி அதற்கு வேண்டிய சாதனங்களைப் பல நாளாகத் தேடி வருகிறேன். குட்டைப்பாளையம் ஸ்ரீமான் அர்ஜுன கவுண்டரவர்களால் ஸ்ரீ மான் ராய பகதூர் நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் அவர்கள் நட்புக் கிடைத்தது.

கொங்கு சரித்திரத்திற்கு வேண்டிய நூல்கள், சாசனங்கள், கர்ண பரம்பரைக் கதைகள், தமிழ்ப் பாடல்கள் சேகரம் செய்து தருதல் வேண்டும் என அறிவித்தேன். மிகுந்த சந்தோஷங் கொண்டு இது நாங்கள் செய்ய வேண்டிய காரியத்தில் தலையாயது எனப் புகழ்ந்து பல இடங்களுக்குக் கடிதம் விடுத்தும், பல நாட்டுப் புலவர்களை வரவழைத்துக் கொடுத்தும் செய்த உதவி பாராட்டற்பாலது. இப்படிச் செய்து வரும் சோதனையால் இந்நூல் அகப்பட்டது.

தி.அ. முத்துசாமிக் கோனார்

திருச்செங்கோடு
15.08.1913



## பட்டாபிஷேகம்

"பட்டம்" என்ற சொல்லுக்கு ஆட்சி, உயர் பதவி என்று அகராதிகள் பொருள் கூறுகின்றன. பட்டங்கட்டுதல், பட்டந்தரித்தல் என்பதற்கு சிறப்புப்பெயர் சூட்டுதல், முடிசூடுதல், பட்டப்பெயர் சூடுதல், அரசு முதலிய பதவி அளித்தல் எனவும் அகராதிகள் கூறுகின்றன. இதனை முடிசூடல் என்றும் கூறுவர்.

அரசர்கள் முடிசூடுகின்ற காரணத்தால்தான் "முடிமன்னர்" என்று அழைக்கப்பட்டனர். ஒரு அரசன் இன்னொரு அரசனை வென்று அவன் ஆட்சியைக் கவர்ந்தால் அவன் தன்னை முடிகொண்டவன் என்று அழைத்துக் கொள்வான். இராசராச சோழன், சேர, சோழ, பாண்டிய நாடு மூன்றையும் ஆட்சி செய்த காரணத்தால் "மும்முடிச் சோழன்" என்று தன்னை அழைத்துக் கொண்டான். ஒரு பாண்டிய மன்னன் சோழ மன்னன் தன் முடியைக் கவர்ந்து கொள்வானோ என்று அதை இலங்கை மன்னனிடம் பாதுகாப்பில் வைத்தான். சோழன் கடல் கடந்து சென்று பாண்டியன் முடியைக் கவர்ந்தான். முடியைக் கைப்பற்றினால்தான் நாட்டைக் கைப்பற்றியதாகப் பொருள் போலும் ! சோழன் "முன் அவர் பக்கல் தென்னவர் வைத்த சுந்தரமுடியை" கைப்பற்றியதாகத் தன் மெய்க்கீர்த்தியில் கூறிக் கொள்கிறான். "முடி" என்பதற்கு, உச்சியில் சூடுதல், தலையணி என்றும், கிரீடம் என்பதற்கு மணிமுடி என்றும் அகராதி பொருள் கூறுகிறது. இதற்கு மௌலி, மகுடம் என்ற சொற்களும் உண்டு.

இம்முடி, மும்முடி என்ற சொற்கள் முதலில் முடியைக் குறிக்கவில்லை. அச்சொல்லின் முந்தைய வடிவம் இம்மடி, மும்மடி என்பது. அதற்கு இரண்டாவது, மூன்றாவது என்றே பொருள். இராமன் என்பவன் வழியில் இரண்டாமவன் வந்தால் அவன் இம்மடிராமன், மூன்றாமவன் மும்மடி ராமன். சாளுக்கிய ஆகவமல்லனை 5 முறை வென்ற சோழன் தன்னை "ஆகவமல்லனை ஐமடி வெற்றி கண்டவன்" என்று அழைத்துக் கொண்டான். பின்னால் தவறாக இம்மடி - இம்முடி ஆகி விட்டது. மும்மடி / மும்முடி ஆகி பட்டப் பெயராக வழங்கப்பட்டு விட்டது. மும்முடிப் பல்லவராயன், இம்முடிச் சோழியாண்டான், இம்முடி வாரணவாசி, இம்முடி மசக்காளி மன்றாடி எனப் பட்டமாக வழங்கப்பட்டது.

முடியை மாற்றான் கவர்ந்த பின்னர் "நார்களால் அமைந்த முடியாவது தனக்கு வேண்டும்" என்று முடிசூடிய மன்னன் "நார்முடிச் சேரல்" ஆனான் என்று ஒரு ஆய்வாளர் எழுதியுள்ளார்.

பட்டம் என்பது இரண்டு வகையாக வழங்கப்படுகிறத. கங்கை கொண்டான், கடாரங் கொண்டான் என்று பட்டம் பெற்றால் அது பட்டப் பெயர். சிறப்புப் பெயர். அந்த அரசன் அரசனாக ஆக்கப்பட்டால் அவனுக்குப் பட்டம் சூட்டப்படுகிறது. அது அரச பதவி.

அதேபோல் பழைய கோட்டை மரபினர் சர்க்கரை, உத்தமச் சோழன், உத்தமக் காமிண்டன், மன்றாடியார், எட்டுத்திக்கும் சொட்டைக்காரர் கண்டன் என்று பெற்றது பட்டப் பெயர்கள். அவர்கள் பட்டக்காரர் ஆகும் அன்று பட்டம் (முடி) சூட்டப்படுகிறார்கள்.

பழைய கோட்டைப் பட்டக்காரர்கள் மன்னர், அரசன், வேந்தன், கொங்கு நாடாள்வோர் என்ற கூறப்படுவதால் அவர்கள் பட்டம் பெறும் பட்டாபிஷேகத்தை முடிசூடுதல் என்றே அழைத்தனர்.

"மதிமிக்க நஞ்சை உடையாரவர்கள் மனதினில்
மகாமிக மகிழ்ச்சி கொண்டு
ஒலிகொளும் முரசுகள் பேரிகை முழக்கமது
உலகெலாம் அறியும்படி
உத்தமக் காமிண்ட சோமசர்க் கரைமகன்
உயர்அழகன் சர்க்கரைக்கு
துலிய பட்டும் தாளி சவுக்களி கபாய் குஞ்சம்
தூய காளாஞ்சி குல்லாய்
துத்தர பல்லக்குடன் பட்டமும் தந்துமே
துலக்கமோ டனுப்பினாரே"

இங்கு அழகன் சர்க்கரையார் தாராபுரத்தில் நஞ்சய உடையாரிடம் பெற்றது பட்டப் பெயர். முடி அல்ல.

"மல்குமன்னர் கொற்றவேல் சர்க்கரைக்கு
மகிழ்ச்சியுள மூன்றுபட்டத் தரசும் கூடி
பல்கும்வெகு முழக்கமாடு பட்டம் சூட்டிப்
பரிவுற்றார் நாட்டில் உள்ளோர் பணிவுற்றாரே"

இங்கு மூன்று பட்டக்காரர்களும் கூடி கொற்றவேல் சர்க்கரையாருக்குச் சூட்டிய பட்டம் முடிசூடி ஆட்சி அதிகாரம் உள்ள பட்டம்.



பழைய கோட்டை மரபினர் பலருடைய பட்டாபிஷேக முடிசூட்டுவிழாப் பாடல்கள் சில கிடைத்திருக்கின்றன. ஒரு பட்டாபிஷேக நிகழ்ச்சிக்கு நேரில் வந்திருந்த மாம்பழக்கவிஞர் (கண் பார்வையில்லாததால்) பட்டாபிஷேகத்தைக் கண்குளிரக் காணாவிட்டாலும் மிக சுருக்கமாக 4 வரிகளில் ஒரு பாடல் பாடியுள்ளார்.

"மணங்கொண்ட காரைஆ னூரில் மேவும்
மன்னவராம் சர்க்கரைக்கு மகுடந் தன்னை
குணங்கொண்ட இம்முடிக் குமார ரோடு
குமாரத்ன வேணாடர் அவரும் நல்ல
எணங்கொண்ட சிதம்பரப்பல் லவரும் கூடி
ஏற்றினார் துர்முகி ஆவணிபத் தேழில்
பணங்கொண்ட நாலரசும் ஒருங்கு சேரப்
"பார்த்தேன்" மாம்பழம் எண்ணம் பலித்த தாமால்"

என்பது மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பாடல்.

26ஆம் பட்டக்காரர் ராய பகதூர் நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார். அவர் பிறந்த ஆண்டு 1886. 19ஆம் வயதில் சிலம்பகவுண்டன் வலசு மாமன் வெங்கட்டரமணசாமிக் கவுண்டர் மகள் அம்மணியம்மாள் அவர்களை 12.7.1905 அன்று திருமணம் செய்து கொண்டார். அவரது பட்டாபிஷேக முடிசூட்டு விழா அடுத்த நான் 13.7.1905ல் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

அவருடைய பட்டாபிஷேகத்திற்கு கொங்கு நாட்டுப் புலவர்கள் பாடல் அடங்கிய "பட்டாபிஷேக மங்களக் கவி" என்ற பெயரில் சுமார் ஐம்பதிற்கு மேற்பட்ட பாடல்கள் அடங்கிய தனி நூலே வெளியிடப்பட்டது.

28.10.1964 அன்று பெரும்புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் தம் தொகுப்பிலிருந்து பேராசிரியர் கு. அருணாசலக் கவுண்டர் அவர்கட்கு அனுப்பிய முடிசூட்டுப் பாடலில்,

"காரைஆ னூர் எனும் மாபழங் கோட்டையில்
கதித்தமுடி மன்னனாகக்
கனிவுடன் கொங்கினைக் காத்துநீ டூழியாய்க்
களிப்புடன் வாழும் என்று
பரன்வெற்பு நிகர்சத்தி சிவன்மலைக் குமரேசர்
பரமர் திருவுளக் கடாட்சம்
பாலிக்க வேகரியான் சர்க்கரைமன் றாடிக்குப்
பாரில்முடி சூட்டினாரே"

என்ற தொடர்கள் காணப்படுகின்றன.

26ஆம் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரையார் பட்டாபிஷேக நிகழ்ச்சியை உத்தமபாளையம் கிராமம் சிலம்ப கவுண்டன் வலசு ஸ்கூல் மானேஜர் கே.எஸ்.வேலுமணி உபாத்தியாயர்

"கொற்றவேல் சர்க்கரைக் கோமான் பேரன்
நற்றமிழ் அறிந்த நல்ல சேனாபதிச்
சர்க்கரை புரிந்த தவத்துதி புத்திரன்
தாரணி புகழ்நல தம்பிச் சர்க்கரை
தீரன்இவ் வுலகைச் சிறப்புடன் ஆளக்
காடையூர் இம்முடிக் காங்கய துரையும்
சிங்கையில் பல்லவ ராய சிங்கமும்
நாடிய மறையவர் குருக்கள் மார்களும்
பந்து சிநேகிதர் பலர்வர்த் தகர்களும்
பன்னிரு கிராமம் மன்னிய பேர்களும்
நாடிரு பத்து நான்கில் உள்ளவர்களும்
உத்தியோ கஸ்தரும் உவந்துமே சூழப்
பரத நாட்டியம் பரத்தையர் ஆடக்
கட்டியம் பராக்குக் கழறியே மேவ
சுரர்மலர் மாரி சொரிந்திடச் சகல
வாத்தியம் முழங்கிட வாணர் புகழ்ந்திட
ஆறுகால் பீடத்து அமர்த்தியே சேது
காசித் தீர்த்தம் கவினுற ஆட்டிப்
பொன்மணி மகுடம் புனைந்து
வாழ்த்தினர் சுகித்து வாழ்க வாழ்கவே!

என்று பாடியுள்ளார். இந்தப் பட்டாபிஷேகம் திருமணத்திற்கு அடுத்த நாள் நடைபெற்றது. இப்பட்டாபிஷேகம் பழைய கோட்டை அரண்மனையில் நடைபெற்றது.

கரியான் சர்க்கரையார் மகன் பெரிய சர்க்கரைக்கு ஆனூரம்மன் கோயிலில் திருமணத்திற்கு அடுத்தநாள் பட்டாபிஷேகம் நடைபெற்றது. அதை நடத்தியவர் அவருடைய தந்தையார். மகனுக்கு "இளவரசு பட்டம்" அல்லது "இளமைப் பட்டம்" என்ற நிகழ்ச்சியை நடத்தினார். இதனால் ஒரு பட்டக்காரர் தன் மூத்த மகனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டுவதும் நடைபெற்றுள்ளதை அறிகிறோம்.

பட்டக்காரரின் தம்பி "இளையபட்டக்காரர்" அல்லது "குமாரபட்டக்காரர்" என அழைக்கப்படுவார். 27ஆம் பட்டக்காரர் நல்லசேனாதிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட



மன்றாடியார் அவர்கள் தம்பி ந. அர்ச்சுனன் அவர்களைப் பற்றிய கட்டுரைகளில் அவர் இளைய பட்டக்காரர் "குமாரபட்டக்காரர்" எனக் குறிக்கப்பட்டுள்ளார்.

பட்டாபிஷேக நிகழ்ச்சி எவ்வாறு நடைபெறுகிறது என்பதைக் கொற்றவேல் சர்க்கரையார் (19) அவர்களின் பட்டாபிஷேகக்கவி விரிவாக விளக்குகிறது. அரண்மனைக் கணக்கர் சடைப் பெருமாளே நேரில் பார்த்ததை அப்படியே கூறுகிறார். கேளுங்கள்.

"இந்திரலோகம் போல ஒரு பெரிய கொட்டகை. முகப்பில் மேழிக்கொடியும், அன்னக் கொடியும் கட்டப்பட்டிருக்கிறது. பெருங்கூட்டம். எள் போட்டால் கீழே விழாது. சங்கீதக் கச்சேரி, நாதசுரம், தவில், வீணை, சங்குகள் ஒலிக்கின்றன. ஒரு பக்கம் பரதநாட்டியம், கின்னரி, செண்டை, பம்பை, பேரிகை முழங்குகிறது. ஜவான்கள், தாயாதிகள், ஜமீன்தாரர்கள், மிட்டாதாரர்கள், நண்பர்கள், அதிகாரிகள், கருணீகர், காரியஸ்தர், பண்ணாடிகள், மாமன்மார், மருமக்கள், விசுவன்மார், அரசப் பிரதிநிதிகள், சிரஸ்ததார், முதலியார்கள், செட்டியார்கள், அரண்மனை அம்மன்மார்கள், வெளிநாட்டுக் கவுண்டர்கள், உள்நாட்டுக் கவுண்டர்கள் (காங்கய நாடு), நாய்க்கமார், பண்டாரம், நாடார், மண்ணுடையார், வண்ணார், நாவிதர், அகதிகள், ஆதிமாதிகள் ஆகியோர் அவரவருக்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் ஆர்வமுடன் அமர்ந்திருக்கிறார்கள்.

எல்லா வாத்தியங்களும் இசைக்கப்படுகின்றன. ஆங்காங்கு விசிறிகள் வீசுகிறார்கள். சந்தனம், புஷ்பம் தரப்படுகிறது. பன்னீர் தெளிக்கப்படுகிறது. சமூக வித்துவான்கள் பாடுகிறார்கள். வேதமும், தமிழ்மறையும் ஓதப்படுகிறது. பட்டாபிஷேக மேடையில் சக்கரக் குடைகள் பிடித்துக் கொண்டு சிலர் நிற்கின்றனர். சமுதாடு, வல்லையம், கொட்டைமுனை முதலிய ஆயுதங்களை அதற்குரியவர்கள் ஏந்தி நிற்கின்றனர். சூரியபாண், சந்திரபாண் தூக்கி நிறுத்தப்பட்டுள்ளது. வெள்ளிக் கழ்பாய் வைக்கப்பட்டுள்ளது. இரண்டு தீவட்டிகள் எரிகிறது. தூபக் குழாய், பரிமளம் புகைக்கப்படுகிறது. வண்ணத் துணிகளில் உருவாக்கப்பட்ட பச்சை டால், மகர டால், வசவ டால், தும்பி டால் கொட்டகையில் பல இடங்களில் அசைந்தாடுகிறது.

அப்போது,

தாமரையில் தோன்றிய திருமகள் போல அழகுள்ள மனைவியோடு விழா நாயகர் வருகிறார். நடுநாயகமாக வைக்கப்பட்டுள்ள அலங்கரிக்கப்பட்ட ஆறுகால் பீடத்தில் இருவரும் எல்லோரையும் வணங்கி அமர்கிறார்கள். தம்பதிகள் இருவர்க்கும் மத்தியில் எதிரில் வாளாயுதம் ஒன்று நிறுத்தப்பட்டுள்ளது. பல்வேறு

தலங்களிலிருந்து வந்த பரிவட்டங்களை அவ்வாளுக்கு அணிவிக்கிறார்கள். முகூர்த்த வேளை நெருங்கி விட்டது. ஏழு புண்ணியத் தீர்த்தங்களும், யாக சாலையிலிருந்து வந்த கலசத்தின் தீர்த்தமும் குருமார்களால் வாளுக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது. தீபாராதனை காட்டுகிறார்கள். பூக்கள் தூவப்படுகின்றன. அப்போது சகல வாத்தியங்கள் முழங்குகின்றன.

காடையூர்க் காங்கேய மன்றாடியாரும், காங்கயம் பல்லவராயரும், வேணாடுடையாரும் முடிசூட்டுகிறார்கள். மூவரும் அபிஷேகம் செய்யப்பட்ட பட்டத்து வாளை எடுத்துப் பட்டக்காரரிடம் கொடுக்கிறார்கள். இளவயதுப் பெண்கள் ஆலாத்தி எடுக்கிறார்கள். எல்லோரும் நல்லாசி கூறுகின்றனர்.

பட்டக்காரர் அவர் தேவியாரும் பஞ்சவர்ண அங்கி அணிந்து, வெள்ளி மேலாசனம் அமைத்து, முகபடாம் அணிந்து, ஆபரணங்கள் பூட்டப்பட்டு நிற்கும் பட்டத்துக் குதிரையைத் தரிசிக்கிறார்கள். எல்லோரும் பாதகாணிக்கை செலுத்துகின்றனர். நடனம் நடந்து கொண்டிருக்கிறது. தீட்சிதர்கள் பட்டக்காரருக்கு பஞ்சாக்கரத்துடன், அனுஷ்டானம், உபதேசம் செய்கின்றனர். ஆசி வழங்குகின்றனர். அவர்களுக்குத் தானம் வழங்கப்படுகிறது.

"செங்கோல்" என்று கருதப்படும் வாளைக் கையில் கொண்டு தம்பதிகள் சண்டிகாதேவியை வணங்குகின்றனர். எல்லோருக்கும் சிறப்பான விருந்தளிக்கப்படுகிறது. தம்பதிகளும் முக்கியமானவர்களும் ஆனூர் அம்மன் கோயில் சென்று வழிபட்டு வருகின்றனர். தானங்கள் வழங்கப்படுகின்றன. எல்லோரும் மகிழ்வுடன் செல்லுகிறார்கள். சர்க்கரையார் செங்கோல் எந்நாளும் வாழ்வதாகுக"

சடைப்பெருமாள் தன் நேர்முக வருணனையை முடிக்கிறார். பின் பாடுகிறார்.

"கொங்காறு நாலுநாட் டனைவரும் புகழ்பெற்ற
 கொற்றவேல் சர்க்கரை எனும்
குணமிகு உத்தமக் காமிண்ட மன்றாடி
 கொண்டபட் டாபிஷேகக்
கொலுவதன் பெருமையை முழுவதும் விரிவதாய்க்
 கூறுவதற்குச் சிறியனேன்
கொஞ்சமும் அறிவு எட்டாத தால்இது
 சுருக்கமாய்க் குறித்தேன்"

பட்டத்துவாள், பட்டத்துக்குதிரை எனச் சிறப்பாக அவை அழைக்கப்படும். ஆனூரம்மன் கோயிலுக்கு வழிபடச் செல்லும் பட்டக்காரர்கள் பட்டத்து வாளுடன் செல்லுவார்கள்.

பட்டத்துக் குதிரைமேல், வேறு எவரும் ஏறமாட்டார்கள்.





## மாவீரன் தீரன் சின்னமலை

(18ஆம் நூற்றாண்டு இறுதியில் காவிரியின் மேற்கே உள்ள கொங்குப் பகுதியில் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆதிக்கம் ஏற்படாமல் தடுத்து நிறுத்திட வீரப்போர் புரிந்த மாவீரன் தீரன் சின்னமலை.

பழையகோட்டை மரபில் தோன்றிய அம்மா வீரனின் செயற்கரிய செயல்கள் பழையகோட்டை மரபிற்கும், கொங்கு நாட்டுக்கும் பெருமை சேர்க்கக் கூடிய செயல்கள் ஆகும்.

19ஆம் பட்டக்காரராக விளங்கிய கொற்றவேல் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் அவர்களின் பேரன் தீரன் சின்னமலை.) பின்வரும் கால்வழிப்பட்டியல் மூலம் அதனை அறியலாம்.








(20, 21, 22ஆம் பட்டக்காரர்கள் ஆகிய மூவர் காலத்தில் தீரன் சின்னமலை வாழ்ந்துள்ளார். அவர்களின் அன்பும், ஆதரவும், அரவணைப்பும் தீரன் சின்னமலைக்கு இருந்துள்ளது.)

18.4.1792இல் சின்னமலை வீரர்களுக்குப் பயிற்சியளிக்கவும், ஆயுதங்கள் தயாரிக்கவும் நிலம் வாங்கிய ஒப்பந்தத்தில் 22 ஆம் பட்டக்காரர் சின்னமலையின் பெரியப்பாவின் பேரர் நல்ல சேனாபதிச் சர்க்கரையார் முக்கியப்பங்கு வகித்துள்ளார்.

10.4.1793 அன்று பழைய கோட்டைப் பட்டக்காரர் நிர்வாகத்தில் இருந்த சிவன்மலைக் கோயிலுக்குச் சின்னமலை காடையூர்க் கவுண்டம்பாளையத்தில் 15 வள்ளக்காடு (60 ஏக்கர்) [illegible] நிலத்தை உச்சிக்காலக் கட்டளைக்கு மானியமாக அளித்துள்ளார்.

பரம்பரைக் கருணிகர் (சம்பிரதிகள்) வழிவந்த திரு. ஓ. எஸ். சடைய-பிள்ளை அவர்கள் தொகுத்த பழைய கோட்டை ஆவணப்பதிவேட்டில் பக்கம் 96-97ல் " நல்ல சேனாபதிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் சகோதரர் வாழத்தோட்டத்து வலசு இரத்தினத்தாக்கவுண்டர் மக்கள் கொளந்தசாமிக்கவுண்டர், தம்பணகவுண்டர், சின்னமலைக்கவுண்டர், குட்டிச்சாமி கிலேதார் " என்று எழுதப்பட்டுள்ளது.

அந்த ஆவணத்தில் " சின்னமலைக்கவுண்டர் " என்ற பெயருக்கு எதிரில் " அதிகாரம் " என்று குறிக்கப்பட்டுள்ளது. காடையூர்க்கவுண்டம்-பாளையத்திலும், பட்டாலியிலும் உள்ள சின்னமலை கல்வெட்டுக்களில் அவர் பெயர் " தீர்த்தகிரிச் சர்க்கரை உத்தமக் காமிண்ட மன்றாடியார் " என்று காணப்படுகிறது.

நாட்டு நன்மைக்காக, நாட்டு மக்களை [illegible] ஒன்று திரட்டப் பழையகோட்டை அரண்மனை அளித்த அனுமதியையும், ஆதரவையும் இதன் மூலம் அறிகின்றோம்.

(5 ஆம் பட்டக்காரர் அழகன் சர்க்கரையார் மகன், 6 ஆம் பட்டக்காரர் காரியான் சர்க்கரையாரின் தம்பி மேலப்பாளையத்தில் வாழ்ந்தார். அவரது இயற்பெயர் " தீர்த்தகிரிச் சின்னமலைக்கவுண்டர் ", எனவே தீர்த்தகிரி என்றும் சின்னமலை என்றும் பெயர் வைப்பது பழையகோட்டை மரபின் வழக்கம் என்பதனையும் அறிகின்றோம்.

அந்தத் தீர்த்தகிரிச் சின்னமலைக்கவுண்டர் சிவமலையில் மலைப்பாதையை அமைத்தவர்.) அவர் மலைப்படிகள் அமைத்ததைச் சிவமலை சிவகிரிப் பண்டிதர் ஒரு பாடல் மூலம் ஆவணப்படுத்தியுள்ளார்.

"அழகன்சர்க் கரைச் சிறவன் அனுமந்தர் கோயில்வரப்
பழகுவதைப் பார்த்துக்கல் பாறைகளை-மளமளெனப்
பேர்த்துச் சிவமலைமேல் பெரும்பாதை செய்தாரே
தீர்த்தகிரிச் சின்னமலைத் தேன்"

என்பது அவர் பாடலாகும். இச்செய்தி பழைய கோட்டை ஆவணப் பதிவேட்டில் 209 ஆம் பக்கம் பதிவாகியுள்ளது.

1898 ஆம் ஆண்டு 25 ஆம் பட்டக்காரர் நல்ல சேனாபதிச் சர்க்கரையார் மனைவி வள்ளியாத்தாள் நடத்திய சிவமலைக் குடமுழுக்கு விழாவின்போது சிதைந்து கிடந்த முன்மண்டபத்திருப்பணி செய்தவர்கள் வாழைத் தோட்டத்து வலசைச் சேர்ந்த இருவர். இதை அங்குள்ள கல்வெட்டுக் குறிக்கிறது. அதில் "பழையகோட்டைத் தீர்த்தகிரிச் சர்க்கரை" என்றே குறிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டு வாசகம்

" கலியுக வருடம் 5000 விளம்பி வருடம்
ஆவணி மாதம் 30 தேதி பழையகோட்டை
தீர்த்தகிரிச் சர்க்கரை சந்ததி
வாழைத் தோட்டத்து வலசு
ரங்கசாமிக்கவுண்டர் ரத்தினத்தாக்கவுண்டர்
ஜீரண உத்தாரணம் "

என்பதாகும்.

.. ..



கம்பெனி ஆவணம் "காங்கயம் பட்டக்காரர் சின்னாக்கவுண்டர்" என்று குறிக்கிறது. மெக்கன்சி ஆவணங்கள் "தம்பாக்கவுண்டர்" "தம்பாக்-கவுண்டர் என்கிற சின்னமலைக்கவுண்டர்" என்று குறிக்கிறது. 18.4.1792ல் "தீர்த்தகிரிச் சர்க்கரைக்கவுண்டர்" என்று கையெழுத்திட்ட சின்னமலை 10.4.1793 ஆவணங்களில் " தீர்த்தகிரிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார்" என்று குறிக்கப்பெறுகிறார். சங்ககிரி வரிப்பணத்தைப் பிடுங்கிக் கொண்டு அவர்களிடம் சின்னமலை தன் பெயரையே கூறியிருக்கலாம்.

கிழக்கிந்தியக் கம்பெனியாரின் அதிகார முயற்சிகளைக் கண்ட சின்னமலை அம்முயற்சியை எப்படியாவது தகர்க்க விரும்பினார். அப்பொழுது சுற்றுவட்டாரங்களில் இளைஞர்கள் சிலம்பாட்டம், மல்யுத்தம், வில்-வாள்பயிற்சி, கவண், குதிரையேற்றம் பல போன்ற வீர விளையாட்டுக்களில் பயிற்சி பெற்று வந்தனர். அது போதாது என்று எண்ணிய சின்னமலை பெரிய அளவில் வீரர்கட்குப் பயிற்சி அளிக்கவும், ஆயுதங்கள் தயாரிக்கவும் விரும்பினார். சிலரிடம் விருப்பத்தைத் தெரிவிக்க அவர்களும் மிக அவசியமான செயல் என்று ஊக்கப்படுத்தினர்.

சிவமலையின் அருகே பட்டாலிக் கிராமத்தைச் சேர்ந்த காவலர் வேட்டுவர்குலப் பெருமகன் அனுமந்தக் கவுண்டருக்கு மிகுதியான நிலம் இருந்தது. அவற்றில் சிவன்மலை வடபுறம் அடிவாரக் காடும் சேர்ந்திருந்தது. அனுமந்தக் கவுண்டருக்கு 200 ரூபாய் கொடுத்து 18.4.1792 அன்று அவர் பங்கு முழுவதும் வாங்கப்பட்டது.

இம்மாபெரும் முயற்சிக்கு அடித்தளமான இந்தக் கிரயம் தனிப்பட்ட கிரயமாக இருந்தால் கொடுப்பர் வாங்குபவர் மட்டும் அறிய நடைபெற்றிருக்கும். நாட்டைக் காக்கும் நன்முயற்சிக்கு உண்டான கிரயம் ஆதலால் பலர் முன்னிலையில் நடைபெற்றது. கொங்கு தாராபுரம் வடக்கு வாசலுக்குச் சேர்ந்த காங்கய நாட்டுப் பட்டக்காரர்கள் காங்கய மன்றாடியார், சர்க்கரை மன்றாடியார், பல்லவராயக் கவுண்டர் அவர்களும், நாட்டுக்கவுண்டர்கள்

.. ..

வள்ளியறச்சல் நல்லணகவுண்டர், பட்டாலி சிவன்மலைக்கவுண்டர், மோளைக்-
கவுண்டர், கீரனூர் அன்னத்தம்பிக் கவுண்டர், பாரப்பதி ரகுநாதக்கவுண்டர்,
பரஞ்சேர்வழி ராக்கியாக்கவுண்டர், மருதுறை வெள்ளைக்கவுண்டர், முத்தூரு
பெருமாக்கவுண்டர், கன்னபுரம் பெரியதம்பிக்கவுண்டர், வெள்ளக்கல் பழனிமலைக்
கவுண்டர், ஆலாம்பாடி குப்பக்கவுண்டர், ஆறதொழு குழந்தை வேலப்பகவுண்டர்,
ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

பூந்துறை காசிலிங்கக் கவுண்டர், வெள்ளோடு முத்தித் திருமலைக்
கவுண்டர், நசியனூர் செங்கோட்டு வேலப்ப கவுண்டர், எழுமாத்தூர் குமார
கவுண்டர், நசியனூர் செங்கோட்டு வேலப்ப கவுண்டர், எழுமாத்தூர் குமார
சின்னய கவுண்டர், காளமங்கலம் பழனிக்கவுண்டர், குலனூர் தொண்டைமாக்-
கவுண்டர், ஊரம்பாடி சின்னய கவுண்டர், வஞ்சியப்பகவுண்டர், பொன்குலுக்சி
நாடு ஞானசிவாச்சலக்கவுண்டர், பரமத்தி ராமய்யன், இளையா நாயக்கன்
ஆகியோர் சாட்சிக் கையெழுத்திட்டனர்.

பழைய கோட்டை மரபில் என்றும் சாதிவேற்றுமை காட்டப்படு-
வதில்லை. இன்று பரவலாகக் கருதப்படும் "சமபந்தி" விருந்தை அன்றே
செயல்படுத்தியவர்கள் பழையகோட்டை மரபினர் சர்க்கரை மன்றாடியார்
காதல் இலக்கியத்தில்

" பண்டு பறையனென்று பாராமல் கூடவைத்து
உண்டு புகழ்படைத்த உத்தமக் காமிண்டன் "

என்ற தொடர் காணப்படுகிறது. அந்தணருக்குக் கொடுப்பதைவிட ஆண்டிக்
கொடுப்பது மேல் என்று செயல்படுத்திக் காட்டியது பழையகோட்டை மரபு.

தீரன் சின்னமலையும், இன்று மிகத் தேவையான சமய, சமூக
ஒற்றுமையைப் பேணிக் காத்தார். அவர் படையில் வெடிக்காரக்கவுண்டர்,
வெம்புளிவேட்டுவர் என்ற வேட்டுவகுலப் பெருமக்கள் இருந்தனர்.





சின்னமலையின் தங்கை உலகபுரம் பருவதத்தின் மக்கள்
குடுமிவேட்டுவர் அழைப்பின்பேரில் அறச்சலூர்ப் பகுதியில் குடியேறினர்.
இன்றும் அவர்கள் பரம்பரையினர் ஓடக்காட்டுவலசு, வீரப்பம்பாளையம்,
நாச்சிவலசு, மீனாட்சிவலசு போன்ற ஊர்களில் வாழ்கின்றனர். இதற்கான
ஏற்பாடுகளைச் சின்னமலை செய்தார்.

சின்னமலையின் மெய்க்காப்பாளர் கருப்பசேர்வை. அவர்
அகம்படிய இனத்தவர். தேவர் இனம் சார்ந்த முட்டுக்கட்டைப் பெருமாத்
தேவன் சின்னமலை படையில் முக்கியப் பொறுப்பு வகித்தார். சின்னமலை
திப்பு சுல்தானுக்குப் படை உதவி செய்தார். மைசூர்ப் பயணம் மேற்கொண்டு
மராட்டிய மாவீரன் தூண்டாஜிவாக்கிடம் சேர்ந்து சென்ற சின்னமலை குழுவில்
ஃபத்தே முகமது, உசேன், ரமஜல்லாகான், ஷேக்முகமது ஆகியோர்
இருந்தனர். ஷேக் உசேன், ரிஷா சாகிப் போன்ற பெருவீரர்கள் சின்னமலை
படையில் இருந்தனர். விருப்பாட்சி, திண்டுக்கல், தளி, இராமகிரி,
மருங்காபுரி நாயக்கப் பாளையக்காரர்கள் சின்னமலைக்கு உதவினர்.
பொல்லான் என்ற செருப்புத் தைக்கும் தொழிலாளியும் பல உதவிகளைச்
செய்தார். சுபேதார் வேலப்பன் கடிதத்தைச் செருப்பின்மூலம் அளித்தவர்
அவர். ஓமலூர் சேமலைப் படையாச்சி சின்னமலைக்குப் பேருதவியாக
இருந்தார். நாடார் சமூக மக்கள் ஓடாநிலைக் கோட்டை கட்ட உதவினர்.
கொங்குசமுதாயம் அனைத்தும் சின்னமலை பின் நின்றது.

சின்னமலைக்கு ஆதரவு தெரிவித்தவர்கள் தூக்கிலிடப்பட்டனர்.
விருப்பாட்சி பொன்னப்ப நாயக்கர் "கும்பினியார்களுக்கு விரோதியான
சின்னமலை என்கிற தம்பாக்கவுண்டனையும், லக்கன நாயக்கரையும் ஆதரித்ததி-
னாலும் சீரங்கப்பட்டணத்திற்கு ஆள் அனுப்பினதாலும் கும்பினியார் உத்தரவுப்படிக்கு
விரோதியாக நடந்தார் என்கிற ஆயாசத்தினாலே என் தோப்பனார் ஆகிய
குப்பண நாயக்கரையும், அவருடனே கூட இருந்த என் தமயன் முத்துவேல்
நாயக்கரையும் துன்மதி வருஷம் கார்த்திகை மாதம் விருப்பாட்சியில் தூக்குப்
போட்டு தெய்வகதியானார்கள்" என்று எழுதியுள்ளார்.

அதனால் பாளையக்காரர்கள் பலர் " கலம் பொருந்திய கும்பினி சர்க்காருடைய தயவுகோரி கும்பினி துரைகள் கடாட்சத்துக்குப் பாத்திரராக ஆஜரிலே காத்துக் கொண்டுள்ளேன்" என்று எழுதவேண்டிய நிலை ஏற்பட்டது.

" ஈட்டி, துப்பாக்கி, வேல், வாள், வல்லயம் போன்ற படைக் கருவிகளை குடிமக்கள் எவரும் வைத்திருக்கக் கூடாது. வைத்திருந்தால் அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படும். ஆயுதம் வைத்திருந்த குடிமக்களை வைத்திருந்தால் அந்த ஜமீன்தாரும் ஜமீனை இழந்து கம்பெனியால் தண்டிக்கப்படுவார்" என்று 27.10.1799 இல் ஜான்பானர்மென் உத்தரவிட்டார்.

பல பாளையக்காரர்கள் பயந்துகொண்டு கம்பெனி ஆட்சியை ஏற்றுக்கொண்டது மட்டுமல்ல படை உதவியும் செய்தனர். ஆய்க்குடி ஜமீன்தார்

"என்னுடைய நாளையில் மகாராசமானிய ராசஸ்ரீ ஆரிடிசு துரையவர்கள் துரைத்தனத்தில் சீரங்கப்பட்டணத்தின் பேரிலே கும்பினியாரவர்கள் தண்டு போறபோது என்னையும் என்னுடை சனத்தையும் வரச்சொல்லி உத்தரவாகியது. ஐநூறு சனம் வரை சேவகம் செய்தோம். மறுபடியும் விருப்பாட்சியான்பேரில் கும்பினியார் சண்டைக்குப்போறபோது ஐநூறு சனம் வரைக்கும் ஊழியம் செய்தோம். தட்டாகிய சிவகங்கை வெள்ளை மருதன் பேரிலே கும்பினியார் பாளையம் போறபோது என் சனம் ஐநூறு கூடப்போய் தண்டு சேவித்து உத்தரவாதம் பண்ணினேன்"

என்று எழுதியுள்ளார்.

இந்தச் சூழ்நிலையில் பார்த்தால்தான் சின்னமலை அவர்களின் தனித்தன்மையும், காட்டிய பெரு வீரமும் புலப்படும். 1800ல் கோவைப்





புரட்சிக்கு வித்திட்டு 1801ல் ஈரோடு காவிரிக்கரையிலும், 1802ல் ஓடாநிலையிலும், 1804ல் அறச்சலூரிலும் போராடி வெற்றி பெற்று 31.7.1805ல் தூக்கு மேடை ஏறிய சின்னமலை, சகோதரர்களின் வீரம் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படத்தக்கவை.)

தீரன் சின்னமலை நினைவாகப் போக்குவரத்துக் கழகம் அமைத்த, மாவட்டப் பெயர் வைத்த, ஆட்சியர் அலுவலகத்திற்குப் பெயர்வைத்த, மணிமண்டபம் கட்டிய, அஞ்சல்தலை வெளியிட்ட அனைவரும் நம் பாராட்டுக்குரியவர்கள்.

' வாழ்க சின்னமலை புகழ் '

சிவமயம்.

வீரபத்திரக்கவிராயரியற்றிய,

பழய கோட்டை

நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார்

# காதல்.

——:o:——

இதை

ராயபஹதூர்

ஸ்ரீமான் நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியாரவர்கள்

விரும்பியவாறு,

மதுரை நான்காம் தமிழ்ச்சங்கத்து வித்துவானும்,

திருச்செங்கோடு

சைவசமாஜ காரியதரிசியும்

ஆகிய

தி. அ. முத்துசாமிக் கோனரால்

பார்வையிட்டு

ஈரோடு

நித்யகல்யாணசுந்தரம் பிரஸில்

அச்சிடப்பட்டது.

1913.





உ

சிவமயம்

[illegible] பாரதியார் பாடிய

# சிவமலைக் குறவஞ்சி.

இது

பழையகோட்டைப் பட்டக்காரர்,

[illegible] ஸ்ரீமான்,

உத்தமகாமிண்ட நல்லதம்பிச் சர்க்கரை

மன்றாடியாரவர்கள்;

[illegible] பட்டக்காரர்

ஸ்ரீமான், மும்முடிக் காளைதிப் பல்லவராயரவர்கள்

சிலம்ப கவுண்டன் வலசை

ஸ்ரீமான், வெங்கடசாமிக் கவுண்டரவர்கள்

ஆகிய இவர்கள் விரும்பியபடி,

விவேக திவாகரன் பத்திராதிபர்

ஸ்ரீமான்;

தி. அ. முத்துசாமிக் கோனரவர்களால்

பரிசோதித்தது,

தமது

திருச்செங்கோடு

விவேக திவாகரன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1918.

இதன் விலை ரூ 1—0—0

உ

விநாயகன் றுணை

# கொங்கு மண்டல சதகம்

விஜய மங்கலம்

கார்மேகக் கவிஞர்

இயற்றியது

இது

திருச்செங்கோடு

விவேகதிவாகரன் பத்திராதிபர்

தி. அ. முத்துசாமிக் கோனரால்

பல கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு

ஆராய்ந்து

நூதனமாக எழுதிய உரை முதலியவற்றோடு

கொங்கு மண்டல ஊர்த்தொகை யுரையுஞ் செய்து

பழயகோட்டை

ராயபஹதூர்

ஸ்ரீமான் நல்லதம்பிச் சர்க்கரை

உத்தமக் காமிண்ட மன்றாடியாரவர்கள் விருப்பத்தின்படி

சென்னை

சாது அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது

விலை ரூபா 1-4-0

உருத்ரோத்காரி ஞு சித்திரை மீ

1923





## நன்கொடை அளித்தவர்கள்.

பழயகோட்டை மகா-ா-ா-ஸ்ரீ ராயபஹதூர் உத்தமக்காமிண்ட நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியாரவர்கள் ரூ. 100.

Dr. P. சுப்பராயன் M. A., B.C.L., LL.D., Bar-at-Law, M.L.C. 50.

கோக்கராயன்பேட்டை மிட்டா ஜமீன்தார் மகா-ா-ா-ஸ்ரீ R. கணபதிக் கவுண்டரவர்கள் ரூ. 30.

பாண்டமங்கலம் மகா-ா-ா-ஸ்ரீ வீரப்பபிள்ளையவர்கள் ரூ. 25.

## புஸ்தகங்களுக்குமுன் பணம் கொடுத்தவர்கள்.

| நாமதேயங்கள். | புத்தகம் | நாமதேயங்கள். | புத்தகம் |
|---|---|---|---|
| திருச்செங்கோடு. | | S. நஞ்சப்ப கவுண்டர் மிட்டாஜமீன் தார்சித்தளந்தூர்.. | 1 |
| ஸ்ரீ நாககிரி பண்டிதர் .... | 5 | N. நல்லப்ப கவுண்டர் மிட்டா ஜமீன் தார் மேழிப்பள்ளி ... | 1 |
| சேனாபதி குருக்கள் .... | 50 | சுப்பராய கவுண்டர் மரப்பறை மிட்டா ஜமீன் தார் ... | 1 |
| அர்த்தநாரிக் குருக்கள் .... | 5 | R. ராஜாக் கவுண்டர் காட்டுப்பாளையம் .... | 1 |
| சதாசிவ குருக்கள் .... | 1 | திருச்செங்கோடு. | |
| கணபதி குருக்கள் .... | 1 | V. V. C. R. வையாபுரி முதலியார் .... | 5 |
| மீ. சு. நாகசுந்தரக்குருக்கள். | 1 | T. V. நடேசமுதலியார் ... | 10 |
| நடராஜ குருக்கள் .... | 2 | R. K. பாலசுப்பிரமணிய முதலியார் .... | 5 |
| மூ. குலோத்துங்கவேதநாயக குருக்கள் .... | 1 | S. V. அர்த்தநாரி செட்டியார் | 2 |
| பு. சிவராம குருக்கள் .... | 1 | தே. பு. சின்னப்ப செட்டியார் | 2 |
| மா. சுந்தரக் குருக்கள் .... | 1 | வையாபுரி செட்டியார் மண்டி .... | 1 |
| கைலாச குருக்கள் ... | 1 | இரத்தினவேலு முதலியார் புரோப்ரைட்டர், ஷண்முகாபிரிண்டிங் ஹவுஸ் ... | 1 |
| குலசேகர சுப்பிரமணிய குருக்கள் .... | 10 | C. ராமுண்ணி நாயர் லோகல் பண்டு ஓவர்சியர் ... | 1 |
| T. S வெங்கட்டரமண அய்யர் பாங்கர் ... | 15 | | |
| V. T. ராமசாமி அய்யர் B. A., B. L, தருமகர்த்தா. | 1 | | |
| விட்டம்பாளையம். | | | |
| ராஜாக் கவுண்டர் .... | 5 | | |
| சேதுபதிராயலிங்ககவுண்டர்.. | 5 | | |
| சுந்தரக்கவுண்டர். தருமகர்த்தா | 1 | | |
| S. முத்துசாமி கவுண்டர் மிட்டாஜமீன்தார் புளியம்பட்டி. | 1 | | |

உ

கடவுள் துணை.

# ஒரு வேண்டுகோள்.

——:o:——

ஐயா,

நமது கொங்கு நாட்டுக்கு ஒரு சரித்திரம் வேண்டுமெனப் பல பெரியோர்கள் சொல்லி வருகிறார்கள் திருச்செங்கோடு வித்வான்—திருவாளர், தி. அ. முத்துசாமிக்கோனார் என்பவர் சுமார் 25-வருஷங்களாகச் செய்ய வேண்டுமென்று முயற்சித்து வருவதை நானும் அறிவேன். பல இடங்களுக்குச் சென்று, சிலாசாசனம், தாம்பிரசாசனம், பழய பிரபந்தங்கள் முதலியவற்றைத் தேடியும், அநுபவமுதிர்ந்த பெரியார்களிடம் கலந்தும், பார்ப்பதன் பயனாக "கொங்கு மண்டல சதகம், மங்கலவாழ்த்து, வாழி" முதலிய நூல்களும் வெளிப்படுத்தினார். " கொங்கு நாடு " என்னும் பெயரால் கொங்கு சரித்திர நூலைத், தோற்ற இயல், அரசு இயல், அடைவு இயல், ஒழுகு இயல், ஒழிபு இயல் என ஐந்து இயலனவாக 24-நாடு உபநாடுகள் இவற்றின் ஊர்கள், அங்கங்குள்ள தெய்வம்; கோயில் குள முதலியவற்றை இயற்றிய காணியாட்சியாளர் மரபு, குலம், உபகாரிகள், வித்துவான்கள், பெரியார்கள் சரித்திரங்களை ஜாதி மதபேதம் கொள்ளாமல் எழுதியிருக்கிறார்.

சில சிலாசாசனங்களையும் கொண்டு ஒப்பு நோக்கவேண்டியிருக்கிறது சமயாசாரியர்களால் பாடப்பெற்ற தலங்கள், சரித்திரசம்பந்தமான கோட்டை, கொத்தளங்களிருந்த பழய கட்டடமாதிகளும் தோன்ற ஆப்டோன் படங்களும் நிலவ, நல்ல காகிதத்தில் வெளிப்படுத்தவேண்டுமென்று கருதி என்னைச் சில முறை கேட்டுக்கொண்டார். இது அவசியமான நூல் என மனங் கொண்டு தளராது வேலை செய்யுங்கள், மூன்று மாதத்துள் இரண்டாயிரம் ரூபா முன்னின்று உதவுகின்றேன் என உறுதிவாக்களித்துவிட்டேன்.

இதற்குள் நமது நாட்டு அபிமானமுள்ள நல்லோர்கள் கொடுக்கும் தொகையுடன் என்னாலானவற்றையும் சேர்த்துப், புத்தகத்தை வெளிப்படுத்துவதாகத்தீர்மானித்துள்ளேன்; ஆகையால் புத்தகம் வெளியிடுவதற்கு உதவி செய்யக் கருத்துக் கொண்டவர்கள் தங்களாலியன்ற பொருளுதவியை என்னிடம் கொடுக்கும்படி கோருகிறேன்.

௰.10.34

இங்ஙனம்,
நல்லதம்பிச்சர்க்கரைமன்றாடியார்,
பழயகோட்டைப்பட்டக்காரர்.

ஷண்முகா பிரிண்டிங் ஹவுஸ், திருச்செங்கோடு.





*Pandit, Janab K. Abdul Shukur.*

இணையிலான் றுணை.

## நல்லதம்பிச் சர்க்கரையார்,

# நான்மணி மாலை.

காப்பு.

நேரிசை வெண்பா.

நான்மணிமா லைப்புயத்த நல்லதம்பிச் சர்க்கரைமேல்
நான்மணிமா லைப்பா நனிவிக்கும்—நான்மணிமா
மேவுநில விற்பொலியும் வேதமுக லுட்பொருளை
நாவுநில வப்புகழ்வ னன்கு.

## நூல்.

நேரிசை வெண்பா.

பொன்பூத்த நல்லதம்பிப் பூமான் புவிபுரக்க
மின்பூத்த மாமயிலே! மேவானேல்—கொன்பூத்த
நல்லரசெங் கேதவத்தி னற்றவரெங் கேதமிழின்
வல்லரசெங் கேவழுத்து வாய். 1

கட்டளைக்கலித்துறை.

வாய்மை தவறு மனத்தா லெவர்க்கும் வழங்குபவன்
றூய்மை யுறுமணிப் பாமாலை தோளிற் சுமப்பவன்காண்
சேய்மையுள் ளாரும் புகழ்நல்ல தம்பிநஞ் சீரியநற்
றூய்மை யுடைய விவன்கீர்த்தி சேடனுஞ் சாற்றுவனே? 2

அறுசீர் விருத்தம்.

சாற்றவரும் புகழ்ப்பழைய கோட்டைநகர் சந்ததமுன்
தவமே யாய்ந்து
போற்றவரும் புண்ணியமோ தவல்சைவ முஞற்றியநன்
னேன்பா னேயோ



# பழையகோட்டையில் சென்னை கவர்னர்.

## தேநீர் விருந்துபசாரம்.

### அரண்மனையில் ஆனந்தக்காட்சி.

### மாட்டுப் பண்ணைகளுக்கு கவர்னர் விஜயம்.

### வழிநெடுக கவர்னருக்கு உபசாரம்.

(நமது நிருபர்)

பழையகோட்டை அக். 19.

சென்னை கவர்னரும் லேடி எர்ஸ்கினும் இன்று பிற்பகல் இங்கு விஜயம் செய்தார்கள். கவர்னர் வருவதற்கு ஒருமணி நேரத்திற்கு முன்னமே ஜமீன்தார்களும் மிராஸ்தார்களும் தலைமை அதிகாரிகளும் வந்து கூடிவிட்டனர்.

அலங்காரம்

பழையகோட்டை பட்டக்காரர் ராயபகதூர் நல்லதம்பிசக்கரை மன்றாடியார் அரண்மனைக்கு அரை மைல் தூரத்திலிருந்தே ரஸ்தாக்களில் வளைவுகளும் தோரணங்களும் கொடிகளும் கட்டப்பட்டிருந்தன.

பெரிய கொடிகள் மரங்களின் மேல் ஆகாயத்தில் வெகு அழகாகப் பறந்து கொண்டிருந்தன.

அரண்மனைக்கு முன் கால் மைல் தூரத்திற்கு அழகிய பந்தல் போடப்பட்டிருந்தது. நொய்யல் நதிக்கரையில் இக்காட்சிக் கண்ணைக்கவரக் கூடியதாயிருந்தது.

கவர்னர் வருவதற்கு 15 நிமிடங்களுக்கு முன்னமே பிரமுகர்கள் தங்கள் தங்கள் ஆசனத்தில் வீற்றிருந்தனர். சரியாக 4-15-மணிக்கு கவர்னரும் லேடி மேஜோரி எர்ஸ்கினும் கலெக்டரும் சூப்பிரண்டெண்டும் வந்து சேர்ந்தனர்.

ஊத்துக்குளி ஜமீன்தார், சமத்தூர் ஜமீன்தார், பாரப்பாளையம் ஜமீன்தார், நடராஜநாளிங்கராயர், ஜி. டி. நாயுடு, திவான் பஹதூர் சி. எஸ். ரத்தின சபாபதி முதலியார், சம்பந்த முதலியார், டிபுடி டைரக்டர் ஆப் அக்ரிகல்ச்சரல் சி. ராமசாமி, ஜில்லா மெடிகல் ஆபீசர் சி. ரெங்கபாஷ்யம் நாயுடு, ஜில்லா வெட்டெரினரி ஆபீசர், தோழர் ஜயகரன், கோவை வைஸ் பிரசிடெண்டு தோழர் ஆர். வி. லக்ஷ்மி நாயுடு, ஈங்கூர் கந்தசாமிக் கவுண்டர், ஈரோடு ஜில்லா போர்டு வைஸ் பிரசிடெண்டு சுப்பிரமணிய கவுண்டர், ஈரோடு நகரசபைசேர்மன், லண்டன்மிஷனைச்சேர்ந்த மிஷனரிகள் ஆண் பெண் மிஷனரிகளாகியவர்களாகும். ஆண்களும் பெண்களுமாக சுமார் 80

—

பிரபலஸ்தர்கள் தேநீர்விருந்தில் கலந்துகொண்டனர்.

தேநீர் விருந்து ஸ்பென்சர் கம்பெனியாரால் உயர்ந்த முறையில் நடத்தப்பட்டது.

டீ விருந்து முடிந்ததும் லேடி எர்ஸ்கின் பட்டக்காரர் அரண்மனையிலுள்ள பெண்களோடு சிறிது நேரம் உரையாடி களித்தனர்.

மாட்டுப்பண்ணை.

5-மணிக்கு சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ள மாட்டுப் பண்ணையை பார்வையிட கவர்னர் பரிவாரம் புறப்பட்டது. அங்கும் வளைவுகளும், தோரணங்களும் கொடிகளும் கட்டப்பட்டிருந்தன. ஜனங்கள் திரள் திரளாக வழிநெடுகக் கூடியிருந்தனர்.

மொத்த மாடுகள் சுமார் 2000 காணப்பட்டன. அவைகளில் பொலி காளைகள் சுமார் 200. உழவு காளைகள் சுமார் 200 ஜோடி. குதிரைகள் சுமார் 200 மாடுகள் வயதுக்கு தகுந்தபடி பிரித்துவரிசையாக கட்டப்பட்டிருந்தது பார்க்க மிக்க அழகாயிருந்தது.

பட்டக்காரருக்குச் சேர்ந்த 14000 எக்கர் நிலத்தில் 6000 ஏக்கர் மேய்ச்சலுக்குமேல் மாடுகள் மேய்ச்சலுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

கவர்னரும் அவருடைய பரிவாரங்களும் 5-15க்கு பண்ணைக்குள் நுழைந்தார்கள். வாத்தியங்கள் முழங்கின. பட்டக்காரர் கவர்னரையும் லேடி எர்ஸ்கின் முதலியோர்களையும் அழைத்துச்சென்று மாட்டுப் பண்ணையைச் சுற்றியும் குதிரைப் பண்ணையைச் சுற்றியும் காண்பித்தார். மாலைகள் சூட்டப்பட்டபின் 6 மணிக்கு இவ்விடம் விட்டு கவர்னரும் பரிவாரங்களும் ஈரோட்டுக்கு புறப்பட்டுச்சென்றார்கள்.

கவர்னர் ஈரோட்டிலிருந்து பழையகோட்டைக்குச் செல்லுகையில் இடைவழியில் அவல்பூந்துறையிலும் அறச்சலூரிலும் கவர்னருக்கும் லேடி எர்ஸ்கினுக்கும் மாலைகள் சூட்டப்பட்டன.

1937

## ஈரோடு ஜில்லா போர்டு தலைவர்.

(நமது நிருபர்)

ஈரோடு, ஜூலை 26

ஈரோடு ஜில்லாபோர்டு தலைவர் ராவ்பகதூர் நல்லதம்பி சர்க்கரை மன்றாடியார் (பழைய கோட்டை பட்டக்காரர் அவர்கள் ஈரோடு ஜில்லாவிலுள்ள ஜனங்களின் போர்டு சம்பந்தமான குறைகளை நேரில் கேட்டு நிவர்த்திப்பதற்காகவும் ஆபீசில் வேலைகள் கவனிப்பதற்காகவும் வாரத்தில் இரண்டு நாள் அதாவது செவ்வாய் புதன் கிழமைகளில் ஈரோட்டிலுள்ள தமது பங்களாவில் தங்குகிறார். மற்ற நாட்களில் பழய கோட்டையிலேயே காரியங்களைக் கவனிப்பார்.

## தேவை.

ஜில்லா போர்டு பெண் பாடசாலைகளில் உபாத்தினி வேலைகளுக்கு போதனாமுறை பயின்று பாஸ் செய்த 6 உபாத்தினிகள் தேவை. சம்பளம் கிரேடுக்குத் தக்கபடி. வயது, பாஸ் செய்திருக்கும் பரிக்ஷைகள், முன் சர்வீஸ் இவைகளைக் குறித்து விண்ணப்பங்கள் 5—9—1937 தேதிக்குள் கீழ்க்கையொப்பமிட்டவருக்கு அனுப்பிக்கொள்ள வேண்டும்.

(ஒப்பம்) ந. நல்லதம்பி சர்க்கரை
மன்றுடியார்,
பிரசிடெண்டு, ஜில்லா போர்டு,
ஈரோடு.

ஜில்லா போர்டு ஆபீஸ்,
ஈரோடு, 20-8-1937.